அமிர்தசாகரர் இயற்றிய

# யாப்பருங்கலக்காரிகை

மூலமும்

குணசாகரர் இயற்றிய உரையும்



கழக வெளியீடு

அமிதசாகரர் இயற்றிய

# யாப்பருங்கலக்காரிகை

மூலமும்

குணசாகரர் இயற்றிய உரையும்



அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்
விரிவுரையாளராயிருந்த

நாவலர் ந மு வேங்கடசாமி நாட்டார் அவர்கள்

செய்துதந்த திருத்தங்களுடன் கூடியது





திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.

1975

69-2

# முகவுரை

தமிழ் இலக்கணம் எழுத்து, சொல், பொருள் என மூன்று பிரிவினையுடையது. இம் மூன்றுக்கும் நிலைக்களமாவன வழக்கும் செய்யுளுமாம், அவற்றின் இலக்கணங்களும் ஆசிரியர் தொல்காப்பியனாரால் பொருளதிகாரத்திற் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியச் செய்யுளியல் மிக்க விரிவுடையதே எனினும் அதிற் கூறப்பட்ட 'கட்டளையடி' முதலிய சில இலக்கணங்கள் வழக்கொழிந்தன. பிற்காலத்தே பெரு வழக்காய்ப் பயின்று வரும் பாவினங்கட்கு அதில் இலக்கணம் இல்லை.

தமிழ்ப்புலவர்கள் செய்யுளியற்றுவதில் மிக்க நாட்டமுடையராக இருந்தமையானும், செய்யுட்கள் நாடொறும் பல்கி வந்தமையானும் செய்யுளிலக்கணம் பல்வேறு புலவர்களால் தனித்தனி நூலாக இயற்றப் பட்டது. அவிநயனார், காக்கைபாடினியார், சிறுகாக்கை பாடினியார், கையனார், நத்தத்தனார், பல்காயனார், பல்காப்பியனார், மயேச்சுரனார் முதலிய புலவர் பலர் யாப்பிலக்கணம் இயற்றினர். இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளின் முன் விளங்கிய அமிதசாகரர் என்னும் ஆசிரியரால் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்னும் இருநூல்களும் இயற்றப்பட்டன. இந் நூல்களே பிற்காலத்தவர்களால் யாப்பிலக்கணப் பயிற்சிக்குச் சிறந்த கருவிகளாகக் கொள்ளப்பட்டன. இவற்றுள்ளும் பின்னதே பயிற்சி மிக்குடையது என்பதனைக் ''காரிகை கற்றுக் கவி பாடுவதில்'' என்னும் வழக்கால் அறியலாகும். யாப்பருங்கல ஆசிரியரே காரிகையும் இயற்றினராவர் என்பது, காரிகை உரையாசிரியராகிய குணசாகரரால் "யாப்பருங்கலம் என்னும் யாப்பிற்கு அங்கமாய், அலங்கார முடைத்தாகச் செய்யப் பட்டமையால் யாப்பருங்கலக்காரிகை என்னும் பெயர்த்து'' என்று கூறப்பட்டமையானும், யாப்பருங் கலவிருத்தி யாசிரியர் அந்நூற் பதினேந்தாஞ் சூத்திர வுரையில் "இந் நூலுடையாரும் மாஞ்சீர் கலியுட்புகா''

எனவும்.........விளங்கக் கூறினர் என்று உரைத்தமை யானும் பெறப்படுவதாகும். இந் நூலாசிரியர் பெயர் *'அமிதசாகரர்' என்பது, யாப்பருங்கல நூற்பாயிரத்தில் "அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே" என்று கூறப்பட்டிருத்தலாற் போதரும்; அளப்பருங் கடல்= அமித சாகரம், இவர் சமண சமயத்தவர் என்பது "கந்தமடிவில்" என்னும் கடவுள் வாழ்த்துச் செய்யு ளால் அறியப்படும்.

யாப்பருங்கலக்காரிகை மூலமும், உதாரணச் செய்யுட்களும் மாணுக்கர்கள் பாடஞ் செய்து உள்ளத்தே அமைத்துக் கோடற்கு எளியவாம்படி கட்டளைக் கலித்துறையான் இயன்றும், முதல் நினைப்புகளோடு கூடியும் விளங்குகின்றன. இந்நூல் காக்கைபாடினியத்தைப் பின்பற்றியது என்ப.

காரிகையின் பழையவுரை குணசாகரர் என்பவரால் இயற்றப்பட்டது. இந்நூற்கு யாழ்ப்பாணத்துச் சுன்னுகம் அ. குமாரசுவாமிப் பிள்ளையவர்கள் சென்ற நூற்றாண்டின் இறுதியில் புத்துரை யொன்று இயற்றி னர். காரிகை பழைய உரையுடன் வித்துவான் தேர் வுக்குப் பாடமாக வைக்கப்பெற்று வருதலின், அதனைச் செப்பமுற அச்சிடுதல் கருதிய தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் என்னைக் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவ்வுரை முழுதும் பார்த்து, உரை நடையிலும், உதாரணச் செய்யுட்களிலும் காணப் பட்ட மிகப் பலவாய பிழைகளைத் திருத்தித் தூய்மை செய்துள்ளேன். ஏனைய பதிப்புகளோடு ஒத்து நோக்குவார்க்கு இந்து எவ்வளவு திருத்தம் பெற்றுள தென்பது புலனும்.

17—10—1940
தஞ்சை

ந. மு. வேங்கடசாமி நாட்டார்

---

*பல்லாண்டுகளின்முன் 'செந்தமிழ்'த் திங்கள் வெளி யீட்டில் இப் பெயரின் உண்மையுருவம் என்னுல் வெளியிடப் பட்டது. அதன்பின் பலரால் இது போற்றிக் கொள்ளப்படுவ தாயிற்று.

# பொருளடக்கம்

## சூத்திரக்காரிகையின் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]



## உரைச் சூத்திரக்காரிகையின் முதற்குறிப்பு அகரவரிசை

# வினாக்கள்

## க. உறுப்பியல்

க. செய்யுள் உறுப்புகள் எத்தனை?

உ. வெண்டளை, கலித்தளை என்றால் என்ன?

ங. ஓரசைச்சீர், பொதுச்சீர், இயற்சீர் வெண்டளை எவ்வெச்சீரில் வரும்?

ச. யாப்பருங்கலக்காரிகைச் சூத்திரங்கள் எத்துணை?

ரு. உரையிற் காட்டப்பட்ட வேறு யாப்பிலக்கண நூல்கள் எவை?

சு. மோனை, எதுகை, முரண் இயைபு - விளக்கி உதாரணமும் தருக.

எ. பாலித்தியம், குணகாங்கியம், நீதச்சுலோகம் என்பவை யாவை; இவற்றை உரைகாரர் எற்றுக்கு எடுத்தாண்டனர்?

அ. தளை என்பது என்ன? அதன் வகைகளைக் காட்டுக.

கூ. மோனை விகற்பம், எதுகை விகற்பம், இயைபு விகற்பம் இவற்றுள் ஏதேனும் ஒன்றற்கு உதாரணம் தருக.

க0. பொதுச்சீர் - பெயர்க்காரணம் என்ன?

கக. யாப்பருங்கலக்காரிகை செய்யப்பட்டதற்குக் காரணமும் அதைக் கற்பதனால் உண்டாகும் பயனும் எவை?

கஉ. ஒன்றிய தளைகளும் ஒன்றாத்தளைகளும் எவ்வெச்சீர்களின் சந்திப்பால் பிறக்கின்றன?

கங. ஐவகை அடிகள் எங்ஙனம் வருமென்று கூறி ஏதாவது இரண்டடிகட்கு எடுத்துக்காட்டுந் தருக.

கச. அசைக்கு உறுப்பாவன எவை?

கரு. நேரசை, நிரையசை என்பவற்றை விளக்குக.

கசு. இயற்சீர் என்றால் என்ன? அதற்கு வழங்கும் வேறு பெயர்கள் என்ன?

கஎ. காய்ச்சீர் நான்கு வரும் குறள்வெண்பா ஒன்று எழுதுக.

கஅ. நாலசைச்சீர் என்றால் என்ன? இதற்குள்ள பெயர் யாது? விளக்குக.

ககூ. நான்கு பாக்களுக்கும் உரிய அடியின் சிறுமையும், பெருமையும் குறிக்க.

உ0. தொடைகள் இவை என்று எழுதி உதாரணந் தந்து விளக்குக.

உக. கூழை, மோனை, அடி இயைபு இவற்றை விளக்கி உதாரணந் தருக.

உஉ. செந்தொடை, இரட்டைத்தொடை இவற்றை உதாரணத்துடன் விளக்குக.

உக. பொழிப்பளபெடை, கூழையளபெடை, முற்றளபெடை—இவற்றிற்கு உதாரணந் தருக.

உச. யாப்பருங்கலக்காரிகை நூலாசிரியர் யார்? இப்பெயர் காரணக்குறியாதலை விளக்குக.

உரு. இந் நூலைப்பற்றிய பழமொழி யாது? அதன் பொருள் என்ன?

உசு. "கடையயல், முதலயல், கதுவாய் கீழ்மேல்"—இதை ஒத்த காரிகைப் பகுதியை எழுதுக.

உஎ. காரிகைச் செய்யுள் ஒவ்வொன்றும் எத்தனை கிரந்தம் கொண்டது? கிரந்தம் என்றால் என்ன?

உஅ. ஆசிரியர் அவையடக்கத்தில் கூறும்பொருளைத் தருக.

உகூ. ஆசிரிய உரிச்சீர் எவை? இவற்றோடு எவ்வகை சேர்ந்து வெண்சீர் ஆகும்?

௩0. நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்றாசிரியத்தளை—விளக்குக.

௩க. பலவகை மோனைகளையேனும், எதுகைகளையேனும் உதாரணத்துடன் விளக்குக.

௩உ. அடிமுரண்தொடை, அந்தாதித்தொடை இவற்றை விளக்குக.

## உ. செய்யுளியல்

க. பாக்களின் வகை எவை? அவற்றின் அடிகளும் ஒலிகளும் என்ன?

உ. துள்ளலோசை, தூங்கலோசை—இவற்றின் விகற்பங்களை எடுத்தெழுதுக.

௩. ஒழுகிசையகவல், ஏந்திசைச் செப்பல்—இவற்றை விளக்கி உதாரணமும் தருக.

ச. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா—இம் முறைவைப்புக் காரணம் தருக.

ரு. நேரிசை வெண்பாவின் இலக்கணம் தந்து அதன் வகைகளையும் விளக்குக.

சு. இன்னிசை வெண்பா என்றால் என்ன? இன்னிசைச் சிந்தியல் வெண்பாவிற்கு உதாரணம் தருக.

எ. குறட்டாழிசை, வெண்செந்துறை—இவற்றை உதாரணங்களுடன் விளக்குக.

அ. வெளி விருத்தம், வெண்துறை—இவற்றை விளக்குக.

௯. வெள்ளொத்தாழிசை—இதற்கு உதாரணந் தருக.

௧0. ஆசிரிய இனங்கள் எவை? ஆசிரிய விருத்தத்துள் குறைந்த சீர்கள் எத்துணை? மிகுந்த சீர்கள் எத்துணை?

௧௧. கலித்துறைக்கும், கலி விருத்தத்துக்கும் வேறுபாடு என்ன?

௧௨. வஞ்சித்துறைச் செய்யுளொன்று தருக.

௧௩. வஞ்சிவிருத்தத்தின் இலக்கணம் என்ன? உதாரணமும் கொடுக்க.

௧௪. மருட்பா என்றால் என்ன? அதன் வகைகள் எவை?

௧௫. ஐவகை வெண்பா, அறுவகைப்பா, நால்வகையகவல், மூவகைக் கலிப்பா—இவையிவையென்று எழுதுக.

௧௬. கொச்சகக்கலிப்பா—எத்தனை வகைத்து?

௧௭. வண்ணகம், அம்போதரங்கம், நேரடி—இவற்றிற்கு ஒவ்வொரு பரியாயப் பெயர் கூறுக.

௧௮. அடிமறி மண்டிலம், கலிவிருத்தம், வெண்செந்துறை இவற்றை விளக்குக.

௧௯. கலிஅடியிலும் கலிப்பாவிலும் எவ்வெச்சீர்கள் வாரா?

௨0. பஃறொடை வெண்பா என்றால் என்ன? இதன் அடிச் சிறுமையும், பெருமையும் யாவை?

௨௧. குறள் வெண்பாவின் இனங்கள் எவை?

௨௨. 'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை'

இஃது எவ்வகைப் பாவென்று உணர்த்திக் காரணம் காட்டுக.

௨௩. அடிமறி மண்டில வாசிரியப்பாவிற்கு எடுத்துக் காட்டுத் தருக.

௨௪. மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவின் உறுப்புகள் எவை?

௨௫. சுரிதகப் பாட்டொன்றின் பொருளைத் தருக.

## ௩. ஒழிபியல்

௧. சீர் சிதைவுழிக் குற்றியலிகரம் அலகு பெறுமைக்கு உதாரணம் தருக.

௨. 'ஆரும் அறிவர் அலகுபெறுமை' என்று மிகுத்துச் சொல்லியதனால் பெறப்படுவன என்ன?

௩. ''குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.''

இதனை அலகிட்டுப் பொருந்துமாற்றை விளக்குக.

௪. உயிரளபெடை அலகு பெறுமைக்கு உதாரணந் தந்து விளக்குக.

௫. 'ஒட்டப்படா' என்று மிகுத்துச் சொல்லியதனன் உணரப்படுவன என்ன? விட்டிசைத்தல் எவ்வைந்தன் கண்ணும்? இரண்டினுக்கு உதாரணம் தருக.

௬. வெண்பாவில் வஞ்சியுரிச்சீர் புகப்பெறுமா? பெறின் என் ஆம்?

௭. "வளர்கொடியன மணம்விரிவன மல்லிகையொடுமௌவல்
நளிர்கொடியன நறுவிரையன நகுமலரன வகுளம்
குளிர்கொடியன குழைமாதவி குவிமுகையன கோங்கம்
ஒளிர்கொடியன வுயர்தளிரினெ டொழுகிணரன வோடை"

—இஃது என்ன பா? இவற்றுள் எச்சீரும் தளையும் மயங்கி வந்துள்ளன?

௮. 'வஞ்சி மருங்கின் எஞ்சா அகவல், கலிப்பாதமும் கண்ணும்'—பொருள் என்ன? 'எஞ்சா அகவல்' என்றதனன் பெறப்படுவது என்ன?

௯. கலிப்பாவிலும் ஆசிரியப்பாவிலும் ஐஞ்சீரடி வருவ தற்கு உதாரணம் தருக.

௧௦. 'வருக்க நெடிலினம் வந்தா லெதுகையு மோனையுமென் றொருக்கப் பெயரா லுரைக்கப்படும்' என்பதை நன்கு விளக்குக.

௧௧. தரவு தாழிசைகட்கு அடிவரையறையாமாறு உணர்த்தும் காரிகையை எழுதுக.

௧௨. கூன் என்றால் என்ன? நிற்கும் இடங்களைப் பற்றிக் குறிக்க.

௧௩. வனப்பெட்டு, அடி ஐந்து, தொடைநாற்பதின்மூன்று, ஐந்து பா; சீர் முப் .து—விளக்குக.

௧௪. கட்டளைக்கலிப்பா, அல்லது கட்டளைக்கலித் துறையின் இலக்கணத்தை எழுதி உதாரணமுந் தருக.

௧௫. தோல், இயைபு, புலன்—விளக்குக.

௧௬. பூட்டுவிற்பொருள்கோள்-விளக்கி உதாரணந் தருக.

௧௭. அடியின்றி நடப்பன எவை?

௧௮. ஆநந்தக் குற்றமென்றால் என்ன? சொல்லாநந்தம் —உதாரணத்துடன் விளக்குக.

௧௯. இணைமோனையின் வகை எவை? இடையாகு எதுகை, ஆசெதுகை—விளக்கி உதாரணந் தருக.

௨௦. அணு என்றால் என்ன? எவை அணுவாம்?

உ

திருச்சிற்றம்பலம்

# யாப்பருங்கலக்காரிகை

## மூலமும் உரையும்

---

### தற்சிறப்புப் பாயிரம்

கந்தம் மடிவில் கடிமலர்ப் பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி ஏத்தி எழுத்தசைசீர்
பந்தம் அடிதொடை பாவினங் கூறுவன் பல்லவத்தின்
சந்தம் மடிய அடியான் மருட்டிய தாழ்குழலே. (க)

என்பது காரிகை நூலுரைக்குமிடத்து நூற்பெயரும், காரணமும், ஆக்கியோன் பெயரும், அளவும், பயனும் [1]எடுத்துரைக்கற்பாற்று.

அற்றேல், இந்நூல் என்ன பெயர்த்தோ வெனின் [2]பாளித்தியம் என்னும் பாகத இலக்கணமும், பிங்கலம் என்னும் சந்தோபிசிதமும் போலக் காரிகை யாப்பிற்றாய், குணகாங்கியம் என்னும் கருநாடகச் சந்தமேபோல மகடூஉ முன்னிலைத்தாய், அவையடக்கமும் உடையதாய், மயேச்சுரர் யாப்பேபோல உதாரணம் எடுத்தோதி இசைத்தமிழ்ச் செய்யுள் துறைக் கோவையே போலவும் அருமறையகத் தட்டகவோத்தின் வருக்கக் கோவையே போலவும் உருபாவதாரத்திற்கு நீதகச் சுலோகமே போலவும் முதனினைப்

---

(பாடம்) 1. உரைத்துரைக்கற்பாற்று. 2. பாளித்தியமும், பாதவிலக்கணமும், பிராகிருதம் என்பதன் திரிபு.

புணர்த்திய இலக்கியத்ததாய், வேதத்திற்கு நிருத்தமும், வியாகரணத்திற்குக் காரிகையும், அவிநயர் யாப்பிற்கு நாலடி நாற்பதும்போல, யாப்பருங்கலம் என்னும் யாப்பிற்கு அங்கமாய, அலங்காரம் உடைத்தாகச் செய்யப்பட்டமையால் 'யாப்பருங்கலக்காரிகை' யென்னும் பெயர்த்து.

இந்நூல் யாது காரணமாகச் செய்யப்பட்டதோ எனின், பண்டையோர் உரைத்த தண்டமிழ் யாப்பிற் கொண்டிலாத குறியீனுரைக் குறிக்கொளுவுதல் காரணமாகவும், தொல்லைப் பனுவல் துணிபொருள் உணர்ந்த நல்லவையோரை நகுவிப்பது காரணமாகவும் செய்யப் பட்டது.

இந்நூல் யாவராற் செய்யப்பட்டதோவெனின், ஆரிய மென்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமித சாகரர் என்னும் ஆசிரியராற் செய்யப்பட்டது.

இந்நூல் எவ்வளவைத்தோ எனின், இயல் வகையால் மூன்றும், காரிகை வகையால் நாற்பத்துநான்கும், கிரந்த வகையால் தொண்ணூறு கிரந்தமும், இருபத்தெட்டெழுத் தும் எனக் கொள்க. அவற்றுள், ஒரு கிரந்தமாவது ஒற்றொழித்து உயிரும் உயிர்மெய்யுமாகிய முப்பத்திரண் டெழுத்தாமெனக் கொள்க. அவற்றுள், நேரசை முத லாகிய காரிகை இருபத்தொன்றும், நிரையசை முதலாகிய காரிகை இருபத்துமூன்றுமெனக் கொள்க.

நேரசை முதலாகிய காரிகை ஒன்றினுக்கு எழுத்து அறுபத்துநான்கும், நிரையசை முதலாகிய காரிகை ஒன்றி னுக்கு எழுத்து அறுபத்தெட்டுமெனக் கொள்க. இவ்விரு திறமுங் கூடி உறழ இரண்டாயிரத்துத் தொளாயிரத் தெட்டு எழுத்தாமெனக் கொள்க.

நேரசை முதலாகிய காரிகை ஒற்றொழித்து ஓரடிக் கெழுத்துப் பதினாறும், நிரையசை முதலாகிய காரிகை ஒற்றொழித்து ஓரடிக் கெழுத்துப் பதினேழுமெனக் கொள்க.

என்னை,

"அடியடி தோறும் ஐஞ்சீ ராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
கடைஒரு சீரும் விளங்காய் ஆகி
நேர்பதி னாறே நிரைபதி னேழென்
றோதினர் கலித்துறை ஓரடிக் கெழுத்தே"

என்றாராகலின்.

இந்நூலாற் பயன் யாதோ எனின், யாப்பாராய்தல் பயன்.

யாப்பு ஆராயவே பா, தாழிசை, துறை, விருத்தங்களால் ஆக்கப்பட்ட அறம் பொருள் இன்பம வீடு எனனும் அவற்றின மெய்ம்மை யறிந்து விழுபபமெய்தி, இம்மை, மறுமை வழுவாமல் நிகழவாராதலின், இருமைக்கும் உறுதிபயப்பது யாபபெனக் கொள்க.

யாப்பெனினும், பாட்டெனினும், தூக்கெனினும், தொடர்பெனினும, செய்யுளெனினும ஒக்கும்.

"யாப்பும்
தூக்கும் பாட்டும் தொடர்பும் செய்யுளை
நோக்கிற் றென்ப[1] நுணங்கி யோரே"

என்றாராகலின்.

இந்நூல், உறுப்பியலும், செய்யுளியலும், ஒழிபியலும் என மூவகைப்படும். அவற்றுள், இவ்வியல் என்ன பெயர்த்தோ எனின், எழுத்தும் அசையும சீரும் தளையும் அடியும் தொடையும் என்னும் ஆறு உறுபபினையும் உணர்த்திற்றதலான் உறுபபியலென்னும் பெயர்த்து.

இவ்வியலுள் இத்தலைக் காரிகை என்னுதலிற்றோ வெனின், தற்சிறப்புப் பாயிரம் உணர்த்துதல் நுதலிற்று.

என்னை,

"வணக்கம் அதிகாரம் என்றிரண்டுஞ் சொல்லச்
சிறப்பென்னும் பாயிர மாம்"

---

(பாடம்) 1. நுணங்கிசி னோரே.

"தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த உரைப்பது தற்சிறப் பாகும்"

என்றாராகலின்.

இக் காரிகையின் பொருள்:

'கந்தம் மடிவில் கடிமலர்ப் பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி ஏத்தி'

கந்தம் என்பது நறு நாற்றம், மடிவு என்பது கேடு, இல் என்பது இல்லாமை, கடி என்பது மிகுதி, மலர் என்பது பூ; பிண்டி என்பது அசோகு, கண் என்பது இடம், ஆர்தல் என்பது நிறைதல், நிழல் என்பது சாயை, கீழ் என்பது பக்கம், [1]எம்மும் தம்மும் இடைச்சொல், அடிகளாவார் சுவாமிகள், இணை அடி ஏத்தி என்பது துணையான சீர்ப்பாதங்களை வாழ்த்தி என்றவாறு.

'எழுத்தசைசீர், பந்தம் அடிதொடை பாவினங் கூறுவன்'

எழுத்தென்பது உயிரும் உயிர்மெய்யும் அளபெடையும் உள்ள எழுத்துப் பதின்மூன்றினையும், அசை என்பது அவ்வெழுத்துக் கூடின நேரும் நிரையும் ஆகிய அசையிரண்டினையும், சீர் என்பது அவ்வசை கூடின சீர் முப்பதினையும், பந்தம் என்பது அச் சீர் கூடின தளை எழினையும், அடி என்பது அத்தளை கூடின அடி ஐந்தினையும், தொடை என்பது அவ்வடி கூடின தொடை நாற்பத்து மூன்றினையும், பா என்பது அத் தொடை கூடின பா ஐந்தினையும், இனம் என்பது அப் பாக் கூடின இனம் மூன்றினையும்,— கூறுவன் என்பது இவ்வெட்டினையும் ஆம்படியைச் சொல்லுவன் என்றவாறு

'பல்லவத்தின், சந்தமடிய அடியாள் மருட்டிய தாழ்குழலே'

பல்லவம் என்பது தளிர், சந்தம் என்பது நிறம், மடிய என்பது கெட என்றவாறு. அடியாள் என்பது

---

1. எம் அடிகள் என இயைத்து, தம் என்பது இடைச்சொல் என்றல் பொருந்தும்.

பாதத்தால் என்றவாறு. மருட்டிய என்பது மயக்கிய என்றவாறு. தாழ்குழல் என்பது தாழ்ந்த குழலினையுடையாள் என்றவாறு.

பொழிப்புரை:

முருகு விரியும் மொய்ம்மல ரசோகின் கீழிருக்கும் அருகனது அடி வணங்கி எழுத்தும், அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும், பாவும், பாவினமும் ஆமாறுரைப்பன், தளிர் புரையுஞ் சிறு மெல்லடித் தகைநெடுங் குழற் றையலாய் என்றவாறு.

என்னை,

"பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப்
பிண்ட மாகக் கொண்டுரைப் பதுவே"

என்றாராகலின்.

'கந்தமடிவில் இணையடி யேத்தி' என வணக்கஞ் சொல்லப்பட்டது. 'எழுத்து......இனங் கூறுவன்' என அதிகாரங் கூறப்பட்டது.

எனனை,

"வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து
மங்கல மொழிமுதல் வகுத்து
எடுத்துக் கொண்ட இலக்கண இலக்கியம்
இடுக்கண் இன்றி இனிது முடியும்"

என்பவாகலின் ஈண்டு வணக்கஞ் செய்யப்பட்டது.

இனி, எழுத்து முதலாகிய எட்டனையும் காரணக்குறியான் வழங்குமாறு.

என்னை,

"எழுதப் படுதலின் எழுத்தே; அவ்வெழுத்
தசைத்திசை கோடலின் அசையே; அசையியைந்து
சீர்கொள நிற்றலிற் சீரே; சீரிரண்டு
தட்டு நிற்றலின் தளையே; அத்தளை

அடுத்து நடத்தலின் அடியே; அடியிரண்டு
[1]தொடுத்தன் முதலாயின தொடையே; அத்தொடை
பாவி நடத்தலிற் பாவே பாவொத்து
இனமா நடத்தலின் இனமெனப் படுமே"

என வரும்.

பந்தமெனினும், தளை யெனினும் ஒக்கும்.

என்னை,

[2]"பகுத்தெதிர் நிற்றலிற் பந்தந் தளையென
வகுத்தனர் மாதோ வண்டமி ழோரே"

என்றாராகலின்.

'பல்லவத்தின் சந்தம் மடிய அடியால் மருட்டிய தாழ் குழலே' என்பது மகடூஉ முன்னிலை. ஏகாரம் ஈற்றசை.

## அவையடக்கம்

**தேனார் கமழ்தொங்கல் மீனவன் கேட்பத்தெண் ணீரருவிக்**
**கானார் மலயத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ்நூல்**
**யானா [3]நடாத்துகின் றேனென் றேனக்கே நகைதருமால்**
**ஆனா அறிவின் அவர்கட்கென் னாங்கொலென்[4] ஆதரவே.**
(௨)

இக் காரிகை நூலினது பெருந்தன்மையும், ஆசிரியரது பெருந்தன்மையும், தனதுள்ளக் குறையும் உணர்த்திய முகத்தான் அவையடக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

(இதன் பொருள்) தேன் நிறைந்த மணங் கமழ்கின்ற வேப்பமாலையைத் தரித்த பாண்டியன் கேட்க, தெளிந்த அருவி நீரையுடைய சந்தனச்சோலை சூழ்ந்த பொதிய மலையில் எழுந்தருளி யிருக்கின்ற அரிய தவத்தினையுடைய முதலாசிரியராகிய அகத்திய முனிவரால் அருளிச் செய்யப் பட்ட அழிவின்றி நிலைபெற்ற முத்தமிழுள், இயற்றமி

---

1. (பாடம்) தொடுத்துமன் சேறலின்.

2. பகுத்தெதிர் நிற்றல் என்பது பந்தம், தளை என்னும் பெயர்கட்குப் பொருந்துவதன்று.

3. யான் நா எனப் பிரித்து யானும் என உம்மை சேர்க்க.

4. (பாடம்) ஆதரமே.

மின் கூறுகிய யாப்பிலக்கண நூலை, யானும் அவாவினால் எனது புல்லிய நாவைக்கொண்டு சொல்லத் தொடங்கினேன். இஃது அறிவிலியாகிய எனக்கு நகையினை விளைக்குமாயின் குறைவில்லாத அறிவினை உடையவர்க்கு யாதாகுமோ! எ - று.

ஏ: அசை நிலை. இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'யானு நடாத்துகின்றேன்' என்பதற்கு வேறு பொருள் கூறுவாருமுளர்.

சுருக்கமில் கேள்வித் துகள்தீர் புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு ளாம்பனி மாலிமயப்
பொருப்பகஞ் சேர்ந்தபோல் லாக்கருங் காக்கையும்
பொன்னிறமாய்
இருக்குமென் றிவ்வா றுரைக்குமன் றேஇவ் விருநிலமே.
(ங)

இ - கை. புலவரது சிறப்புணர்த்திய முகத்தான் அவையடக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ - ள்.) பனி தோய்ந்த நெடிய இமயவரையிடத்தைச் சேர்ந்த இழிவாகிய கரிய காக்கைப் புளளும் பொன்னிறமுற்றிருக்குமென்று பரந்த இவவுலகத்தவர் சொல்வர். இவ்வாறே குற்றந் தீர்ந்த அளவில்லாத நூற்கேள்வியையுடைய புலவருக்குமுன யான் கூறிய சிறப்பில்லாத பிண்டப பொருளும் சிறந்த நுண்பொருளாம்; எ - று.

அன்று, ஓ, ஏ: அசைநிலை.

தற்சிறப்புப்பாயிரம் முற்றும்.

———

## ௧. உறுப்பியல்

### 1. எழுத்து

#### அசைக்கு உறுப்பாகும் எழுத்துக்கள்

குறில்நெடில் ஆவி குறுகிய மூவுயிர் ஆய்தமெய்யே
மறுவறு மூவினம் மைதீர் உயிர்மெய் மதிமருட்டும்
சிறுநுதற் பேரமர்க் கட்செய்ய வாயைய நுண்ணிடையாய்
அறிஞர் உரைத்த அளபும் அசைக்குறுப் பாவனவே. (௪)

இ-கை. மேலதிகாரம் பாரித்த எட்டனுள் அசைக்குறுப் பாம் எழுத்துக்களது பெயர் வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

#### ௧. குறில்

(இ-ள்.) குறில் என்பது குற்றெழுத்து:—அ, இ, உ, எ, ஒ என விவை.

என்னை,

[1]"அ இ உ, எ ஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப"

என்றாராகலின்.

#### ௨. நெடில்

நெடிலென்பது நெட்டெழுத்து:—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என விவை.

என்னை,

[2]"ஆஈ ஊ, ஏஐ ஓ ஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப"

என்றாராகலின்.

#### ௩. ஆவி - உயிர்

ஆவி என்பது உயிரெழுத்து:—அவை அகாமுதல் ஔகார மீறாய்க் கிடந்த பன்னிரண்டெழுத்து மெனக் கொள்க.

---

1. தொல். எழுத்து, நான்மரபு ௩. 2. தொல். எழுத்து, நான்மரபு. ௪.

என்னை,

[1]"அகர முதல் ஔகார இறுவாய்ப்
பன்னீ ரெழுத்தும் உயிரென மொழிப"

என்றாராகலின்.

ஆவி எனினும், 'உயிர்' எனினும் ஒக்கும். என்னை?

"ஆவி தானே உயிரெனப் படுமே"

என்றாராகலின்.

## ௪, ரு, சு. குறுகிய மூவுயிர்

குறுகிய மூவுயிராவன:—குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரக் குறுக்கமும் என விவை. இவை மேலே சொல்லுதும்.

## எ. ஆய்தம்

ஆய்தம் என்பது அஃகேனம். அஃகேனம் எனினும், ஆய்தம் எனினும், தனிநிலை எனினும், புள்ளி எனினும், ஒற்றெனினும் ஒக்கும்.

என்னை,

"அஃகேனம் ஆய்தம் தனிநிலை புள்ளி
ஒற்றிப் பால ஐந்தும் இதற்கே"

என்றாராகலின்.

வரலாறு:—எஃகு — கஃசு—கஃடு—கஃது — கஃபு — கஃறு என வரும்.

என்னை,

[2]"குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே"

என்றாராகலின்.

## அ. மெய்

இனி மெய்யாவன:—ககர முதல் னகரமீறாய்க் கிடந்த பதினெட்டெழுத்தும் எனக் கொள்க.

---

1. தொல். எழுத்து, நூன்மரபு - அ.
2. ,, மொழிமரபு - ௩.

என்னை,

[1]"னகார இறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப"

என்றாராகலின்.

மெய்யெனினும், உடம்பெனினும், உறுப்பெனினும், ஒற்றெனினும், புள்ளியெனினும் ஒக்கும்.

என்னை,

[1]"மெய்யுடம் புறுப்பொற் றிவைதாம் ஒருபொருட்
செய்யும் என்று செப்பினர் புலவர்"

[2]"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்"

[3]"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்"

[4]"மெய்யுயிர் நீங்கின் தன்னுரு ஆகும்"

என்றாராகலின்.

ஏகாரம் எண்ணேகாரம்.

என்னை,

[5]"எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலும் என்மனார் புலவர்"

என்றாராகலின்.

### ௯, ௧௦, ௧௧. மூவினம்

மூவினமாவன:—வல்லினம் மெல்லினம் இடையினம் என விவை. வல்லினமாவன: க, ச, ட, த, ப, ற. மெல்லினமாவன: ங, ஞ, ண, ந, ம, ன. இடையினமாவன: ய, ர, ல, வ, ழ, ள.

---

1. தொல். எழுத்து. நூன்மரபு-௯. 2. தொல். எழுத்து. நூன்மரபு - ௧௫. 3. தொல். எழுத்து, மொழி மரபு - ௧௩. 4. தொல். எழுத்து, புணரியல் - ௩௭. 5. தொல். சொல், இடையியல் - ௨௦.

என்னை,

[1]"வல்லெழுத் தென்ப கசட தபற"

[2]"மெல்லெழுத் தென்ப ஙஞண நமன"

[3]"இடையெழுத் தென்ப யரல வழள"

என்றாராகலின்.

'மறுவறு மூவினம்' என்று சிறப்பித்த வதனால், அவை உயிர்மெய்யாகிய காலத்தும், அப பெயரானே வழங்கப்படுமெனக் கொள்க.

என்னை,

"விதப்புக் கிளவி வேண்டுவது விளைக்கும்"

என்றாராகலின்.

## கஉ. உயிர்மெய்

உயிர்மெய்யாவன: உயிரும் மெய்யுங் கூட்டி உச்சரிக்கப் படாநின்ற பன்னிரு பதினெட் டிருநூற்றொருபத்தா றெழுத்தும் எனக் கொள்க.

என்னை,

"உயிரீ ராறே மெய்ம்மூ வாறே
அம்மூ வாறும் உயிரொ டுயிர்ப்ப
இருநாற் றொருபத் தா றுயிர் மெய்யே"

[4]"புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமொ டுயிர்த்தலும்
ஏனை உயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே"

---

1. தொல். எழுத்து, நூன்மரபு - கக. 2. தொல். எழுத்து, நூன்மரபு - உ௦. 3. தொல். எழுத்து, நூன்மரபு - உக. 4. தொல். எழுத்து, நூன்மரபு - கஎ.

[1]"மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே"

என்றாராகலின்.

'மைதீ ருயிர்மெய்' என்று சிறப்பித்த வதனால் ஏறிய உயிரினளவே உயிர்மெய்க்கும் அளவெனக் கொள்க.

என்னை,

"உயிர்மெய்க் களவு முயிரள வென்ப"

என்றாராகலின்.

'மதி மருட்டும்....நுண்ணிடையாய் என்பது மகடூஉ முன்னிலை.

என்னை,

வெண்பா

[2]"இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும் என்றும்
அடங்காதார் என்றும் அடங்கார்—தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்தடினும்
கைப்பறு பேய்ச்சுரையின் காய்"

எனப் பிறரும், 'தடங்கண்ணாய்' என்று மகடூஉ முன்னிலை சொன்னா ருளரெனக் கொளக.

மதி என்பது ஈண்டுப் பிறை; அஃது,

[3]"இருகோட் டொருமதி யெழிற்பெற மிலைச்சினை"

என்றாற்போலக் கொள்க. அல்லதூஉம் அறிவினை மயக்குஞ் சிறுநுதல் முதலாகிய உறுப்புகளை யுடையா யென்றுமாம்.

கரு. அளபெடை

'அறிஞர் உரைத்த அளபுக்' என்பது புலவராற் சொல்லப்பட்ட அளபெடைகளும் எ - று.

அளபெனினும், அளபெடையெனினும், புலுதமெனினும் ஒக்கும்.

---

1. தொல். எழு. நான்மரபு - கஅ. 2. நாலடியார், மெய்ம்மை - க. 3. நக்கீரர் திருவெழுகூற்.

என்னை,

"அளபெ புலுத மாயிரு பெயரும்
அளபெடை யென்ப அறிந்திசி னோரே"

என்றாராகலின்.

அவை போக்கிச் சொல்லுதும்.

'அசைக் குறுப்பாவன' என்பது இப் பதின்மூன்றும் இறத்தெழுத்தும் அசைக்குறுப்பாம எழுதது எ - று.

"குறில்நெடில் அளபெடை உயிருறுப் புயிர்மெய்
வலிய மெலிய இடைமையோ டாய்தம்
இ-உ-ஐ யென் மூன் றன் குறுக்கமோ
டப்பதின் மூன்றும் அசைக்குறுப் பாகும்"

என்றார் காக்கைபாடினியாரும் எனக் கொள்க.

ஏகாரம் ஈற்றசை; தேற்றமெனினும் அமையும்.

என்னை,

[1]"தேற்றம் வினவே பிரிநிலை யெண்ணே
ஈற்றசை யிவ்வைந் தேகா ரம்மே"

என்றாராகலின்.

இனி, மூவுயிர்க் குறுக்கமும் அளபெடைகளும் ஆமாறு சொல்லுதும.

அவற்றுள், குற்றியலுகரம் வருமாறு :—

## 1. குற்றியலுகரம்

[2]நெடிற் கீழும், நெடிலொற்றின கீழும், குறிலிணைக் கீழும், குறிலிணை யொற்றின கீழும, குறினெடிற் கீழும்

---

1. தொல். சொல். இடையியல் - கூ.

2. ஈற்றுக்கு அயல் அசையை நோக்கி இங்ஙனம் ஏழிடம் கொள்ளப்பட்டன என்றறிக. எவ்வாறெனின் குறில் தனித்தும், ஒற்றடுத்தும் நெடில் தனித்தும், ஒற்றடுத்தும் வரும் நேரசை நான்கும்; குறில் இணைந்தும் ஒற்றடுத்தும் குறில் நெடில் இணைந்தும் ஒற்றடுத்தும் வரும் நிரையசை நான்குமாகிய எட்டினுள், குறில் தனித்து வருதலொழிந்த மற்றை ஏழு அசைகளும் ஈற்றுக்கு அயலில் வருதலை நோக்கிக் கொள்ளப்பட்டன என்க.

குறினெடி லொற்றின் கீழும், குற்றொற்றின் கீழும் எனறிவ் வேழிடத்தும் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து உகரம் வந்தால், அது குற்றியலுகர மென்று வழங்கப்படு மெனக் கொள்க.

என்னை,

"நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்
றேழ்குற் றுகரக் கிடனென மொழிப"
"எழுவகை இடத்துங் குற்றிய லுகரம்
வழுவின்றி வரூஉம் வல்லா றூர்ந்தே"[1]

என்றாராகலின்.

வருமாறு: நாகு-காசு-காடு-காது-காபு-காறு எனநெடிற் கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

நாக்கு - காச்சு - காட்டு - காத்து - காப்பு - காற்று என நெடிலொற்றின் கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றிய லுகரம் வந்தவாறு.

வரகு-முரசு-முருடு - மருது-துரபு-கவறு எனக் குறிலிணைக் கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

அரக்கு-பொரிச்சு-தெருட்டு-குருத்து-பொருப்பு-சிரற்று எனக் குறிலிணை ஒற்றின்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

அசோகு-பலாசு-மலாடு-கெடாது-புதாபு-விராது எனக் குறில் நெடிற்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

தமாக்கு-தடாச்சு-பறட்டு-கடாத்து-புதாப்பு-விராற்று எனக் குறில் நெடில் ஒற்றின்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

அக்கு-கச்சு-கட்டு-கத்து-கப்பு-கற்று எனக் குற்றொற்றின் கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு காண்க.

இனிக் குற்றியலுகரம் அறுவகைப்படும் என்பாரு முளர். அவையாவன: ஈரெழுத்தொருமொழி, உயிர்த் தொடர்மொழி, இடைத்தொடர் மொழி, ஆய்தத்தொடர்

1. பல்காயம்.

மொழி, வன்றொடர் மொழி, மென்றொடர் மொழி என்றிவை.

என்னை,

[1]"ஈரெழுத் தொருமொழி உயிர்த்தொடர் இடைத்தொடர்
ஆய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொடர்
ஆயிரு மூன்றே உகரங் குறுகிடன்"

என்றாராகலின்.

## 2. குற்றியலிகரம்

இனிக் குற்றியலிகரம் வருமாறு:—உகரந் திரிந்தும் திரியாதும் யகரமோ டியைபின்கண் வந்த இகரம் குற்றியலிகரம் என்று வழங்கப்படும்.

என்னை,

[2]"வல்லெழுத் தாறு டெழுவகை யிடத்தும்
உகரம் அரையாம் யகரமோ டியையின்
இகரமுங் குறுகும் என்மனர் புலவர்"

[3]"யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது"

என்றாராகலின்.

வ-று: நாகியாது - காசியாது - காடியாது - காதியாது - காபியாது - காறியாது என வரும்.

ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக் கொள்க.

இனித் திரியாது வந்த குற்றியலிகரம் வருமாறு:

கேண்மியா, சென்மியா எனக் கொளக.

என்னை,

[4]"குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வருஉம் மகரம் ஊர்ந்தே"

என்றாராகலின

1. தொல், எழுத்து, குற்றியலுகரப் புணரியல் - க.

2. இஃது அவிநயச் சூத்திரம் என்பது யாப்பருங்கல விருத்தி உஎ ஆம் பக்கத்திற் காண்க. 3. தொல். எழுத்து குற்றிய லுகரப் புணரியல் - ரு. 4. தொல். எழுத்து, மொழிமரபு - க.

## 3. ஐகாரக்குறுக்கம்

இனி ஐகாரக் குறுக்கம வருமாறு :—

அளபெடுத்தற்கண்ணும், தனியே சொல்லுதற்கண்ணும் அன்றி அல்லாதவழி வந்த ஐகாரம் தன்னளவிற் சுருங்கி ஒன்றரை மாத்திரையும், ஒரு மாத்திரையுமாகக் குறுகுமெனக் கொள்க. அவை குறுமிடத்து, மொழி முதலிடை கடையென மூன்றிடத்துங் குறுகும்.

என்னை,

[1]"அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை தனிமையும் ஆகும்"

என்றாராகலின்.

வ - று : ஐப்பசி - மைப்புறம் ; மடையன் - இடையன் ; குவளை - தவளை : திளை - பனை என முதலும் இடையும் கடையும் குறுகியவாறு கண்டுகொள்க.

என்னை,

"மொழிமுதல் இடைகடை எனமூன் றிடத்தும்
அழியா தைகா ரங்குறு கும்மே '

என்றாராகலின்.

## 4 அளபெடை

இனி அளபெடை வருமாறு :— அளபெடை இரண்டு வகைப்படும், உயிரளபெடையும ஒற்றளபெடையும் என.

என்னை,

"உயிரள பெடையும் ஒற்றளபெடையுமென்
றுயிரண் டென்ப அளபெடை தானே"

என்றாராகலின.

### உயிரளபெடை

அவற்றுள், உயிரளபெடைக்குச் சொல்லுமாறு :— உயிருள் நெட்டெழுத்தேழும் அளபெடுக்கும். அவை அள

1. இஃது அவிநயச் சூத்திரம் என்பது யாப்பருங்கல விருத்தி உகஆம் பக்கத்திற் காண்க.

பெடுக்குமிடத்து ஐகாரம் இகரத்தோடும், ஔகாரம் உகரத்தோடும் அளபெடுக்கும்; ஒழிந்தனவுந் தமக்கின மாகிய குற்றெழுத்தோடு அளபெடுக்கும் எனக் கொள்க.

என்னை,

[1]"குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"

[2]"ஐ ஔ வென்னும் ஆயி ரெழுத்திற்
கிகர உகரம் இசைநிறை வாகும்"

என்றார் தொல்காப்பியனார்.

அவை நான்கிடத்தும் வந்தளபெடுக்கும். நான்கிட மாவன: தனிநிலையும், ஒருசொல் முதனிலையும், இடை நிலையும், இறுதி நிலையும் என இவை.

என்னை,

"தனிநிலை முதனிலை இடைநிலை ஈறெனன
நால்வகைப் படூஉமள பாய்வரும் இடனே"

என்றாராகலின்.

வ-று: ஆஅ - ஈஇ - ஊஉ - ஏஎ - ஐஇ - ஓஒ - ஔஉ என இவை ஏழும் தனிநிலை அளபெடை.

ஆஅரிடம்-ஈஇரிலை - ஊஉரிடம் - ஏஎரிகள்-ஐஇயவி - ஓஒரிகள்-ஔஉவியம் என இவை ஏழும் முதனிலை அள பெடை.

படாஅகை - பரீஇயம் - கழூஉமணி - பரேஎரம் - வயீஇயம் - புரோஒசை - அமௌஉகம் என இவை ஏழும் இடை நிலை அளபெடை.

கடாஅ-குரீஇ - கழூஉ - மிலேஎ - கடைஇ - அரோஒ- அமௌஉ என இவை ஏழும் இறுதிநிலை அளபெடை.

உயிரளபெடை எழுத்துநோக்க ஏழாம். இடம்நோக்க நான்காம். எழுத்தும் இடமும் உறழ்ந்து நோக்க இருபத் தெட்டாமெனக் கொள்க.

---

1. தொல். எழுத்து, மொழிமரபு-அ. 2. தொல். எழுத்து. மொழிமரபு - க.

### ஒற்றளபெடை

இனி ஒற்றளபெடைக்குச் சொல்லுமாறு: ஒற்றுக்களுள் ங-ஞ-ண-ந-ம-ன-வ-ய-ல-ள ஆய்த மென்னும் பதினொரொற்றும், குறிற்கீழும் குறிலிணைக்கீழும் வந்து அளபெடுக்குமெனக் கொள்க.

என்னை,

"ஙஞண நமன வயலள வாய்தம்
எனுமிவை[1] யீரிடத் தளபெழ மொரோவழி,"

"வன்மையொடு ரஃகான் ழஃகான் ஒழிந்தாங்
கன்மை ஆய்தமோ டளபெழும் ஒரோவழி"

என்றாராகலின்.

வ-று: மங்ங்கலம்-மஞ்ஞ்சு-மண்ண்ணு-பந்ந்து-அம்ம்பு-மின்ன்னு - தெவ்வ்வர் - வெய்ய்யர் - செல்ல்க-கொள்ள்க-எஃஃகு எனக் குறிற்கீழ்ப் பதினொரொற்றும் அளபெழுந்தவாறு கண்டு கொள்க.

அரங்ங்கம்-முரஞ்ஞ்சு-முரண்ண்டு-பருந்ந்து - அரும்ம்பு-முரன்ன்று-குரவ்வ்வை- அரைய்ய்யர் - குரல்ல்கள் - இரள்ள்கள் - வரஃஃகு எனக் குறிலிணைக்கீழ்ப் பதினொரொற்றும் அளபெழுந்தவாறு கண்டுகொள்க.

இவ்விருபத்திரண்டு புள்ளியளபெடையுஞ் செய்யுளகத் தல்லது [2]பரவை வழக்கினுள் வாரா எனக்கொள்க.

என்னை,

"மாத்திரை வகையால் தளைதம கெடாநிலை
யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்"

என்றாராகலின்.

---

1. "யாப்பருங்கல விருத்தியில், 'ஈரிடத் தளபெழு மொரோ வழியான" என இருக்கின்றது. யாப்பருங்கல விருத்தி, பக்கம் ௩௭.

2. உலக வழக்கு.

## 5. மாத்திரை

'அறிஞருரைத்த வளபும்' என்று சிறப்பித்தவதனல் குற்றெழுத்தும் ஒற்றளபெடையும் ஒரோ ஒன்று ஒரு மாத்திரை; நெட்டெழுத்து இரண்டு மாத்திரை; உயிரளபெடை மூன்று மாத்திரை. ஆய்தமும், மெய்யும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும் ஒரோ ஒன்று அரை மாத்திரை; ஐகாரக் குறுக்கம் ஒன்றரை மாத்திரை; மகரக்குறுக்கமும், ஆய்தக் குறுக்கமும் ஒரோ ஒன்று கால் மாத்திரை.

என்னை,

"ஒன்றிரண் டொருமூன் றொன்றரை யரைகால்
என்றவர் பொழுதிவை யிமைநொடி யளவே"

"கண்ணிமை கைந்நொடி யளவே மாத்திரை
நுண்ணிதி னுணர்ந்தோர் கண்ட வாறே"

"ஒற்றுக்கு மாத்திரை யொன்றே யளபெழுந்தாற்
றெற்றக் குறியதுவே யாம்"

"உன்னல் காலே யூன்ற லரையே
முறுக்கல் முக்கால் விடுத்த லொன்றே"

என்றார் பிறருமெனக் கொள்க.

## 2. அசை

குறிலே நெடிலே குறிலிணை யெனக் குறில்நெடிலே
நெறியே வரினும் [1]நிரைந்தோற் றடுப்பினும் நேர்நிரையென்
றறிவேய் புரையுமென் தோளி உதாரணம் ஆழிவெள்வேல்
வெறியே சுறுநிறம் விண்டோய் விளாமென்று வேண்டுவரே.
(ரு)

இ - கை. நிரனிறைப் பொருள்கோள் வகையால் நேரசையும் நிரையசையும் ஆமாறும், அவற்றிற்கு உதாரணம் ஆமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

---

(பா - ம்.) 1. நிறைந்தோற்.

(இ - ள்.) [1]'குறிலே நெடிலே குறிலிணை ஏனைக் குறில் நெடிலே நெறியே வரினு நிரைந்தொற் றடுப்பினு நேர்நிரை யென்றறி' என்பது: குற்றெழுத்துத் தனியே வரினும், நெட்டெழுத்துத் தனியே வரினும், குற்றெழுத்து ஒற்றடுத்து வரினும், நெட்டெழுத்து ஒற்றடுத்து வரினும் நேரசையாம். குறிலிணைந்து வரினும், குறினெடி லிணைந்து வரினும், குறிலிணைந் தொற்றடுத்து வரினும், குறினெடி லிணைந் தொற்றடுத்து வரினும் நிரையசையாம்.

என்னை,

[2]"நெடில்குறில் தனியாய் நின்றுமொற் றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே"

[3]"குறிலிணை குறில்நெடில் தனித்துமொற் றடுத்தும்
நெறிமையின் நான்காய் வருநிரை யசையே"

என்றாராகலின்.

'வெய்புரையு மென்றோளி' என்பது மகடூஉ முன்னிலை.

உதாரணம் 'ஆழி வெள் வேல் வெறியே சுறு நிறம் விண்டோய் விளாமென்று வேண்டுவரே' என்பது. நேரசைக்கு உதாரணம்—ஆ—ழி—வெள்—வேல் எனவும், நிரையசைக்கு உதாரணம் வெறி—சுறு—நிறம்—விளாம் எனவுஞ் சொல்லுவர் புலவர்; எ - று.

அகலம் உரையிற் கொள்க.

அகலமெனினும், விருத்தியுரை யெனினும் ஒக்கும்.

என்னை,

"அகல மென்ப தாசறக் கிளப்பின்
விகல மின்றி விரித்துரைப் பதுவே"

என்றாராகலின்.

---

1. குறிலே நெடிலே நெறியே வரினும் நிரைந்தொற் றடுப்பினும் நேரசையாம்; குறிலிணை யேனைக் குறினெடிலே நெறியே வரினும் நிரைந்தொற் றடுப்பினும் நிரையசையாம் என்றறி என இயைத்துக்கொள்க. 2. யாப்பருங்கலம் - சு. 3. யாப்பருங்கலம் - அ.

'விண்டோய் விளாம்' என்று சிறப்பித்தவதனால் நேரசை ஓரலகு பெறும்; நிரையசை ஈரலகு பெறுமெனக் கொள்க.

வ - று: ஆ - எனத் தனி நெடில் நேரசை ஆயினவாறு. பூ - எனத் தனிக்குறில் நேரசை ஆயினவாறு. வெள் - எனக் குற்றெழுத்து ஒற்றடுத்து நேரசை ஆயினவாறு. வேல் என நெட்டெழுத்து ஒற்றடுத்து நேரசை ஆயினவாறு. வெறி எனக் குறிலிணைந்து நிரையசை ஆயினவாறு. சுரு எனக் குறில் நெடி லிணைந்து நிரையசை ஆயினவாறு. நிறம் - எனக் குறிலிணைந்து ஒற்றடுத்து நிரையசை ஆயினவாறு. விளாம் - எனக் குறினெடி லிணைந்து ஒற்றடுத்து நிரையசை ஆயினவாறு காண்க.

இவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

நேரிசை ஆசிரியப்பா

''போது சாந்தம் பொற்ப ஏந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானந் துன்னு வாரே''

இது நேரசை நான்கும் வந்த செய்யுள்.

நேரிசை ஆசிரியப்பா

''அணிநிழ லசோகமர்ந் தருணெறி நடாத்திய
மணிதிகழ் அவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே''

இது நிரையசை நான்கும் வந்த செய்யுள்.

'குறிலே நெடிலே' என்னும் இக் காரிகை தன்னையே இலக்கியமாக அலகிடினும் இழுக்காது.

[1]என்னை,

[2]''குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே''

என்றார் தொல்காப்பியனார்.

---

1. இஃது இவ்விடத்திருப்பது பொருத்தமின்று.
2. தொல். பொருள், செய்யுளியல் - ௩.

"கோழி வேந்தன் நேரசை நிரையசை
யாழ்புனல் வாழ்க்கை வெறி குரா நிறங் குரால்"

என்று உதாரண மெடுத்தோதினாரு முளரெனக்கொள்க.

## 3. சீர்

ஈரசை நாற்சீ ரகவற் குரியவெண் பாவினவாம்
நேரசை யாலிற்ற மூவசைச் சீர்நிரை யாலிறுப
வாரசை மென்முலை மாதே வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
ஓரசை யேசின்மஞ் சீராம் பொதுவொரு நாலசையே. (சு)

இ - கை. அவ்வசைகளாகிய சீர்களது பெயர் வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

'ஈரசை நாற்சீ ரகவற்குரிய' என்பது இரண்டசையி னான் ஆகிய நான்கு சீரும் ஆசிரிய உரிச்சீர் எனப்படும் எ - று.

அகவ லெனினும் ஆசிரிய மெனினும் ஒக்கும்.

என்னை,

[1]"அகவ லென்ப தாசிரியப் பெயரே"

என்றாராகலின்.

"வெண்பாவினவாம் நேரசை யாலிற்ற மூவசைச்சீர்" என்பது: நேரசை இறுதியாகிய மூவசைச்சீர் நான்கும் வெண்பா உரிச்சீர் எனப்படும்; எ - று.

'நிரையா லிறுப வகுத்தவஞ் சிக்குரிச்சீர்' என்பது, நிரையசை இறுதியாகிய மூவசைச்சீர் நான்கும் வஞ்சி உரிச்சீர் எனப்படும்; எ - று.

'வாரசை மென்முலை மாதே' என்பது மகடூஉ முன்னிலை.

1. தொல். பொருள், செய்யுளியல் அக. ஆனால் இச் சூத்திரம் தொல்காப்பியத்தில், 'அகவ லென்ப தாசிரி யம்மே' என்றுளது.

'ஓரசையே நின்றுஞ் சீராம்' என்பது: ஓரோவிடத்து நேரசை தானே நின்றுஞ் சீராம்; நிரையசை தானே நின்றுஞ் சீராம்: அவை அசைச்சீர் எனப்படும்; எ - று.

'பொதுவொரு நாலசையே' என்பது நாலசையிறுைதிய சீர் பொதுச்சீர் எனப்படும்; எ - று.

நான் கென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டி மத்திம தீபமாகப் பொருளுரைத்துக் கொள்க.

என்னை,

[1]"ஈரசை கூடிய சீரியற் சீரவை
ஈரிரண் டென்பர் இயல்புணர்ந் தோரே"

[2]"மூவசைச் சீருரிச் சீரிரு [3]நான்கினுள்
நேரிறு நான்கும் வெள்ளை யல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டனவே"

"நாலசைச் சீர்பொதுச் சீர்பதி னாறே
ஓரசைச் சீருமஃ தோரிரு வகைத்தே"

என்பன யாப்பருங்கலம்.

"நாலசை யாறு நடைபெறும் ஓரசை
சீர்நிலை யெய்தலுஞ் சிலவிடத் துளவே"

என்றார் காக்கைபாடினியார்.

தேமா புளிமா கருவிளங் கூவிளஞ் சீரகவற்
காமாங் கடைகாய் அடையின்வெண் பாவிற்கந் தங்கனியா
வாமாண் கலியல்குல் மாதே வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
நாமாண் புரைத்த அசைச்சீர்க் குதாரணம் நாள்மலரே. (எ)

இ - கை. முறையானே முதல் நான்கு சீருக்கும் உதாரணம் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'தேமா புளிமா கருவிளங் கூவிளஞ் சீரகவற் காம்' என்பது. நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரையாகிய தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் எனனும் நான்கு சீரும் ஆசிரிய உரிச்சீருக்கு உதாரணமாம் எ - று.

---

1, 2. இவ்விரு சூத்திரங்களும் யாப்பருங்கலத்தில் முறையே கக, கஉ ஆம் சூத்திரங்களாகக் காணப்படுகின்றன.

3. (பா - ம்.) நான்கினும்.

'ஆங் கடைகாய் அடையின் வெண்பாவிற்கு' என்பது: அவை, கடையிற் காய் என்னுஞ் சொற்பெற்றுத் தேமாங்காய் புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் எனவரும் நான்கு சீரும் வெண்பா உரிச்சீருக்கு உதாரணம்; எ - று.

'அந்தங் கனியா வகுத்தவஞ் சிக்குரிச்சீர்' என்பது அவ்விற்றின்கட் கனி என்னுஞ் சொற்பெற்றுத் தேமாங் கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி எனவரும் நான்கு சீரும் வஞ்சி உரிச்சீருக்கு உதாரணமாம்; எ - று.

'வாமாண் கலையல்குல் மாதே' என்பது மகடூஉ முன்னிலை.

'நாமாண் புரைத்த அசைச்சீர்க் குதாரண நாள் மலரே' என்பது ஓரோவிடத்தாமென் றுரைக்கப்பட்ட ஓரசைச் சீருக்கு உதாரணம் நாள் என்பதூஉம், மலர் என்பதூஉம் ஆம் என்றவாறு.

நாள் என்பது நேரசைச் சீருக்கும் மலர் என்பது நிரையசைச் சீருக்கும் உதாரணமாம்.

ஆம் என்பதனை எல்லாவற்றோடுங் கூட்டி மத்திம தீபமாகப் பொருளுரைத்துக் கொள்க.

இன்னிசை வெண்பா

"அம்ம் பவள்ள் வரிநெடுங்க ணாய்வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கின்
அரும்ம் பவள்முலை ஒக்குமே ஒக்கும்
கரும்ம் பவள்வாயிற் சொல்"

என்னும் பொய்கையார் வாக்கினுள், ஒக்கும் என்பதனை எல்லாவற்றோடுங் கூட்டிப் பொருளுரைத்துக் கொண்டாற் போலக் கொள்க.

தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல் தந்துறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச் சீர்வந் தருகும் இனியவற்றுட்
கண்ணிய பூவினங் காய்ச்சீ ரனைய கனியோடோக்கும்
ஒண்ணிழற் சீரசைச் சீரியற் சீரோக்கும் ஒண்தளிக்கே. (ச)

இ - கை. பொதுச்சீருக்கு உதாரணமாமாறும், அவற்ற தென்னும் பொதுச்சீரும் அசைச் சீரும் செய்யுளகத்து வருங் கால் தளைவழங்கும் முறைமையும் உணர்த்துதல் நுதலிற்று.

'தண்ணிழல்...அருகும்' என்பது: தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் நான்கனேடும; தண்ணிழல், தண்பூ, நறும்பூ, நறுநிழல் என்னும் நான்கனையும், முறை யானே கொணர்ந் துறழ்ந்தாற் பதினறு நாலசைச் சீருக்கும் உதாரணமாம்; (எ - று.)

தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்பன அதி காரத்தால் வருவித்துரைக்கப்பட்டன.

'அருகும்,' என்பதனல் அச் சீர் செய்யுளகத்து அருகி அன்றி வாரா வெனக் கொள்க.

வ-று : "தேமாந்தண்ணிழல்; தேமாந்தண்பூ; தேமாநறும்பூ
புளிமாந்தண்ணிழல்; புளிமாந்தண்பூ; புளிமாநறும்பூ
கருவிளந்தண்ணிழல்; கருவிளந்தண்பூ; கருவிளநறும்பூ
கூவிளந்தண்ணிழல்; கூவிளந்தண்பூ; கூவிளநறும்பூ
தேமாநறுநிழல்　　கருவிளநறுநிழல்
புளிமாநறுநிழல்　　கூவிளநறுநிழல்

எனவுங் கொள்க.

'இனி அவற்றுள் கண்ணிய பூவினம் காய்ச்சீ ரனைய' என்பது: அந் நாலசைச்சீர் பதினறனுள்ளும், பூவென் னுஞ் சொல்லிறுதியாகிய நேரீற்றுப் பொதுச்சீ ரெட்டும், காயென்னுஞ் சொல்லிறுதியாகிய வெண்பா உரிச்சீரே போலக் கொண்டு வருஞ்சீர் முதலசையோ டொன்றுவது வெண்டளையாகவும் ஒன்ருதது கலித்தளையாகவும் வழங்கப் படும்; (எ - று).

'கனியொடொக்கும் ஒண்ணிழற்சீர்' என்பது: நிழ லென்னுஞ் சொல்லிறுதியாகிய நிரையீற்றுப் பொதுச்சீ ரெட்டும், கனியென்னுஞ் சொல்லிறுதியாகிய வஞ்சி உரிச் சீரேபோலக் கொண்டு வருஞ்சீர் முதலசையோ டொன்றி னும் ஒன்ருவிடினும் வஞ்சித்தளை யென்று வழங்கப்படும்; (எ - று.)

'அசைச்சீர் இயற்சீ ரொக்கும்' என்பது: ஓரசைச்சீர் ஆசிரிய உரிச்சீரேபோலக் கொண்டு வருஞ்சீர் முதலசையோ டொன்றுவது ஆசிரியத்தளையாகவும், ஒன்றாதது இயற்சீர் வெண்டளையாகவும் வழங்கப்படும்; (எ - று.)

இயற்சீர் எனினும் ஆசிரிய உரிச்சீர் எனினும் ஒக்கும்.

என்னை,

"இயற்சீ ரெல்லாம் ஆசிரிய உரிச்சீர்"

என்றாராகலின்.

'ஒண்டளைக்கே' என்பது: ஒள்ளிய தளை வழங்கு மிடத்து; (எ - று).

'ஒண்டளை' என்பதனை இறுதி விளக்காகப் பொரு ளுரைத்துக் கொள்க. 'கண்ணிய பூவினம்' என்று சிறப் பித்த வதனால் வெண்பாவினுள் நாலசைச்சீர் வாரா; ஆசிரி யத்துள்ளுங் குற்றுகரம் வந்துழி யன்றி வாரா: கலியினுள ளும் பெரும்பான்மையுங் குற்றுகரம் வந்துழி யன்றி வாரா. வஞ்சியுட் குற்றுகரம் வாராதேயும் வரப்பெறும்; வஞ்சியுள் இரண்டு நாலசைச்சீர் ஓரடியுள் அருகிக் [1]கண்ணுற்று நிற்க வும் பெறும்; அல்லனவற்றுள் பெரும்பான்மையும் ஓரடியு ளொன்றன்றி வாரா; இரண்டிவரினுங் கண்ணுற்று நில்லா; பாவினத்துள்ளும் பயின்று வாரா வெனக்கொள்க. 'ஒண ணிழற்சீர்' என்று சிறப்பித்த வதனால் நிழல் என்னுஞ் சொல்லிறுதியாகிய நிரையிற்றுப் பொதுச்சீர் எட்டும் வஞ்சியுளல்லது வாரா எனக் கொள்க.

என்னை,

"நாலசை யான்நடை பெற்றன வஞ்சியுள்
ஈரொன் றவைதம் மெனுழி யொன்றுசென்
றுகளும் அந்தம் நிரையசை வந்தன
கூறிய வஞ்சிக் குரியன ஆதலும்
ஆறு மென்ப அறிந்திசி னோரே"

என்றார் காக்கைபாடினியார்.

---

1. கண்ணுற்று—நெருங்கி, இயைந்து.

இனி, ஒரு சாரார் வெண்பாவினுள் அளபெழுந்தால் நாலசைச்சீர் வருமென்பார் உளராயினும், அவ்வா றல கிட்டு உதாரண வாய்பாட்டால் ஓசை யூட்டும்பொழுது செப்பலோசை பிழைக்கு மென்பதூஉம், ஆண்டுச் சீரும், தளையுஞ் சிதைய வாராமையான் அளபெடுப்பனவு மல்ல; அளபெடுப்பினும் அளபெடைகள் அலகு காரியம் பெறு வனவும் அல்ல வென்பதூஉம் காக்கைபாடினியார் முத லாகிய தொல்லாசிரியர் துணிவு. அதுவே இந்நாலுடையா ருக்கும் உடன்பாடு.

உதாரண இலக்கியமுதனினைப்புச் செய்யுள்

குன்றக் குறவன் அகவல்பொன் னாரம்வெண் பாட்டுவஞ்சிக்
கொன்று மூதாரணம் பூந்தா மரையென்ப வோரசைச்சீர்
நன்றறி வாரிற் கயவரும் பாலொடு நாலசைச்சீர்க்
கன்றதேன் னாரள்ளற் பள்ளத்தி னோடங்கண் வானத்துமே.

இ - கை. முறையானே ஐந்துவகைப்பட்ட சீரானும் வந்த இலக்கியங்கட்கு முதனினைப் புணர்த்துதல் நுதலிற்று.

'குன்றக்குறவன் அகவல்'

ஆசிரியப்பா

"குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர் புரையுஞ் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே."

இந்நேரிசை யாசிரியப் பாட்டினுள் ஆசிரிய வுரிச்சீர் நான்கும வந்தவாறு கண்டுகொள்க.

'பொன்னாரம் வெண்பாட்டு.'

---

1. அலகிடுதல்...அசை கருவியாக அளவிடுதல்.

2. ஐவகைச் சீராவன: க. ஈரசைச்சீர், உ. காய்ச்சீர், ங. கனிச்சீர், ச. நாலசைச்சீர், ரு. ஓரசைச்சீர் என்பன. மூவசைச்சீரை இரண்டாகப் பிரித்தார், அவை வெவ்வேறு பாக்களுக் குரியன வாதலும், தளை வேறுபடுதலுங் கருதி.

3. ஐங்குறு நூறு குன்றக்குறவன் பத்து - ரு.

வெண்பா

"பொன்னார மார்பிற் புனைகழகற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றாழலக்கை பற்றினேற்—கென்னோ
மனனொடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
புனலுடன் பேரே வரும்."

இந் நேரிசை வெண்பாவினுள் வெண்பா உரிச்சீர் நான்கும் வந்தவாறு கண்டுகொள்க.

'வஞ்சிக்கொன்று முதாரணம் பூந்தாமரை' யென்ப.

வஞ்சிப்பா

"பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்
நாளும்
மகிழு மகிழ்தூங் கூரன்
புகழ்த லானுப் பெருவண் மையனே."

இக் குறளடி வஞ்சிப்பாவடியினுள் வஞ்சியுரிச்சீர் நான்கும் வந்தவாறு கண்டுகொள்க.

'ஓரசைச்சீர் நன்றறி வாரிற் கயவரும் பாலொடு'

குறள் வெண்பா

[1]"நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்."

இக் குறள் வெண்பாவினுள், 'இலர்' என நிரையசைச் சீர் வந்தவாறு கண்டுகொள்க.

[2]"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்."

---

1. திருக்குறள், பொருள், கயமை - உ.
2. திருக்குறள், காமம், காதற்சிறப்புரைத்தல் - க.

இக் குறள் வெண்பாவினுள், 'நீர்' என நேரசை வந்தவாறு கண்டுகொள்க.

'நாலசைசீர்க் கன்ற தென்னுர் அள்ளற் பள்ளத்தினுேடங்கண் வானத்தும்,'

[1]"அள்ளற்பள்ளத் தகன்சோறூட்டு
வேங்கைவாயில் வியன்குன் றூரன்"

என்னும் பழம்பாட்டினுள் ஓரடியுள் இரண்டு நாலசைச் சீர் வந்தவாறு கண்டுகொளக.

வஞ்சிப்பா

[2]"அங் கண் வா னத் தமர ரரசரும்
வெங் களி யானை வேல் வேந்தரும்
வடி வார் கூந் தன் மங்கையரும்
கடி மல ரேந் திக் கதழ்ந் திறைஞ்சச்
சிங் கஞ் சுமந் த மணியணைமிசைக்
கொங் கவி ரசோ கின் குளிர்நிழற்கீழ்ச்
செழு நீர்ப் பவ ளத் திரள் காம்பின்
முழு மதி புரை யு முக்குடை நீழல்
வெங் கண் வினைப் பகை விளிவெய்தப்
பொன் புனை நெடு மதில் புடைவளைப்ப
அனந் தசதுட் டய மவையெய்த
நனந் தலை யுல குடை நவைநீங்க
மந் தமா ருத மருங்கசைப்ப
அந் தர துந் துபி நின்றியம்ப
இலங் குசா மரை யெழுந்தலமர
நலங் கிளர் பூ மழை நனிசொரிதர
இனிதிருந்
தருணெறி நடாத்திய ஆதிதன்
திருவடி பரவுதுஞ் சித்திபெறற் பொருட்டே."

இக் குறளடி வஞ்சிப்பாவினுள் நாலசைச்சீர் பதினறும் அடிதோறும் முதற்கண்ணே வந்தவாறு கண்டுகொள்க.

---

1. இது, வஞ்சிப்பாவினுள் ஓரடிக்கண் இரண்டு நாலசைச் சீர் வருதற்கும், கன்னூற்று நிற்றற்கும் குற்றியலுகரம் பெற்றும் பெருமலும் வருதற்கும் உதாரணமாதல் அறிக.

2. திருப்பாமாலை.

இதனுள், நேரீற்றுப்பொதுச்சீர் நின்று தன்வருஞ்சீர் முதலசையோ டொன்றுவது வெண்சீர் வெண்டளையாகவும், ஒன்றாதது கலித்தளையாகவும், நிரையீற்றுப் பொதுச் சீர் நின்று தன் வருஞ்சீர் முதலசையோ டொன்றினும், ஒன்றா விடினும் வஞ்சித்தளையாகவும் கொண்டு வழங்கப்படும்; எ-று.

இவ்வாறு பிறரும்,

[1]"குன்று கூதிர் பண்பு தோழி
விளியிசை முத்துறழ் என்றிவை யெல்லாம்
தெளிய வந்த செந்துறைச் செந்துறை"

என்று உதாரண மெடுத்தோதினா ரெனக் கொள்க.

'அன்றதென்னார்' என்பதை அன்ற வென்னா ரெனக் கொள்க.

## 4. தளை

தன்சீர் தனதோன்றின் தன்தளை யாந்தண வாதவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சக் குரித்துவல் லோர்வகுத்த
வெண்சீர் விகற்பங் கலித்தளை யாய்விடும் வெண்டளையாம்
ஒண்சீர் அகவல் உரிச்சீர் விகற்பமும் ஒண்ணுதலே. (௧௦)

இ-கை. நின்றசீரி னீற்றசையும், வருஞ்சீரின் முதலசையும் தம்மு ளொன்றுவதும் ஒன்றாததுமாகிய ஏழ்தளையும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

[2]'தன்சீர் தனதொன்றின் தன் தளையாம்,' என்பது தன் சீர் நின்று தன் வருஞ் சீர் முதலசையோ டொன்றுவது தன் தளையாம்; எ-று.

எனவே, ஆசிரிய உரிச்சீர் நின்று தன் வருஞ்சீர் முதலசையோடு நேரா யொன்றுவது நேரொன்றாசிரியத் தளை

---

1. இஃது உதாரண முதல் நினைப்புப் போலும்?
2. சுன்னாகம் அ. குமாரசுவாமிப்பிள்ளை 'தன்சீர்' என்றே பாடங்கொண்டு, 'தன் என்பன இரண்டும் ஆசிரியப்பா முதலிய மூன்றையும் தனித்தனி சுட்டுமாறு நின்றன,' என்பர்.

யாம்; நிரையாய் ஒன்றுவது நிரையொன்றாசிரியத் தளையாம். வெண்பா உரிச்சீர் நின்று தன் வருஞ் சீர் முதலசையோ டொன்றுவது வெண்சீர் வெண்டளையாம். வஞ்சி உரிச்சீர் நின்று தன் வருஞ் சீர் முதலசையோ டொன்றுவது ஒன்றிய வஞ்சித்தளையாம்; எ - று.

'தணவாத' என்று மிகுத்துச் சொல்லியவதனால் தன் சீர் நின்று பிறிதாக வருஞ்சீர் முதலசையோ டொன்று வதூஉந் தன் தளையே சிறப்பின்றாயினு மெனக் கொள்க.

'வஞ்சிவண்சீர் விகற்பமும் வஞ்சிக்குரித்து,' என்பது; வஞ்சி உரிச்சீர் நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன் றாததூஉம் ஒன்றாத வஞ்சித்தளையாம்; எ - று.

'வண்சீர்' என்று சிறப்பித்த வதனால் வஞ்சி உரிச்சீர் நின்று பிறிதாகி வருஞ்சீர் முதலசையோ டொன்றாததூஉம் ஒன்றாத வஞ்சித்தளையே சிறப்பின்றாயினும் எனக் கொள்க.

'வல்லோர் வகுத்த வெண்சீர் விகற்பங் கலித்தளையாய் விடும்' என்பது: வெண்பா உரிச்சீர் நின்று தன் வருஞ்சீர் முதலசையோ டொன்றாதது கலித்தளையாம்; எ - று.

'வல்லோர்' வகுத்த,' என்று சிறப்பித்த வதனால், வெண்பா உரிச்சீர் நின்று பிறிதாகி வருஞ்சீர் முதலசையோ டொன்றாததூஉம், கலித்தளையே சிறப்பின்றாயினு மெனக் கொள்க.

'வெண் தளையாம் ஒண்சீரகவல் உரிச்சீர் விகற்பமும்' என்பது; ஆசிரிய உரிச்சீர் நின்று தன் வருஞ்சீர் முத லசையோ டொன்றாதது, இயற்சீர் வெண்டளையாம்; எ - று.

'ஒண்சீர்' என்று சிறப்பித்தவதனால ஆசிரிய உரிச்சீர் நின்று பிறிதாகி வருஞ்சீர் முதலசையோ டொன்றாததூஉம், இயற்சீர் வெண்தளையே சிறப்பின்றாயினும் எனக் கொள்க.

'ஒண்ணுதலே' என்பது: மகடூஉ முன்னிலை.

என்னை,

“இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்பம் இலவாய் விரவி நடப்பின்
அதற்பெயர் ஆசிரி யத்தளை யாகும்”

“இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப வகையது வெண்டளை யாகும்”

“உரிச்சீ ரதனுள் உரைத்தமை யன்றிக்
கலக்குந் தளையெனக் கண்டிசி னோரே”

“வெண்சீர் இறுதிக் கிணையசை பின்வரக்
கண்டன எல்லாம் கலித்தளை யாகும்”

“தன்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முளொத்
தொன்றினும் ஒன்று தொழியினும் வஞ்சியின்
பந்தம் எனப்பெயர் பகரப் படுமே”

என்றார் காக்கைபாடினியார்.

### உதாரண இலக்கிய முதல் நினைப்புச் செய்யுள்

திருமழை உள்ளார் அகவல் சிலைவிலங் காகும்வெள்ளை
மருளறு வஞ்சிமந் தாநிலம் வந்துமை தீர்கலியின்
தேரிவுறு பந்தநல் லாய்செல்வப் போர்க்கதக் கண்ணனென்ப
துரிமையின் கண்ணின்மை ஓரசைச் சீருக் குதாரணமே.
(கக)

இ-கை. அத் தளைகளான் வந்த இலக்கியங்கட்கு முதனினைப் புணர்த்துதல் நுதலிற்று.

‘திருமழை யுள்ளா ரகவல்’

ஆசிரியப்பா

[1]“திருமழை தலைஇய இருணிற விசும்பின்
விண்ணதிர் இமிழிசை கடுப்பப்
பண்ணமைந் தவர்தேர் சென்ற வாறே.”

இது நிரையொன் றாசிரியத் தளையான் வந்தசெய்யுள்.

---

1. “திருமழை தலைஇய இருணிற விசும்பின், விண்ணதிர் இமிழிசை கடுப்பப் பண்ணமைத்து” என்பது மலைபடுகடாத்தின் முன் இரண்டடியாக உள்ளது.

ஆசிரியப்பா

*"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை
அலங்குகுலை ஈந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவளம் ஏய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே."

இது நேரொன்றாசிரியத் தளையான் வந்த செய்யுள்.

'சிலை விலங்காகும் வெள்ளை'

வெண்பா

"சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள் - மலைவிலங்கு
தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போது.''

இது வெண்சீர் வெண்டளையானும், இயற்சீர் வெண்டளையானும் வந்த செய்யுள.

'மருளறு வஞ்சிமந் தாநிலம் வந்து'

வஞ்சிப்பா

†''மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை [1]புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை
எனவாங்கு
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனமொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே."

இது மயக்கமற வகுத்த வஞ்சித்தளை ஒன்றாததூஉம் ஒன்றியதூஉமாக வந்த செய்யுள்.

'மைதீர் கலியின் தெரிவுறு பந்தம் செல்வப்போர்க் கதக்கண்ணன்'

(பாடம்) 1. புரையிடட்ட.

*இப் பாட்டு ஐங்குறு நூறு அச்சுப் புத்தகத்தில் தனியாகக் குறிப்பிட்டுள்ள பாட்டுகளில் ௨ஆம் பாட்டாக உளது.

†திருப்பாமாலை.

கலிப்பா உ.ம்

கலிப்பா

"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே"

இது மயக்கமில்லாக் கலித்தளையான் வந்த செய்யுள்.
'கல்லாய்' என்பது: மகடூஉ முன்னிலை.
'உரிமையின் கண்ணிமை ஓசைச் சீருக் குதாரணம்'.

வஞ்சிவிருத்தம்

"உரிமை யின்கண் ணின்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே."

இம் மூச்சீரடி வஞ்சிவிருத்தத்துள் மழை என்னும் நிரையசைச்சீர் இயற்சீரேபோல நின்று வருஞ்சீர் முதலசையோ டொன்றாமையின் இயற்சீர் வெண்டளை யாயிற்று. செய்யென்னும் நேரசைச்சீர் இயற்சீரே போல நின்று வருஞ்சீர் முதலசையோ டொன்றினமையின் ஆசிரியத் தளை யாயிற்று.

## 5. அடி

உ.ம்) நூற்பா:

குறளிரு சீரடி சிந்துமுச் சீரடி நாலொருசீர்
அறைதரு காலை அளவோடு நேரடி ஐயொருசீர்
நிறைதரு பாத நெடிலடி யாநெடு மென்பணைத்தோள்
கறைகெழு வேற்கணல் லாய்மிக்க பாதங் கழிநெடிலே. (கஉ)

இ-கை. அத்தளைகளான் வந்த அடிகளது பெயர் வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

'குறளிரு சீரடி' என்பது: இருசீரான் வந்த அடி குறளடி எனப்படும்; எ-று.

'சிந்துமுச்சீரடி' என்பது: மூச்சீரான் வந்த அடி சிந்தடி எனப்படும்; எ-று.

'நாலொருசீர் அறைதருகாலை யளவொடு நேரடி' என்பது: நாற்சீரான் வந்த அடி அளவடி என்றும் நேரடி என்றுஞ் சொல்லப்படும்; எ - று.

ஐயொருசீர் நிறைதரு பாத நெடிலடியாம் என்பது: ஐஞ்சீரான் வந்த அடி நெடிலடி எனப்படும்; எ - று.

'நெடுமென் பணைத்தோள் கறைகெழு வேற்கணல்லாய்' என்பது: மகடூஉ முன்னிலை.

'மிக்கபாதங் கழிநெடில்' என்பது ஐஞ்சீரின் மிக்க சீரான் வரும் அடியெல்லாங் கழிநெடிலடி எனபபடும் எ - று. அகலம் உரையிற் கொள்க.

என்னை,

*"குறளடி சிந்தடி இருசீர் முச்சீர்
அளவடி நெடிலடி நாற்சீர் ஐஞ்சீர்
நிரனிறை வகையான் நிறுத்தனர் கொளலே"

†"கழிநெடில் அடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிரண் டீறு
வருவன பிறவும் வகுத்தனர் கொளலே"

என்பன யாபபருங்கலம்.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

திரைத்த இருசீர் குறளசிந் தளவடி தேம்பழுத்து
விரிக்கு நெடிலடி வேனெடுங் கண்ணிவென் றுன்வினையின்
றிரைக்குங் கணிகோண்ட மூவடி வோடிடங் கொங்குமற்றும்
கரிக்கைக் கவான்மருப் பேர்முலை மாதர் கழிநெடிலே. (கரு)

இ - கை. அவ்வடிகளான் வந்த இலக்கியங்கட்கு முதல் நினைப்புணர்த்துதல் நுதலிற்று.

'திரைத்தவிருசீர் குறள்சிந்து'

வஞ்சித்துறை

‡"திரைத்த சாலிகை
நிரைத்த போனிரந்

---

*யாப்பருங்கலம் - உ௪.　　　　†யாப்பருங்கலம் - உ௫.

‡சூளாமணி. சீய. ௪௭உ.

திரைப்ப தேன்களே
விரைக்கொள் மாலையாய்.''

இது குறளடியான் வந்த செய்யுள்.

வஞ்சி விருத்தம்

*''இருது வேற்றுமை யின்மையாற்
சுருதி மேற்றுறக் கத்திறே
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடங் கையினாய்.''

இது சிந்தடியான் வந்த செய்யுள்.

'அளவடி தேம் பழுத்து'

கலி விருத்தம்

†''தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளும் மதுத்தண் டீட்டமும்
தாம்பழுத் தளசில தவள மாடமே.''

இஃது அளவடியான் வந்த செய்யுள்.

'விரிக்கு நெடிலடி வென்றான் வினையின்'

கலித்துறை

‡''வென்றான் வினையின் [1]தொகையாய விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின் ஒழியாது முற்றும்
சென்றான் திகழுஞ் சுடர்சூழ் ஒளிமூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார் வினைநீங்கி நின்றார்.''

இது நெடிலடியான் வந்த செய்யுள்.

'இரைக்கும் கணிகொண்ட மூவடிவோடிடங் கொங்கு மற்றும்'

---

(பாடம்.) 1. தொகையாகி.

*சூளாமணி. ௬௰ - ௧௭௦.

†சூளாமணி, நகர் - ௧௮.

‡சூளாமணி, காப்பு.

(உ.ம்) சிறுசீர்அடி "தண்டலை மயில்கள் ஆட தாமரை விளக்கந் தாங்க
கொண்டலை முழவின் ஏங்க"



அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

*''இரைக்கு மஞ்சிறைப் பறவைக ளெனப்பெயர்
இனவண்டு புடைசூழ
நுரைக்க ளென்னுமக் †குழம்புகள் திகழ்ந்தெழ
நுடங்கிய விலையத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத்
திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கு மற்றிது குணகடல் திரையொடு
பொருதல தவியாதே.''

இஃது அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

‡''கனிகொண் டலர்ந்த நறவேங்கை யோடு
கமழ்கின்ற காந்த ளிதழால்
அணிகொண் டலர்ந்த வனமாலை சூடி
அகிலாவி குஞ்சி கமழ
மணிகுண் டலங்கள் இருபாலும் வந்து
வரையாக மீது திவளத்
துணிகொண் டிலங்கு சுடர்வேலி னேடு
வருவானி தென்கொல் துணிவே.''

இஃது எழுசீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

§''மூவடிவி னுலிரண்டு சூழ்சுடரும் நாண
முழுதுலக மூடியெழின் முளைவயிர நாற்றித்
தூவடிவி னுலிலங்கு வெண்குடையி னிழற்
சுடரோயுன் அடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டால்
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
சிவந்தனவோ சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொலிகள் சூழ்ந்து
புலங்கொளா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோவே.''

இஃது எண்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

---

*சூளாமணி, கல் - ௫௧. †'குழம்பு கொண்டெதிர்ந்தெழ.'
‡சூளாமணி, அரசி-௧௧௭. §சூளாமணி, துறவு-௩௬.

ஒன்பதின்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

"இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியின் எதிர்ந்த தானையை
இலங்கும் ஆழியின் விலங்கியோள்
முடங்கு வாலுளை மடங்கல் மீமிசை முனிந்து சென்றுடன்
முரண்ட ராசனை முருக்கியோள்
வடங்கொள் மென்முலை நுடங்கு நுண்ணிடை மடந்தை சுந்தரி
வனங்கொள் பூண்முலை மகிழ்ந்தகோன்
தடங்கொள் தாமரை யிடங்கொள் சேவடி தலைக்கு வைப்பவர்
தமக்கு வெந்துயர் தவிர்க்குமே."

இஃது ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

பதின்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

"கொங்கு தங்கு கோதை யோதி மாத ரோடு
கூடுநீடு மோடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத நீத
நாத வென்று நின்று தாழ
அங்க [1]புவ்வ மாதி யாய வாதி நூலி
னீதி யோது மாதி யாப
*செங்கண் மாலை காலை மாலை சேர்நர் சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே."

இது பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

'மற்றும்' என்பதனால் பதின்சீரின் மிக்கு வருவனவு முள; அவை யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க.

'வேனெடுங்கண்ணி' என்பதும், 'கரிக்கைக் கவான் மருப்பேர் முலைமாதர்' என்பதும் மகடூஉ முன்னிலை.

'கழிநெடிலே' என்பது: அவை யெல்லாங் கழிநெடிலடி யாம் எ - று.

'விரிக்கு நெடிலடி' என்று சிறப்பித்தவதனால் எண்சீரின் மிக்க சீரான் வருமடிகள் சிறப்பிலவெனக் கொள்க.

---

(பாடம்) 1. பூர்வம்.

*'செங்கண் மாலை காலை' ககர வொற்று விகாரத்தாற் றொக்கது.

என்னை,

"இரண்டு முதலா எட்டீ றாகத்
திரண்ட சீரான் அடிமுடி வுடைய
இறந்த வரினு மடிமுடி வுடைய
சிறந்த வல்ல செய்யு ளுள்ளே"

என்றார் காக்கைபாடினியார்.

சிற்றெல்லை பேரெல்லை.

நான்கு பாக்களுக்கும் உரிய அடியின் சிறுமையும் பெருமையும்

வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்
கெள்ளப் படாககலிக் கீரிரண் டாகும் இழி*புரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே பெருமையொண் போதலைத்த
கள்ளக் கருநெடுங் கட்சுரி மேனகுழற் காரிகையே. (௧௪)

இ-கை. அவ்வடி வரையறையான் வந்த நான்கு பாவிற்குஞ் சிறுமை பெருமை உணர்த்துதல் நுதலிற்று.

'வெள்ளைக்கிரண்டடி இழிபு' என்பது: வெண்பாவிற்கு இரண்டடியே சிறுமை எ-று.

'வஞ்சிக்கு மூன்றடி இழிபு' என்பது: வஞ்சிப்பாவிற்கு மூன்றடியே சிறுமை எ-று.

'மூன்றகவற்கு இழிவு' என்பது, ஆசிரியப்பாவிற்கு மூன்றடியே சிறுமை எ-று.

'எள்ளப்படாக் கலிக் கீரிரண்டாகும் இழிபு' என்பது கலிப்பாவிற்கு நானகடியே சிறுமை எ-று.

'இழிபு' என்பது, நான்கு பாவிற்கும் 'சிறுமை' எ-று.

'உரைப்போர் உள்ளக் கருத்தினளவே பெருமை' என்பது; நானகு பாவிற்கும் பெருமைக் கெல்லை பாடுவோனது பொருள் முடிவுக் குறிப்பே; வரையறையில்லை; எ-று.

'ஒண்போதலைத்த......காரிகையே' என்பது; மகடூஉ முன்னிலை.

---

*இழிபு - சிறுமை; சிற்றெல்லை; இதுவெள்ளைக்கு, வஞ்சிக்கு அகவற்கு என்பவற்றோடும் சென்று இயையும்.

'எள்ளப்படாக் கலிக்கு' என்று சிறப்பித்த வதனால் துள்ளலோசையிற் சிறிதும் வழுவாது நாற்சீர் நாலடியான் வருவது தரவு கொச்சகக்கலிப்பா என்றும், துள்ளலோசை யிற் சிறிது வழுவி நாற்சீர் நாலடியான் வருவது கலிவிருத்தம் என்றும், தெரிந்துணரப்படும் எனக் கொள்க.

'வெள்ளைக் கிரண்டாம் அகவற்கு மூன்று கலிக்கடி நான் கெள்ளப்படாவஞ்சிப்பாவிற்கு மூன்றும் இழிபு' என்று பாக்களை முறையிற் கூருது தலைதடுமாற்றமாகக் காரிகை சொல்லவேண்டிய தென்னையோ வெனின், தலைதடுமாற்றந் தந்து புணர்ந்துரைத்த லென்பது தந்திர வுத்தியாகலின். அன்றியும் மயேச்சுரர் முதலாகிய ஒருசார் ஆசிரியர் வஞ்சிப்பா இரண்டடியானும் வரப்பெறும் என்றுரென்பதூஉம், ஆசிரியப்பா இரண்டடிச் சுரிதகமாய் வரப்பெறும் என்ருர் என்பதூஉம் அறிவித்தற்கு எனக் கொள்க.

என்னை,

"வெண்பா ஆசிரியங் கலியே வஞ்சியென
நுண்பா உணர்ந்தோர் நுவலுங் காலை
இரண்டும் மூன்றும் நான்கும் இரண்டும்
திரண்ட அடியின் சிறுமைக் கெல்லை"

என்றெடுத்தோதிய மயேச்சுரர் வஞ்சிச் சிறுமைக்குக்காட்டும் பாட்டு :—

வஞ்சிப்பா

"பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார்

அதனால்

அறிவன தடியிணை பரவிப்
பெறுகுவர் யாவரும் பிறவியில் நெறியே."

இதனை முச்சீரடி வஞ்சியாக அலகிட்டு இரண்டடி யாமாறு கண்டு கொள்க.

என்னை,

"ஒருதொடை ஈரடி வெண்பாச் சிறுமை
இருதொடை மூன்றும் அடியி னிழிந்து
வருவன ஆசிரியம் இல்லென மொழிப
வஞ்சியும் அப்பா வழக்கின ஆகும்"

"நான்காம் அடியினும் மூன்றுந் தொடையினும்
தாழ்ந்து கலிப்பா தழுவுதல் இலவே"

"உரைப்போர் குறிப்பினை [1]நீக்கிப் பெருமை
வரைத்தித் துணையென வைத்துரை யில்லென்
றுரைத்தனர் மாதோ உணர்ந்திசி னோரே"

என்றார் காக்கைபாடினியார்.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபக வற்கிழிபு
குறித்தாங் குரைப்பின் முதுக்குறைந் தாங்குறை யாக்கலியின்
திறத்தா றிதுசெல்வப் போர்ச்செங்கண் மேதிவஞ் சிச்சிறுமை
புறத்தாழ் கருமேன் குழல்திருவேயன்ன பூங்கொடியே. (௧௫)

இ-கை. அவ்வடி வரையறையான் வந்த இலக்கியங்கட்கு முதல்நினைப் புணர்த்துதல் நுதலிற்று.

'அறத்தா றிதுவென வெள்ளைக்கிழிபு'

குறள் வெண்பா

*"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை."

இஃது இரண்டடியான் வெண்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.

'அகவற்கிழிபு குறித்தாங் குரைப்பின் முதுக்குறைந் தாம்'

(பாடம்) 1. யன்றிப்பெருமை (யாப்பருங்கலவிருத்தி, பக்கம் ௧௨௩.)

* குறள், அறன்வலி - ௭.

ஆசிரியப்பா

"முதக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையும் வாரா முதுக்குறைந் தனளே."

இது மூன்றடியான் ஆசிரியப்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.

'குறையாக் கலியின் இறத்தா றிதுசெல்வப் போர்'

தரவுகொச்சகக் கலிப்பா

*"செல்வப்போர்க் கதக்கண்ணன்...மருமம்பாய்ந்தொளித்ததே"

இது நான்கடியாற் கலிப்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.

'செங்கண்மேதி வஞ்சிச் சிறுமை'

வஞ்சிப்பா

"செங்கண்மேதி கரும்புழக்கி
அங்கனிலத் தலரருந்திப்
பொழிற்காஞ்சி நிழற்றுயிலும்
செழுநீர்,
நல்வயற் கழனி யூரன்
புகழ்த லானாப் பெருவண் மையனே"

இது மூன்றடியான் வஞ்சிபபாவிற்குச் சிறுமை வந்தவாறு.

'புறத்தாழ் கருமென் குழல்திருவேயன்ன பூங்கொடியே' என்பது: மகடூஉ முன்னிலை, ஆங்கு: அசை.

## 6. தொடை

எழுவா யெழுத்தொன்றின் மோனை இறுதி இயைபிரண்டாம்
வழுவா எழுத்தொன்றின் மாதே எதுகை மறுதலைத்த
மொழியான் வரினும் முரணடி தோறு முதன்மொழிக்கண்
அழியா தளபெடைத் தோன்றுவ தாகும் அளபெடையே. (கசு)

*இச் செய்யுளை இந்நூல் கூச ஆவது பக்கத்திற் காண்க.

1 அடிமோனை　　கூழைமோனை
இணைமோனை　　மேற்கதுவாய் மோனை
பொழிப்புமோனை　　கீழ்க்கதுவாய்மோனை
ஒரூஉமோனை　　முற்றுமோனை—எனவும்

2 அடியியைபு　　கூழையியைபு
இணையியைபு　　மேற்கதுவாயியைபு
பொழிப்பியைபு　　கீழ்க்கதுவாயியைபு
ஒரூஉவியைபு　　முற்றியைபு—எனவும்,

3 அடியெதுகை　　கூழையெதுகை
இணையெதுகை　　மேற்கதுவாயெதுகை
பொழிப்பெதுகை　　கீழ்க்கதுவாயெதுகை
ஒரூஉவெதுகை　　முற்றெதுகை—எனவும்,

4 அடிமுரண்　　கூழைமுரண்
இணைமுரண்　　மேற்கதுவாய்முரண்
பொழிப்புமுரண்　　கீழ்க்கதுவாய்முரண்
ஒரூஉமுரண்　　முற்றுமுரண்—எனவும்,

5 அடியளபெடை　　கூழையளபெடை
இணையளபெடை　　மேற்கதுவாயளபெடை
பொழிப்பளபெடை　　கீழ்க்கதுவாயளபெடை
ஒரூஉவளபெடை　　முற்றளபெடை—எனவும்,

அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை என்னும் தொடையும், தொடைவிகற்பமும் ஆமாறுணர்த்துவான் எடுத்துக்கொண்டார்.

அவற்றுள், இக் காரிகை அடிமோனையும், அடியியைபும் அடியெதுகையும், அடி முரணும், அடியளபெடையும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'எழுவாயெழுத் தொன்றின் மோனை' என்பது: அடிதோறும் முதலெழுத் தொன்றிவரத் தொடுப்பது அடிமோனைத்தொடை எனப்படும்; எ - று.

எழுவாயெனினும், ஆதியெனினும், முதலெனினும் ஒக்கும். மோனையெனினும், முதற்றொடையெனினும் ஒக்கும்.

'இறுதியியைபு' என்பது: அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், சொல்லானும் ஒன்றிவரத் தொடுப்பது அடியியைபுத்தோடை எனப்படும்; எ - று.

'இரண்டாம் வழுவா எழுத்தொன்றின் எதுகை' என்பது; அடிதோறும் முதற்கண் இரண்டாமெழுத் தொன்றி வரத் தொடுபபது அடியெதுகைத்தோடை எனப்படும்; எ - று.

'மாதே' என்பது: மகடூஉ முன்னிலை. 'இரண்டா மெழுத் தொன்றி னெதுகை' எனறது 'வழுவா வெழுத்து' என்று மிகுத்துச் சொல்லிய வதனல், இரண்டாமெழுத் தொன்றிவரினும் முதலெழுத்தெல்லாந் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து கட்டு என்பதற்குப் பட்டு என்பதல்லது பாட்டு என்பது எதுகையாகாது; காட்டு என்பதற்குப் பாட்டு என்பதல்லது பட்டு என்பது எதுகையாகாது எனக்கொள்க.

'மறுதலைத்த மொழியான் வரினு மூரண்' என்பது: அடிதோறும் முதற்கட் சொல்லானும், பொருளானும் மறு தலைப்படத் தொடுபபது அடிமுரண் தோடை எனப்படும்; எ - று.

'மொழியான் வரினும' என்ற உம்மையாற் பொருளான் வரினும் என்பதாயிற்று. 'அடிதோறும்' என்பது மத்திம தீபகம் எனக் கொள்க.

'முதன்மொழிக்கண் அழியா தளபெடுத் தொன்றுவ தர்கும் அளபெடையே' என்பது: அடிதோறும் முதற்கண் உயிரானும், ஒற்றனும் அளபெடுத்தொன்றிவரத் தொடுப் பது அடியளபேடைத்தோடை எனபபடும எ - று.

'அழியாது' என்று மிகுத்துச் சொல்லியவதனல் நான்குயிரளபெடையும், இரண்டொற் றளபெடையுந் தம்முள் ஒன்றிவரத் தொடுப்பது சிறப்புடைத்து, தொடை விகற்பத்துள் நான்குயிரளபெடையும், இரண் டொற்றள பெடையுந் தம்முள் மறுதலைப்படத் தொடுபினும் இழுக்காது எனக் கொள்க.

என்னை,

> "முதலெழுத் தொன்றின் மோனை யெதுகை
> முதலெழுத் தளவோ டொத்தது முதலா
> அஃதொழித் தொன்றி னாகு மென்ப
> இவ்விரு தொடைக்குங் கிளையெழுத் துரிய"

என்றார் பல்காயனார்.

> *"இறுவா [1]யொப்பினஃ தியைபென மொழிப"
> †"மொழியினும் பொருளினு முரணுதல் முரணே"

என்றார் தொல்காப்பியனார்.

> "அளபெடைத் தொடைக்கே அளபெடை ஒன்றும்"

என்றார் நத்தத்தனார்.

அந்த முதலாத் தொடுப்பதந் தாதி அடிமுழுதும்
வந்த மொழியே வருவ திரட்டை வரன்முறையான்
முந்திய மோனை முதலா முழுதுமொவ் வாதுவிட்டால்
செந்தொடை நாமம் பெறுநறு மென்குழல் தேமொழியே.

இ - கை. அந்தாதித்தொடையும், இரட்டைத்தொடையும், செந்தொடையும் ஆமா றுணர்த்துதல் நுதலிற்று.

'அந்தமுதலாத் தொடுப்ப தந்தாதி' என்பது: அடி தோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும், அசையானும், சீரானும் அடியானும் மற்றையடிக் காதியாகத் தொடுப்பது அந்தாதித்தொடை எனப்படும்; எ - று.

'அடிமுழுதும் வந்தமொழியே வருவதிரட்டை வரன் முறையான்' என்பது; ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பது இரட்டைத் தொடை எனப்படும்; எ - று.

'வரன் முறையான்' என்று மிகுத்துச் சொல்லிய வதனால், ஈற்றெழுத்தொன்று குறையினும் இழுக்காது; நாற்சீரின் மிக்கு வரப்பெறாது; எனக்கொள்க.

---

(பாடம்) 1. யொன்ற லியைபின் யாப்பே.
* தொல். பொருள். செய்யுளியல், கசு.
† தொல். பொருள். செய்யுளியல், கஎ.

'முந்திய மோனை முதலா முழுதும் ஒவ்வாது விட்டாற் செந்தொடை நாமம் பெறும்' என்பது; மேற் சொல்லப்பட்ட மோனை முதலாகிய தொடையும்,* தொடை விகற்பமும் போலாது வேறுபடத் தொடுப்பது செந்தொடை எனப் படும்; எ - று.

'முந்திய மோனை' என்று சிறப்பித்த வதனால் அசை யும், சீருந் தம்முள் மறுதலைப்படத் தொடுப்பது† சிறப் புடைத்தெனக்கொள்க.

'கறுமென் குழல் தேமொழியே' என்பது: மகடூஉ முன்னிலை.

என்னை?

"அடியுஞ் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியினஃ
தந்தாதித் [1]தொடையென் றறைதல் வேண்டும்"

என்றார் நத்தத்தனார்.

"ஒருசீ ரடிமுழுதும் வருவ திரட்டை"

என்றார் மயேச்சுரர்.

‡"சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லியற் புலவரது செந்தொடை யென்ப"

என்றார் தொல்காப்பியனார்.

"அசையினுஞ் சீரினு மிசையினும் எல்லாம்
இசையா தாவது செந்தொடை தானே"

என்றார் §காக்கைபாடினியார்.

---

(பாடம்) 1. தொடையென் றறியல் வேண்டும்; (யாப் பருங்கல விருத்தி பக்கம். கஅ௩.)

* தொடை வகற்பம் பின்சொல்லப்படுவது என்க.

† செந்தொடைக்குச் சிறப்புடைத்து என்க.

‡ தொல். பொருள். செய்யுளியல் - ௯௦௦.

§ என்றார் பல்காயனார் என்பது காணப்படுகின்றது; (யாப் பருங்கல விருத்தி.)

உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

மாவும்புண் மோனை யியைபின் னகைவடி யேரெதுகைக்
கேவின் முரணு மிருளபரந் தீண்டளபா அவளிய
ஓவலந் தாதி உலகுட னுமொக்கு மேயிரட்டை
பாவருஞ் செந்தொடை பூத்தவேன் ஞகும் [1]பணிமொழியே.
(கஅ)

இ-கை. அடிமோனை முதலாகிய முதற்றொடைஎட்டினுலும் வந்த இலக்கியங்கட்கு முதனினைப் புணர்த்துதல் நுதலிற்று.

'மாவும்புண் மோனை'

நேரிசை யாசிரியப்பா

''மாவும் புள்ளும் வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடை
மாயோள் இன்னுயிர்ப் புறத்திறுத் தன்றே''

இஃது அடிதோறும் முதலெழுத் தொன்றிவரத் தொடுத்தமையான அடிமோனைத்தொடை; எ - று.

'இயைபின்னகை'

நேரிசை யாசிரியப்பா

''இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே
நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே
ஆடமைத் தோளி ஊடலும் அணங்கே
அரிமதர் மழைக்கணும் அணங்கே
திருநுதற் பொறித்த திலகமும் அணங்கே''

இஃது அடிதோறும் இறுதிச்சீர் ஒன்றிவரத்தொடுத் தமையான அடியியைபுத் தொடை; எ - று.

'வடியே ரெதுகைக்கு'

இன்னிசை வெண்பா

''வடியேர்கண் ணீர்மல்க வான் பொருட்கட் சென்றார்
கடியார் கணங்குழாய் காணார்கொல் காட்டில்
இடியின் முழக்கஞ்சி யீர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை''

---

(பாடம்) 1. பனிமொழியே.

இஃது அடிதோறும் இரண்டாமெழுத் தொன்றிவரத் தொடுத்தமையான் அடியெதுகைத் தொடை; எ - று.

'எவின் முரணு மீருள் பரந்து'

நேரிசை யாசிரியப்பா

"இருள்பரந் தன்ன மாநீர் மருங்கில்
நிலவுக்குவித் தன்ன வெண்மண லொருசிறை
இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னி னன்ன நுண்டா தறைக்குஞ்
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணு முடையவா லணங்கே."

இஃது அடிதோறும் முதற்கண்ணே எல்லாம் மறுதலைப் படத் தொடுத்தமையான் அடிமுரண்தொடை; எ - று.

எவின் முரணுமென்பது எல்லா முரண்தொடையாலும் வரப்பெறும்; எ - று.

'ஈண்டள பா அவளிய'

பஃறொடை வெண்பா

"ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோ
டிஇ ரிரையுங்கொண் டிரளைப் பள்ளியுள்
தூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன்றேள்
மேஎ வலைப்பட்ட நம்போல் நறுநுதால்
ஓஒ உழக்குந் துயர்"

அஃது அடிதோறும் முதற்கண்ணே அளபெடுத் தொன்றிவரத் தொடுத்தமையான் அடியளபெடைத் தொடை எ - று.

'ஒவிலந்தாதி யுலகுடனும்'

நேரிசை யாசிரியப்பா

*"உலகுடன் விளக்கும் ஒளிநிகழ் அவிர்மதி
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை
முக்குடை நீழற் பொற்புடை யாசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவன்"

* திருப்பாமாலை.

ஆசனத் திருந்த திருந்தொளி அறிவனை
அறிவுசேர் உள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தர தென்ப
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை உலகே.''*

இது நான்கந்தாதித் தொடையும் வந்த செய்யுள்.

'ஒவிலந்தாதி' என்றவதனால் எல்லாவந்தாதியும் வரப் பெறும் என்று கொள்க.

'ஒக்குமே இரட்டை'

இன்னிசைச் சிந்தியல் வெண்பா

''ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்
விளக்கினிற் சிறெறி யொக்குமே யொக்குங்
குளக்கொட்டிப் பூவின் நிறம்.''

இஃது ஓரடி முழுவதும் ஒரு சொல்லே வரத் தொடுத்தமையால் இரட்டைத் தொடை; என்றவாறு.

இஃது இறுதிச்சீர் ஏகாரத்தாற் குறைபடினும் இழுக்காது; நாற்சீரின் மிக்குவரப் பெறாது எனக்கொள்க.

'பாவருஞ் செந்தொடை பூத்தவென் றுரும்.'

நேரிசை யாசிரியப்பா

''பூத்த வேங்கை [1]வியன்சினை யேறி
மயிலினம் அகவு நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே.''

இது மோனை முதலாகிய தொடையும், தொடை விகற்பமும் போலாது வேறுபடத் தொடுத்தமையாற் செந்தொடை. பாவரு மென்பதனை இறுதி விளக்காகக் கொண்டு பொருளுரைத்துக் கொள்க.

'பணிமொழியே' என்பது: மகடூஉ முன்னிலை.

இருசீர் மிசையிணை யாகும் பொழிப்பிடை [2]யிட்டொரூஉ
இருசீ ரிடையிட்ட தீறிலி கூழை முதலிறுவாய்
வருசீ ரயலில மேல்கீழ் வகுத்தமை தீர்கதுவாய்
வருசீர் முழுவதும் ஒன்றின்முற் றுமேன்ப மற்றவையே. (கசு)

---

* திருப்பாமாலை.

(பாடம்) 1. வியன்சினை யூடேயேறி.
2. யிட்டொருவாம்.

இ - கை. இணைமோனை முதலாகிய முப்பத்தைந்து தொடை விகற்பமும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'இருசீர் மிசையிணை யாகும்' என்பது: முதலிரு சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது இணைத் தொடை எனப்படும்; எ - று.

'பொழிப்பிடையிட்டு' என்பது முதற் சீர்க்கண்ணும் மூன்றாஞ் சீர்க்கண்ணும், மோனை முதலாயின வரத் தொடுப்பது பொழிப்பு எனப்படும்; எ - று.

'ஒரூஉவாம இருசீர் இடையிட்டது' என்பது நடுவிரு சீர்க்கண்ணுமின்றி முதற்சீர்க்கண்ணும், இறுதிச்சீர்க கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது ஒரூஉ எனப்படும்; எ - று.

'ஈறிலி கூழை' என்பது: இறுதிச்சீர்க்க ணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது கூழை எனப்படும்; எ - று.

முதலிறுவாய், வருசி ரயலில மேல்கீழ் வகுத்தமை நீர்கதுவாய்; என்பது: முதலயற்சீர்க்கணின்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப் பது மேற்கதுவாய் என்றும், ஈற்றயற்சீர்க்கண் இன்றி ஒழிந்த மூனறு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது கீழ்க்கதுவாய் என்றும் சொல்லப்படும்; எ - று.

இது நிரனிறை யெனக் கொள்க.

என்னை,

"கடையயல் முதலயல் கதுவாய் கீழ்மேல்"

என்றார் அவிநயனர்.

முதலயற் சீர்க்கண் இல்லாததனைக் கீழ்க்கதுவாயென வும், ஈற்றயற் சீர்க்கண் இல்லாததனை மேற்கதுவாயென் றும் வேண்டினர் கையனர் முதலாகிய ஒருசார் ஆசிரிய ரென்பதறிவித்தற்கு "மைதீர்கதுவாய்" என்று விதப் புரைத்தார் எனக் கொள்க.

'விதப்புக் கிளவி வேண்டுவது விளக்கும்'

'வருசீர் முழுவதும் ஒன்றின் முற்றாமென்ப' என்பது: எல்லாச் சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத்தொடுப்பது முற்று எனப்படும்; எ - று.

'மற்றவையே' என்பது இணைமோனை முதலிய முப்பத்தைந்து தொடை விகற்பமும்; எ - று. இஃது 'இறுதி விளக்கு' எனக் கொள்க.

'சீர்முழுது மொன்றின் முற்றும்' என்னாது, 'வருசீர்' என்று சிறப்பித்தது, இணைமோனை முதலாகிய முப்பத்தைந்து தொடை விகற்பமும் அளவடிக்கண்ணே வழங்கப்படும் என்பதூஉம், இணையியைபு முதலாகிய ஏழுவிகற்பமும் இறுதிச்சீரே முதற்சீராகக் கொண்டு வழங்கப்படும் என்பதூஉம் அறிவித்தற்கெனக் கொள்க.

என்னை,

*"இருசீர் மிசைவரத் தொடுப்பதை யிணையே"
†"முதலொடு மூன்றுஞ் சீர்த்தொடை பொழிப்பே"
‡"சீரிரண் டிடைவிடத் தொடுப்ப தொரூஉத் தொடை"
§"மூவொரு சீரு முதல்வரத் தொடுப்பது
கூழை யென்மனார் குறியுணர்ந் தோரே"
§"முதலயற் சீரொழித் தல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கது வாயே"
¶"ஈற்றயற் சீரொழித் தெல்லாந் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமைய தாகும்"
**"சீர்தொறுந் தொடுப்பது முற்றெனப் படுமே"

என்றாராகலின்.

இயைபுத் தொடைக்கே ஏழு விகற்பமும் இறுதிச்சீர் முதலாகக் காட்டினார் கையடனார் முதலிய ஒருசார் ஆசிரியர் எனக் கொள்க.

"மோனை எதுகை முரணியை பளபெடை
பாதம் இணையே பொழிப்பொ டொரூஉத்தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றொடு சிவணுமா ரவையே"

என்பது யாப்பருங்கலம் (சூ. 34)

---

*...** யாப்பருங்கலம் சஉ - சஅ.

## உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

மோனை விகற்பம் அணிமலர் மொய்த்துட னுமிழையிற்
கேனை யெதுகைக் கிளம்பொன்னி னன்ன இனிமுரணிற்
கான விகற்பமுஞ் சீறடிப் போ தளபெடையின்
தான விகற்பமுந் தாஅட்டாஅ மரையென்ப தாழ்குழலே.

(௨௦)

இ - கை. இணைமோனை முதலாகிய முப்பத்தைந்து தொடை விகற்பங்களால் வந்த இலக்கியங்கட்கு முதல்நினைப் புணர்த்துதல் நுதலிற்று.

'மோனை விகற்பம் அணிமலர்'

### நேரிசை வெண்பா

"அணிமல ரசோகின் றளிர்நலங் கவற்றி (இணைமோனை)
அரிக்குரற் கிண்கிணி யரற்றுஞ் சீறடி (பொழிப்பு)
அம்பொற் கொடிஞ்சி நெடுந்தே ரகற்றி (ஒரூஉ)
அகன்ற வல்கு லந்நுண் மருங்குல் (கூழை)
அரும்பிய கொங்கை யவ்வளை யமைத்தோள் (மேற்கது)
அவிர்மதி யனைய திருநுத லரிவை (கீழ்க்கது)
அயில்வே லனுக்கி யம்பலைத் தமர்ந்த (முற்று)
கருங்கயல் நெடுங்க ணோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே"

இதனுள் இணைமோனை முதலாகிய ஏழு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

'மொய்த்துடனு மிழையிற்று'

### நேரிசை யாசிரியப்பா

"மொய்த்துடன் றவழு முகிலே பொழிலே (இணை இயைபு)
மற்றத னயலே முத்துறழ் மணலே (பொழிப்பு)
நிழலே இனியத னயலது கடலே (ஒரூஉ)
மாதர் நகிலே வல்லே யியலே (கூழை)
வில்லே நுதலே வேற்கண் கயலே (மேற்கது)
பல்லே தளவம் பாலே சொல்லே (கீழ்க்கது)
புறலே குழலே மயிலே யியலே (முற்று)
அதனால்,
இவ்வயின் இவ்வுரு இயங்கலின்
எவ்வயி னோரு மிழப்பர்தந் நிறையே."

இதனுள் இணையியைபு முதலிய ஏழு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

'இணையெதுகைக் இனம்பொன்னி னன்ன'

நேரிசை யாசிரியப்பா

''பொன்னி னன்ன பொறிசுணங் கேந்திப் (இணை எதுகை)
பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி (பொழிப்பு)
மின்னவி ரொளிவடந் தாங்கி மன்னிய (ஒரூஉ)
நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி (கூழை)
என்னையு மிடுக்கண் துன்றுவித் தின்னடை (மேற்கது)
அன்ன மென்பெடை போலப் பன்மலர்க் (கீழ்க்கது)
கன்னியம் புன்னை யின்னிழல் துன்னிய (முற்று)
மயிலேய் சாயலவ் வாணுதல்
அயில்வேல் உன்கணெம் அறிவுதொலைத் தனவே.''

இதனுள் இணையெதுகை முதலாகிய ஏழுவிகற்பமும், முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

'இனி முரணிற்கான விகற்பமுஞ் சிறடிப் பேரது'

நேரிசை யாசிரியப்பா

''சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குபு (இணை முரண்)
சுருங்கிய நுசுப்பிற் பெருகுவடந் தாங்கிக் (பொழிப்பு)
குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து (ஒரூஉ)
சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன் (கூழை)
வெள்வளைத் தோளுஞ் சேயரிக் கருங்கணும் (மேற்கது)
இருக்கையு நிலையும் ஏந்தெழி லியக்கமும் (கீழ்க்கது)
துவர்வாய்த் தீஞ்சொலு முவந்தெனை முனியாது (முற்று)
என்றும் இன்னண மாகுமதி
பொன்றிகழ் நெடுவேற் போர்வல் லோயே.''

இதனுள் இணைமுரண் முதலாகிய ஏழுவிகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

'அளபெடையின் தானவிகற்பமுந் தாஅட்டாஅ மரை யென்ப'

நேரிசை யாசிரியப்பா

''தாஅட் டாஅ மரைமலர் உழக்கிப் (இணையளபெடை)
பூஉக் குவளைப் போஒ தருந்திக் (பொழிப்பு)
காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய் (ஒரூஉ)

மாஅத் தாஅன் மோஒட் டெருமை (கூழை)
தேஎம் புனலிடைச் சோஒர் பாஅல் (மேற்கது)
மீஇ ஞஅர்ந் துகளுஞ் சீஇர் (கீழ்க்கது)
ஆஅ ஞஅ நீஇ ணீஇர் (முற்று)
ஊரன் செய்த கேண்மை
அவ்வளைத் தோளிக் கலரா னவே."

இதனுள் இணையளபெடை முதலாகிய ஏழுவிகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

'தானவிகற்பம்' என்று சிறப்பித்தவதனால் இரண்டளபெடையும் வரப்பெறும் எனக்கொள்க.

'தாழ்குழலே' என்பது மகடூஉ முன்னிலை.

உறுப்பியற் செய்யுட்களின் முதல்நினைப்புக் காரிகை

கந்தமுந் தேனுஞ் சுருக்கமும் காதற் குறில்குறிலே
சந்தமுந் தீரசை தேமாத்தண் குன்றந்தன் சீர்திருவுங்
கோங்கவிழ் கோதாய் குறடிரை வெள்ளைக் கறத்தெழுவாய்
அந்தமு மாவும் இருசீரு மோனையு மாமுறுப்பே. (உக)

உறுப்பியல்

முற்றும்

———

# உ. செய்யுளியல்

## 1. பாவுக்குரிய அடியும் ஓசையும்

வெண்பா அகவல் கலிப்பா அளவடி வஞ்சியேன்னும்
ஒண்பா அடிகுறள் சிந்தென் றுரைப்ப ஒலிமுறையே
திண்பா மலிசெப்பல் சீர்சால் அகவல்சேன் றேங்குதுள்ளல்
நண்பா அமைந்த நலமிகு தூங்கல் நறுநுதலே. (உஉ)

என்பது காரிகை. இவ்வியல் என்ன பெயர்த்தோ வெனின், வெண்பா, வெண்டாழிசை, வெண்டுறை, வெளி விருத்தம்; ஆசிரியப்பா, ஆசிரியத்தாழிசை, ஆசிரியத் துறை, ஆசிரிய விருத்தம்; கலிப்பா, கலித்தாழிசை, கலித் துறை, கலிவிருத்தம் ; வஞ்சிப்பா, வஞ்சித்தாழிசை, வஞ் சித்துறை, வஞ்சிவிருத்தம் ; மருட்பா எனக் கிடந்த செய் யுட்களை ஆமாறுணர்த்திற்றுதலாற் 'செய்யுளியல்' என்னும் பெயர்த்து.

*"வெண்பா முதலா விளம்புநாற் பாவொலி*
*செப்பல் அகவல் சீர்கெழு துள்ளல்*
*தூங்க லென்ப தொன்னூற் புலவர்"*

என்றாகலின்,

இவ்வியலுள் இக் காரிகை என்னுதலிற்றோ வெனின், வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என்னும் நான்கு பாவிற்கும் அடியும் ஓசையும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'வெண்பா அகவல் கலிப்பா அளவடி'

என்பது: வெண்பாவும், ஆசிரியப்பாவும், கலிப்பாவும் நாற் சீரடியான் வரப்பெறும் ; எ - று.

'வஞ்சியென்னும் ஒண்பாவடி குறள்சிந்தென் றுரைப்ப'
என்பது: வஞ்சிப்பா இருசீரடியானும், மூச்சீரடியானும் வரப்பெறு மென்று சொல்லுவர் புலவர் ; எ - று.

"வஞ்சியென்னு மொண்பா" என்று சிறப்பித்தவத னால் வெண்பாவின் ஈற்றடியும் நேரிசை யாசிரியப்பாவின் ஈற்றயலடியும், கலிவெண்பாவின் ஈற்றடியும் மூச்சீரான்

வரப்பெறுமென்றும், இணைக்குற ளாசிரியப்பாவின் இடையடிகள் இரண்டும், பலவும், குறளடியானும் சிந்தடியானும் வரப்பெறு மென்றும், கலியினுள்ளும் ஒருசார் அம்போதரங்கவுறுப்பும் இருசீரடியானும், முச்சீரடியானும் வரப்பெறுமென்றுங் கொள்க.

[1]அராகவுறுப்புகள் அளவடி முதலாய எல்லாவடியானும் வரப்பெறு மென்றுங் கொள்க.

அவை போக்கித் தத்தம் இலக்கணச் சூத்திரத்துள்ளே காட்டுதும்.

என்னை,

*"கலியொடு வெண்பா அகவல் கூறிய
அளவடி தன்னால் நடக்குமற் றவையே.

†"சிந்தடி குறளடி யென்றிரண் டடியான்
வஞ்சி நடக்கும் வழக்கினை யுடைய"

என்றார் காக்கைபாடினியார்.

'ஒலிமுறையே திண்பா மலிசெப்பல் சீர்சால் அகவல் சென்றேங்குதுள்ளல் நண்பா வமைந்த நலமிகு தூங்கல்' என்பது: வெண்பா, செப்பலோசையான் வரும்; ஆசிரியப்பா, அகவலோசையான் வரும்; கலிப்பா துள்ளலோசையான் வரும்; வஞ்சிப்பா, தூங்கலோசையான் வரும்; எ - று.

'கறுநுதலே' என்பது மகடூஉ முன்னிலை.

‡'திண்பா மலிசெப்பல்' என்று சிறப்பித்தவதனால், செப்பலோசை மூன்று வகைப்படும்; ஏந்திசைச் செப்பலும், தூங்கிசைச் செப்பலும், ஒழுகிசைச் செப்பலும் என.

---

*†யாப்பருங்கலம் ௨௭, ௨௮ : ஈண்டு யாப்பருங்கல விருத்தியில், 'அளவடி தன்னா னடக்கு மன்னவையே' என்றும் 'வஞ்சி நடக்கு மென்மனார் புலவர்' என்று முள.

‡இந் நூலாசிரியர் செப்பலோசை முதலியவற்றை மும்மூன்றாகப் பாகுபாடு செய்யாது 'வளம்பட' என்பதனால் போதப்பட ஒவ்வோருதாரணமே காட்டினார்.

(பாடம்.) 1. 'அராக உறுப்புகள் நாற்சீரின் மிக்கு வருவனவும் உள எனக்கொள்க.

என்னை,

[1]"வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை
ஏந்திசைச் செப்ப லென்மனார் புலவர்"　　12.

[2]"இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்
தூங்கிசைச் செப்ப லென்மனார் புலவர்"　　குறள் . 131

[3]"வெண்சீ ரொன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய பாட்டே யொழுகிசைச் செப்பல்"　　134

என்றாராகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :—

குறள் வெண்பா

*"யாதானு நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத ஆறு."

இது வெண்சீர் வெண்டளையான் வந்தமையால், ஏந்திசைச் செப்பலோசை.

குறள் வெண்பா

†"பாலொடு—வாலெயி றூறிய நீர்"

இஃது இயற்சீர் வெண்டளையான் வந்தமையால், தூங்கிசைச் செப்பலோசை.

---

(பாடம்) 1. "வெண்சீர் வெண்டளை விரவிய தூக்கை
ஏந்திசைச் செப்பல் என்மனார் புலவர்"

2. "இயற்சீர் வெண்டளை யான் வரும் யாப்பை
மயக்கமில் புலவர் தூங்கிசை என்ப"

3. "வெண்சீ ரொன்றலும் இயற்சீர் விகற்பமும்
ஒன்றிய யாப்பே ஒழுகிசைச் செப்பல்"

இவை மூன்றும் சங்க யாப்பு என்பது யாப்பருங்கல விருத்தியிற் கண்டது.

* குறள். கல்வி - எ.

† குறள். காதற்சிறப்பு. க. (இது முன் உ௮ ஆம் பக்கத்தில் வந்தமை காண்க.)

குறள் வெண்பா

*"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும்."

இது வெண்சீர் வெண்டளையும், இயற்சீர் வெண்டளையும் விரவி வந்தமையால், ஒழுகிசைச் செப்பலோசை.

'சீர்சாலகவல்' என்று சிறப்பித்தவதனுல் அகவலோசை மூன்று வகைப்படும்; ஏந்திசை யகவலும், தூங்கிசை யகவலும், ஒழுகிசை யகவலும் என.

என்னை,

"நேர்நே ரியற்றளை யான்வரும் அகவலும்
நிரைநிரை யியற்றளை யான்வரும் அகவலும்
ஆயிரு தளையுமொத் தாகிய அகவலும்
ஏந்தல் தூங்கல் ஒழுகல் என்றிவை
ஆய்ந்த நிரனிறை ஆகும் என்ப"

என்றாராகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:—

நேரிசை யாசிரியப்பா

†"போது சாந்தம்—துன்று வாரே."

இது நேரொன் றாசிரியத்தளையான் வந்தமையால், ஏந்திசை யகவலோசை.

நேரிசை யாசிரியப்பா

‡"அணிநிழல்—பரிசறுப்பவரே."

இது நிரையொன் றாசிரியத்தளையான் வந்தமையால், தூங்கிசை யகவலோசை.

நேரிசை யாசிரியப்பா

§"குன்றக் குறவன்—சுணங்கே."

---

*குறள். புலான்மறு - ௬0.
†இச் செய்யுளை ௨௧ ஆம் பக்கத்திற் காண்க.
‡இச் செய்யுளை ௨௧ ஆம் பக்கத்திற் காண்க.
§இச் செய்யுளை ௨௭ ஆம் பக்கத்திற் காண்க.

இது நேரொன்றாசிரியத்தளையும் நிரையொன்றாசிரியத் தளையும் விரவி வந்தமையால், ஒழுகிசை யகவலோசை.

'சென்றேங்கு துள்ளல்' என்று சிறப்பித்தவதனால், துள்ளலோசை மூன்று வகைப்படும்; ஏந்திசைத் துள்ளலும், அகவல் துள்ளலும், பிரிந்திசைத் துள்ளலும் என.

என்னை,

"ஏந்திசைத் துள்ளல் கலித்தளை இயையின்
வெண்டளை தன்றளை யென்றிரண் டியையின்
ஒன்றிய அகவல் துள்ளலென் றோதுப"

"தன்றளை பிறதளை யென்றிவை யனைத்தும்
பொருந்தி வரினே பிரிந்திசைத் துள்ளல்"

என்றாராகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

தரவுகொச்சகக் கலிப்பா

"முருகவிழ்தா மரைமலர்மேல் முடியிமையோர் புடைவரவே
வருசினனார் தருமறைநால் வழிபிழையா மனமுடையார்
இருவினைபோய் விழமுனிவா வெதிரியகா தியைஅரியா
நிருமலராய் அருவினராய் நிலவுவர்சோ தியினிடையே."

இது கலித்தளையான் வந்தமையால், ஏந்திசைத் துள்ளலோசை.

தரவுகொச்சகக் கலிப்பா

*"செல்வப்போர்—ஒளித்ததே."

இது வெண்சீர் வெண்டளையும், கலித்தளையும் விரவி வந்தமையால்; அகவல் துள்ளலோசை.

கலிப்பா

"குடநிலைத் தண்புறவிற் கோவலர் எடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவில் தகையேறு மரம்பாய்ந்து
வீங்குமணிக் கயிறுரீஇத் தாங்குவனத் தேறப்போய்க்

*இச் செய்யுளை ௩௪ ஆம் பக்கத்திற் காண்க.

கலையினொடு முயலிரியக் கடுமுல்லை முறுவலிப்ப
எனவாங்கு
ஆனொடு புல்லிப் பெரும்புதல் முனையும்
கானுடைத் தவர்தேர் சென்ற வாறே."

இது பல தளையும் விரவி வந்தமையால், பிரிந்திசைத் துள்ளலோசை.

'நண்பா அமைந்த நலமிகு தூங்கல்' என்று சிறப்பித்த வதனால், தூங்கலோசை மூன்று வகைப்படும்; ஏந்திசைத் தூங்கலும், அகவற் றூங்கலும், பிரிந்திசைத் தூங்கலும் என.

என்னை,

"ஒன்றிய வஞ்சித் தளையே வரினும்
ஒன்றா வஞ்சித் தளையே வரினும்
என்றிவை யிரண்டும் பிறவு மயங்கினும்
ஏந்த லகவல் பிரிந்திசைத் தூங்கலென்
றாய்ந்த நிரனிறை யாகு மென்ப"

என்றாகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :—

வஞ்சிப்பா

"வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளினை
நினைத்தன்பொடு தொழுதேத்தினர்
நாளும்,
மயலார் நாற்கதி மருவார்
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே."

இஃது ஒன்றிய வஞ்சித்தளையான் வந்தமையால், ஏந்திசைத் தூங்கலோசை.

வஞ்சிப்பா

"வானோர்தொழ வண்டாமரைத்
தேனார்மலர் மேல்வந்தருள்
ஆனாவருள் கூரறிவனைக்
கானார்,
மலர்கொண் டேத்தி வணங்குநர்
பலர்புகழ் முத்தி பெறுகுவர் விரைந்தே"

இஃது ஒன்றாத வஞ்சித்தளையான் வந்தமையால் அகவல் தூங்கலோசை.

வஞ்சிப்பா

*"மந்தாநிலம்—மகிழ்ந்தே"

இது பலதளையும் விரவி வந்தமையால், பிரிந்திசைத் தூங்கலோசை.

உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

வளம்பட வென்பது வெள்ளைக் ககவற் குதாரணஞ்சேங்
களம்படக் கொன்று கலிக்கரி தாயசுண் ணுர்கொடிபோல்
துளங்கிடை மாதே சுறமறி தோன்னலத் தன்புலம்பென
றுளங்கொடு நாவலர் ஓதினர் வஞ்சிக் குதாரணமே. (உரு)

இ - கை. அவ்வடிகளானும், ஓசைகளானும் வந்த இலக்கியங்கட்கு முதல்நினைப் புணர்த்துதல் நுதலிற்று.

'வளம்பட வென்பது வெள்ளைக்கு'

இன்னிசை வெண்பா உ.ம்

†"வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
அளந்தன போக மவரவ ராற்றான்
விளங்காய் திரட்டினா ரில்லை—களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில்."

இஃது அளவடியானும், செப்பலோசையானும் வந்த இன்னிசை வெண்பா.

'அகவற் குதாரணஞ் செங்களம் படக்கொன்று'

நேரிசை ஆசிரியப்பா

‡"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பிற் செங்கோட் டியானை
கழல்தொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே."

*இச் செய்யுளை ௩௩ ஆம் பக்கத்திற் காண்க.
†நாலடியார், பழவினை - ௩. ‡குறுந்தொகை - ௧.

இஃது அளவடியானும், அகவலோசையானும் வந்த நேரிசை யாசிரியப்பா.

'கலிக் கரிதாய'

நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா

*"அரிதாய அறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி;

இது தரவு

அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாய் காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே;

இன்பத்தில் இகந்தொரீஇ யிலைதீய்ந்த உலவையால்
துன்புறூஉந் தகையவே காடென்றார் அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே;

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉந் தகையவே காடென்றார் அக்காட்டுள்
இன்னிழ லின்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தன
[ரே.

இவை மூன்றுந் தாழிசை

எனவாங்கு

இது தனிச்சொல்.

இனைநலம் உடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழில் உண்கணு மாடுமால் இடனே."

இது சுரிதகம்,

இஃது அளவடியானும், துள்ளலோசையானும் வந்த நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா.

---

*கலித்தொகை - ௧௧.

'கண்ணார் கொடிபோற் றுளங்கிடை மாதே'
என்பது: மகடூஉ முன்னிலை.

'சுறமறி தொன்னலத்தின் புலம்பென் றுளங்கொடு
நாவல ரோதினர் வஞ்சிக் குதாரணமே'

குறளடி வஞ்சிப்பா

"சுறமறிவன துறையெல்லாம்
இறவின்பன வில்லெல்லாம்
மீன்றிரிவன கிடங்கெல்லாம்
தேன்முழ்வன பொழிலெல்லாம்
எனவாங்கு
தன்பணை தழீஇய விருக்கை
மன்கெழு [1]நெடுமதின் மன்ன னூரே."

இஃது இருசீரடியானும், தூங்க லோசையானும் வந்தமையால், குறளடி வஞ்சிப்பா.

சிந்தடி வஞ்சிப்பா

"தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோண்மேல்
பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி
என்னலத்தகை யிதுவென்னென எழில்காட்டிச்
சொன்னலத்தகைப் பொருள்கருத்தி னிற்சிறந்தாங்
கெனப் பெரிதும்
கலங்களு ரெய்தி விடுப்பவும்
சிலம்பிடைச் செலவுஞ் சேணிவந் தற்றே."

இஃது முச்சீரடியானும், தூங்க லோசையானும் வந்தமையால் சிந்தடி வஞ்சிப்பா. 'உதாரணமே' என்பது இறுதி விளக்காகக் கொள்க.

குறள் வெண்பா, நேரிசை வெண்பா

ஈரடி வெண்பாக் குறள்குறட் பாவிரண் டாயிடைக்கட்
சீரிய வான்றனிச் சொல்லடி மூய்ச்சசெப்ப லோசைகுன்று
தோரிரண் டாயும் ஒருவிகற் பாயும் வருவதுண்டேல
நேரிசை யாகு நெறிசுரி பூங்குழல் நேரிழையே.　　உச

(பாடம்) 1. செங்கோல்.

இ - கை. குறள்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடைவெண்பா, நேரிசைச்சிந்தியல் வெண்பா, இன்னிசைச்சிந்தியல் வெண்பா எனவும்,

நேரிசை யாசிரியப்பா, இணைக்குற ளாசிரியப்பா, நிலை மண்டில வாசிரியப்பா, அடிமறிமண்டில வாசிரியப்பா எனவும்,

நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா, வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா, கலிவெண்பா, வெண்கலிப்பா, தரவு கொச்சகக் கலிப்பா, தாவிணைக் கொச்சகக் கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா எனவும்,

குறளடி வஞ்சிப்பா, சிந்தடி வஞ்சிப்பா எனவும்,

புறநிலை வாழ்த்து மருட்பா, கைக்கிளை மருட்பா, வாயுறை வாழ்த்து மருட்பா, செவியறிவுறூஉ மருட்பா எனவுங் கிடந்த பாவிகற்பங்களுட் செப்பலோசையுடைத் தாய், ஈற்றடி முச்சீராய், ஏனையடி நாற்சீராய், வெண்சீரும் இயற்சீரும் வந்து, வெண்டளை தட்டு, வேற்றுத்தளை விரவாது, காசு, பிறப்பு, நாள், மலர் என்னும் வாய்பாட்டா லிறும் வெண்பாவினை அடியானும், தொடையானும், ஓசையானும், பெயர் வேறுபாடுணர்த்துவான் எடுத்துக் கொண்டார்.

அவற்றுள், இக் காரிகை குறள்வெண்பாவும், நேரிசை வெண்பாவும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

ஈரடி வெண்பாக்குறள் என்பது, இரண்டடியான் வரும் வெண்பா குறள் வெண்பா எனப்படும்; எ - று.

என்னை ?

"தொடையோ னடியிரண் டாகி வருமேற்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே"

என்றார் காக்கைபாடினியார்.

"ஈரடி யியைந்தது குறள்வெண் பாவே"

என்றார் அவிநயனார்.

### குறள் வெண்பா

*"உருவுகண் டெள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னூர் உடைத்து."
†"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்."

இவை இரண்டடியான் இரண்டு விகற்பத்தானும், ஒரு விகற்பத்தானும் வந்த குறள் வெண்பா.

'குறட்பா விரண்டா யிடைக்கட் சிறிய வான்றனிச் சொல்லடி மூய்ச் செப்பலோசை குன்று தோரிரண்டாயும் ஒரு விகற்பாயும் வருவதுண்டேல் நேரிசையாகும்' என்பது :

இரண்டு குறள்வெண்பாவாய் நடுவு முதற்றொடைக் கேற்ற தனிச்சொல்லால் அடி நிரம்பிச், செப்பலோசை வழுவாது முதலிரண்டடியும் ஒரு விகற்பமாய்க் கடையிரண் டடியும், மற்றொரு விகற்பமாய் வரினும், நான்கடியும் ஒரு விகற்பமாய் வரினும் இருகுறள் நேரிசை வெண்பா எனப்படும் ; எ - று.

அவை வருமாறு :—

### நேரிசை வெண்பா

"தடமண்டு தாமரையின் றாதா டலவன்
இடமண்டிச் செல்வதனைக் கண்டு—பெடைநொண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்நடிந்
தாழி நடாயினு னூர்."

"அரிய வரைகீன்டு காட்டுவார் யாரே
பெரிய வரைவயிரங் கொண்டு—[1]தெரியிற்
கரிய வரைநிலையார் காய்ந்தாலென் செய்வார்
பெரிய வரைவயிரங் கொண்டு."

இவை இரண்டு குறள்வெண்பாவாய், நடுவுமுதற் றொடைக்கேற்ற தனிச்சொல்லான் அடிநிரம்பிச், செப்ப லோசை வழுவாது இரண்டு விகற்பத்தானும், ஒரு விகற்பத் தானும் வந்த இருகுறள் நேரிசை வெண்பா.

---

(பாடம்) 1. நெறியீர்.
*குறள், வினைத்திட்பம் - எ.　　†குறள். கல்வி - ௯.

'ஓரியவொன்றனிச் சொல்லடி மூய்' என்று சிறப்பித்த வதனால், முதற் குறட்பாவினோடு தனிச்சொல் இடைவேறுபட்டு விட்டிசைப்பின் ஒற்றுமைப்படாத உலோகங்களை, ஒற்றுமைப்படப் பற்றாசிட்டு விளக்கினாற்போல முதற்குறட்பாவி னிறுதிக்கண் ஒன்றும், இரண்டும் அசைகூட்டி உச்சரிக்கப்பட்டு இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவனவு முள ; அவை ஒருசார் ஆசிடை நேரிசை வெண்பா எனக் கொள்க.

அவை வருமாறு:—

நேரிசை வெண்பா

"தாமரையின் றாதாடித் தண்டுவலைச் சேறளைந்து
தாமரையின் நாற்றமே தானுறுந்—தாமரைபோற்
கண்ணன் முகத்தான் கரதலத்தான் சேவடியென்
கண்ணார்வஞ்[1] செய்யுங் கருத்து"

*"கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கே செய்யா—ஒருவிலையே
முட்டின்றி மூன்று முடியுமேல் அஃதென்ப
பட்டினம் பெற்ற கலம்."

இவை முதற் குறட்பாவின் இறுதிக்கண் ஈரசை யானும், ஓரசையானும் ஆசிட்டு இரண்டு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

†"ஆர்த்த[2] வறிவின ராண்டிளைய ராயினுங்
காத்தோம்பித் தம்மை யடக்குப—மூத்தொறூஉந்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்
போத்தறார் புல்லறிவி னார்."

"வஞ்சியே னென்றவன்ற னூருரைத்தான் யானுமவன்
வஞ்சியா னென்பதனால் வாய்நேர்ந்தேன்—வஞ்சியான்
வஞ்சியேன் வஞ்சியே னென்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் கோ."

இவை முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஓரசையானும் ஈரசையானும் ஆசிட்டு ஒரு விகற்பத்தான் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

---

(பாடம்) 1. செய்த. 2. வரவினரா யாண்டிளைஞ.
*நாலடியார், அறிவு - ௧௦. †நாலடியார், கயமை - ௧.

'நெறிசுரி பூங்குழ னேரிழையே' என்பது: மகடூஉ முன்னிலை. 'வெண்பா வகவல் கலிப்பா ஞவடி வஞ்சி' என்னும் காரிகையுள், வெண்பா செப்பலோசையான் வரு மென்றும், ஈண்டுஞ் செப்பலோசை குன்ருதென்றுங் கூறியது, கூறியது கூறிற்ருகாது.

என்னை,

"கூறியது கூறினுங் குற்ற மில்லை
வேருெரு பொருளை விளக்கு மாயின்"

என்ருராகலின்.

ஒருசார் பிற பாக்களைத் தத்தம் உதாரண வாய்பாட்டால் ஓசையூட்டும்பொழுது தத்தமோசையிற் சிறிது வழுவி வருவன உளவாயினும், வெண்பாவிற்குச் சிறிதும் செப்பலோசை வழுவலாகாதென்று யாப்புறுத்தற் பொருட்டாகவும் செப்பலோசையிற் சிறிது வழுவினுந் நேரிசை இன்னிசை வெண்பாக்களை ஒருபுடை ஒப்புமை நோக்கி வெண்டுறைப்பாற்படுத்து வழங்கினும் இழுக்கா தென்பது அறிவித்தற்காகவும் எனக் கொள்க.

என்னை,

"தத்தம் பாவினத் தொப்பினுங் குறையினும்
ஒன்றென் றெவ்வா வேற்றுமை வகையாற்
பாத்தம் வண்ண மேலா வாயிற்
பன்போல் விகற்பம் பாவினத் தாகும்"

என்ருர் கையனர்.

"குறட்பா இரண்டடி நால்வகைத் தொடையான்
முதற்பா தனிச்சொலின் அடிமூஉய் இரண்டு
விகற்பின் நடப்பன நேரிசை வெண்பா"

என்ருர் அவிநயனர்.

"இரண்டா மடியின திறுெருஉ வெய்தி
முரண்ட வெதுகைய தாயினு மாகா
திரண்டு துணியா இடைநனி போழ்ந்து
நிரந்தடி நான்கின நேரிசை வெண்பா"

என்ருர் காக்கைபாடினியார்.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

உருவுகண் டெள்ளா வுடையார் குறண்மட வாய்தடமண்
டரிய வரைகீண் டிருகுற ணேரிசை தாமரையின்
கருமமு மார்த்தவும் வஞ்சியுங் காமர் தனிச்சொன்மூன்று
நேரிநுண் கருங்குழ ணேரிழை யாசிட்ட நேரிசையே. (௨௫)

இவ் வுரைச் சூத்திரக் காரிகையின் வழியே குறள் வெண்பாவிற்கும், நேரிசை வெண்பாவிற்கும், ஆசிடை நேரிசை வெண்பாவிற்குங் காட்டிய இலக்கியங்களை முதல் நினைத்துக்கொள்க.

இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா

ஒன்றும் பலவும் விகற்பொடு நான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பினஃ தின்னிசை துன்னும் அடிபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை யாஞ்சிறை வண்டினங்கள்
துன்றுங் கருமென் குழற்றுடி யேரிடைத் தூமொழியே. (௨௬)

இ - கை. இன்னிசை வெண்பாவும் பஃறொடை வெண் பாவும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'ஒன்றும் பலவும் விகற்பொடு நான்கடியாய்த் தனிச் சொலின்றி நடப்பினஃ தின்னிசை துன்னும்' என்பது.

ஒரு விகற்பத்தானும், பல விகற்பத்தானும் வந்து, நான்கடியாய்த் தனிச்சொல்லில்லாமல் நடப்பின் அஃது இன்னிசை வெண்பா எனப்படும்; எ - று.

அவை வருமாறு :—

*"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்"

*நாலடியார். அறன்வலி - ௧.

*"துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டு நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்."

இவை நான்கடியாய்த் தனிச்சொல்லின்றி ஒரு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

†"இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
ஒருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம்."

இது, நான்கடியாய்த் தனிச்சொல்லின்றிப் பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

'ஒன்றல்லன வெல்லாம் பல' என்பது தமிழ் நடை.

என்னை,

"ஒன்றல் லவைபல தமிழ்நடை வடநூல்
இரண்டல் லவைபல என்றிசி னோரே"

என்றாராகலின்.

'துன்னும்' என்று மிகுத்துச் சொல்லிய வதனால், இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று மூன்று விகற்பத்தான் வருவனவும், மூன்றாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று இரண்டு விகற்பத்தான் வருவனவும், பல விகற்பாகி அடிதோறும் ஒரூஉத்தொடை பெற்று வருவனவும், பிறவாற்றானும், நேரிசை வெண்பாவிற் சிறிது வேறுபட்டு நான்கடியான் வருவனவும் இன்னிசை வெண்பா எனப்படும்.

அவை வருமாறு :—

‡"அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்."

*நாலடியார், செல்வநிலை - உ. †நாலடியார், அறன்வலி - கூ
‡நாலடியார், மேன்மக்கள் - க.

மூன்று விகற்பம்

"மலிதேரான் கச்சியும் மாகடலுந் தம்முள்
ஒலியும் பெருமையு மொக்கும்—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும்"

இவை இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

*"வளம்பட வேண்டாதார்—செய்தாரு மில்"

இது மூன்ருமடியின் இறுதி தனிச்சொற் பெற்று இரண்டு விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

†"கடற்குட்டம் போழ்வர் கலவர்—படைக்குட்டம்
பாய்மா வுடையா னுடைக்கிற்குந்—தோமில்
தவக்குட்டந் தன்னுடையா னீந்தும்—அவைக்குட்டம்
கற்ருன் கடந்து விடும்"

‡"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை; மழையும்
தவமிலா ரில்வழி யில்லை; தவமும்
அரசிய லில்வழி இல்லை; அரசனும்
இல்வாழ்வா ரில்வழி யில்."

இவை அடிதோறும் ஒரூஉத்தொடை பெற்று, பல விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா.

§"இன்றுமை வேண்டி னிரவெழுக—இந்நிலத்து
மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டி னறஞ்செய்க—வெல்வது
வேண்டின் வெகுளி விடல்."

இஃது அடிதோறும் ஒரூஉத் தொடைபெற்று மூன்று விகற்பத்தான் வந்த இன்னிசை வெண்பா. பிறவும் வந்துழிக் கண்டுகொள்க.

---

*இச் செய்யுள் ௬௬ - ஆவது பக்கத்திற் செப்பலோசைக்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

†நான்மணிக்கடிகை - ௧அ. ‡நான்மணிக்கடிகை - ௨அ.

§நான்மணிக்கடிகை - ௧எ.

என்னை,

“தனிச்சொல் தழுவல வாகி விகற்பம்
பலபல தோன்றினு மொன்றே வரினும்
இதற்பெய ரின்னிசை யென்றிசி னோரே.”

“ஒருவிகற் பாகித் தனிச்சொ லின்றியும்
இருவிகற் பாகித் தனிச்சொ லின்றியுந்
தனிச்சொற் பெற்றுப் பலவிகற் பாகியுந்
தனிச்சொ லின்றிப் பலவிகற் பாகியும்
அடியடி தோறும் ஒருஉத்தொடை யடைநவும்
எனவைந் தாகும் இன்னிசை தானே”

என்றார் காக்கைபாடினியார்.

‘அடிபலவாய்ச் சென்று நிகழ்வ பஃறொடையாம்’ என்பது.

நான்கடியின் மிக்க பலவடியான் வருவது பஃறொடை வெண்பா எனப்படும்; எ - று.

நேரிசை வெண்பாவிற்கும், இன்னிசை வெண்பாவிற்கும் நான்கடியே உரிமை சொன்னமையான், நான்கடியின் மிக்க பலவடியால் வருமென்பது ஆற்றலாற் போந்த பொருளெனக் கண்டுகொள்க.

வருமாறு:—

ஐந்தடிப்பஃறொடை வெண்பா [illegible].

“சேற்றுக்கால் நீலஞ் செருவென்ற வேந்தன்மேல்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயல்
தோற்றந் தொழில்வடிவு தம்முள் தடுமாற்றம்
வேற்றுமை யின்றியே யொத்தன மாவடர்
*ஆற்றுக்கா லாட்டியர் கண்.”

இஃது ஐந்தடியான் வந்த ஒரு விகற்பப் பஃறொடை வெண்பா.

---

*ஆற்றுக்காலாட்டி - மருதநிலப் பெண்.

சான்று: ஆறடிப்பஃறொடை வெண்பா

"பன்மாடக் கூடல் மதுரை [1]நெடுந் தெருவில்
என்னோடு நின்றா ரிருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே பொன்னோடைக்
*கியானைநன் றென்றாளும் அந்நிலையள் யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்."

இஃது ஆறடியான் வந்த பலவிகற்பப் பஃறொடை வெண்பா.

ஏழடிப்பஃறொடை வெண்பா

"வையக மெல்லாங் கழனியா—வையகத்துச்
செய்யகமே நாற்றிசையின் தேயங்கள்—செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு—வான்கரும்பின்
சாறேஅந் நாட்டுத் தலையூர்கள்—சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெலாங்—கட்டியுள்
தானேற்ற மான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி யகம்."

இது பலவிகற்பத்தான் வந்த ஏழடிப் பஃறொடை வெண்பா.

இனி ஏழடியின் மிக்க பஃறொடை வெண்பாக்களை யாப்பருங்கல விருத்தியுள்ளும், தேசிகமாலை முதலியவற்றுள்ளுங் கண்டுகொள்க.

அடிபலவாய் நிகழ்வ பஃறொடை யென்னாது 'சென்று நிகழ்வ' என்று சிறப்பித்தது, செப்பலோசையிற் சிறிது வழுவிவந்த பஃறொடை வெண்பாக்களை ஒருபுடை யொப்புமை நோக்கி வெண்கலிப்பாற் படுத்து வழங்கினும் இழுக்காதென்பது அறிவித்தற்கெனக் கொள்க.

'சிறை வண்டினங்கள் துன்றுங் கருமென் குழற்றுடி யேரிடைத் தூமொழியே' என்பது மகடூஉ முன்னிலை.

---

(பாடம்) 1. பெருந்தெருவில்.
*சந்துக் குற்றியலிகரம் அலகு பெற்றிலது.

"தொடையடி யித்துணை யென்னும் வழக்கம்
உடையதை யன்றி யுறுப்பழி வில்லா
நடையது பஃறொடை நாமங் கொளலே"

என்றார் காக்கைபாடினியார்.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

வைகலும் வைக றுகடீர் கடற்துட்டம் இன்மமங்கண்
எய்து மலிதேர் வளமழை [1]இன்னுமை இன்னிசைபோல்
வையக மேல்லாம் பலவிகற் பேற்றது சேற்றேருகால்
பையர வல்குல்பன் மாடம் [2]பஃறொடைப் *பல்விகற்பே. (உஎ)

இவ் வுரைச்சூத்திரக் காரிகையின் வழியே இன்னிசை வெண்பாவிற்கும், பஃறொடை வெண்பாவிற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க.

சிந்தியல் வெண்பா, வெண்பாவின் இறுதியடி.

நேரிசை இன்னிசை போல நடந்தடி மூன்றின்வந்தால்
நேரிசை இன்னிசை சிந்திய லாகு நிகரில்வெள்ளைக
கோரசைச் சீரு மோனிசேர் பிறப்புமோண் காசுமிற்ற
சீருடைச் சிந்தடி யேமுடி வாமேன்ற தேறுகவே. (உஅ)

இ - கை. நேரிசைச் சிந்தியல் வெண்பாவும், இன்னிசைச் சிந்தியல் வெண்பாவும், எல்லா வெண்பாவிற்கு மீறுமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

நேரிசை யின்னிசை போல நடந்தடி மூன்றின் வந்தால் நேரிசை யின்னிசைச் சிந்தியலாகும் என்பது:

நேரிசை வெண்பாவேபோல இரண்டா மடியினிறுதி தனிச்சொற் பெற்று இரு விகற்பத்தானும் ஒரு விகற்பத் தானும் மூன்றடியான் வருவன நேரிசைச் சிந்தியல் வெண்பா எனவும், இன்னிசை வெண்பாவே போலத் தனிச்சொலின்றி ஒரு விகற்பத்தானும் பல விகற்பத்தானும் மூன்றடியான் வருவன இன்னிசைச் சிந்தியல் வெண்பா எனவும் வழங்கப்படும்; எ - று.

---

(பாடம்) 1. இன்னன. 2. பஃறொடை பலவிகற்பே.
*ஈண்டு ஆய்தம் உயிர்க்குறிலே போல நின்று அலகு பெற்றது.

என்னை,

"நேரிசைச் சிந்தும் இன்னிசைச் சிந்துமென்
றீரடி முக்கால் இருவகைப் படுமே"

என்றாராகலின்.

வருமாறு :

நேரிசைச் சிந்தியல் வெண்பா

௫ "நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே—பொற்றேரான்
மாலைநல் வாயில் மகள்."

"அறிந்தானை ஏத்தி யறிவாங் கறிந்து
சிறந்தார்க்குச் செவ்வ னுரைப்ப—சிறந்தார்
சிறந்தமை யாராய்ந்து கொண்டு."

இவை இரண்டாமடியினிறுதி, தனிச்சொற்பெற்று இருவிகற்பத்தானும், ஒரு விகற்பத்தானும் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா.

இன்னிசைச் சிந்தியல் வெண்பா

நறுநீல நெய்தலுங் கொட்டியுந் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
அறநாட்டுப் பெண்டி ரடி.

இது தனிச்சொலின்றி ஒரு விகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

"சுரையாழ அம்மி மிதப்ப—வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை"

"முல்லை முறுவலித்துக் காட்டின—மெல்லவே
சேயிதழ்க் காந்தள் துடுப்பீன்ற—போயினர்
தின்றேர் வரவுரைக்குங் கார்."

இவை பலவிகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

நற்கோற்ற வாயில் அறிந்தா னையுநறும் பூங்குழலாய்
சோற்பேற்ற நேரிசைச் சிந்திய லாஞ்சுரை யாழவம்மி
நிற்றற் குரிய நறுநீல நெய்தலு முல்லையுமேன்
றேற்றப் படாதன இன்னிசைச் சிந்திற் கிலக்கியமே. (உகூ)

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின் வழியே நேரிசைச் சிந்தியல் வெண்பாவிற்கும், இன்னிசைச் சிந்தியல் வெண்பா விற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க.

'இகரில் வெள்ளைக், கோரசைச்சீரு மொளிசேர் பிறப்பு மொண் காசுமிற்ற, சீருடைச் சிந்தடி யேமுடி வாமென்று தேறுகவே' என்பது: எல்லா வெண்பாவிற்கும் நாள் என்னும் நேரசைச் சீரானும், மலர் என்னும் நிரையசைச் சீரானும் காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டிற் குற்றியலுகர மீறுகிய நேரீற் றியற்சீரானும் இற்ற முச்சீரடியே யீற்றடியாவ தென்று தெளிக ; எ - று.

வெண்பாவி னிறுதிச்சீர்க் குற்றியலுகரம் ஈறுக வேறுதாரணமெடுத்தோதியதூஉம் அசைச்சீர்க்குதாரணம் வேறு காட்டிப் போந்ததூஉம், வெண்பாவினை அலகிட்டு உதாரண வாய்பாட்டான் ஓசையூட்டும்பொழுது, பிற வாய்பாட்டான் ஓசையூட்ட லாகாதாதலின் எனக் கொள்க. இனி அவ்வாற்றான் ஓசை யூட்டுமாறு :

*"பாலொடு—நீர்" என்பதனை அலகிட்டு, முறை யானே கூவிளம், கூவிளம், தேமா, கருவிளம், கூவிளம் கூவிளம், நாள் என் றோசையூட்டுக.

†"நன்றறிவாரில்—அவலமிலர்" என்பதனை, அல கிட்டு முறையானே கூவிளம், தேமா, புளிமா, கருவிளங் காய், தேமா, புளிமா, மலர் என்று ஓசையூட்டுக.

---

*இச்செய்யுள் ௩௧ - ஆவது பக்கத்தில் ஓரசைச்சீருக்கும், ௬௨ - ஆவது பக்கத்தில் செப்பலோசைக்கும் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

†இச்செய்யுள் ௩௧ - வது பக்கத்தில் ஓரசைச்சீருக்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

*"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு"

என்பதனை அலகிட்டு, முறையானே கூவிளம், தேமா, புளிமாங்காய், கூவிளம், கூவிளம், தேமாங்காய், காசு என் றோசையூட்டுக.

†"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்பதனை அலகிட்டு, முறையானே புளிமா, புளிமா புளி மாங்காய், தேமா, புளிமா, புளிமா, பிறப்பு என்றோசை யூட்டுக.

பிற வெண்பாக்களையும் இவ்வாறலகிட்டு ஓசையூட்டிச் செப்பலோசை வழுவாமற் கண்டுகொள்க.

ஈகரில் வெள்ளைக்கு என்று சிறப்பித்தவதனால் குறள் வெண்பாவினை ஓரடி முக்கால் என்றும், சிந்தியல் வெண்பா வினை ஈரடி முக்கால் என்றும், நேரிசை வெண்பாவினை மூவடி முக்கால் என்றும், இன்னிசை வெண்பாவினை இன் னிசை மூவடி முக்கால் என்றும், பஃறொடை வெண்பா வினைப் பலவடி முக்கால் என்றும் பெயரிட்டு வழங்குவர் ஒரு சார் ஆசிரியரெனக் கொள்க.

'ஒளிசேர் பிறப்பும் ஒண்காசும்' என்று சிறப்பித்தது காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டான் முற்றியலுகரம் ஈருகிய நேரீற்றியற்சீர் இறுதியாகிய முச்சீரடியானும் இறு வனவு முள ஒருசார் வெண்பா வென்பது அறிவித்தற் கெனக் கொள்க.

வருமாறு :

குறள் வெண்பா

"மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலும்
அஞ்சொன் மடவாட் கருளு."

*குறள். வாழ்க்கைத் துணை - ௬0
†குறள். கடவுள் வாழ்த்து - ௧

இது, பிறப்பு என்னும் வாய்பாட்டான் முற்றியலுகரம் ஈறும் இற்ற வெண்பா.

குறள் வெண்பா

“இனமலர்க் கோதாய் இலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு.”

இது, காசு என்னும் வாய்பாட்டான் முற்றியலுகரம் ஈறும் இற்ற வெண்பா. இவை செய்யுளியலுடையார் காட்டியவெனக் கொள்க.

என்னை,

*“செப்ப லிசையன வெண்பா மற்றவை
அந்தடி சிந்தடி யாகலும் அவ்வடி
அந்த மசைச்சீ ராகவும் பெறுமே”

“குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
பெற்றவாய் பாட்டான் னின்றிறு மென்ப”

என்றாராகலின்.

மாவாழ் புலிவாழ் சுரமுள வாக மணியிறுவாய்
ஓவா தளபெடைத் †தூஉங் கெழுஉவு முதாரணமாய்
நாவார் பெரும்புகழ் நத்தத்தர் யாப்பில் நடந்ததுபோல்
தேய்வா முகரம்வந் தாமியற் சீரிங்குச் செப்பியதே. (௩௦)

இவ் வுரைக்காரிகைச் சூத்திரத்துள், ஓசையூட்டுதற் கருத்தாவது ‘மாவாழ்சுரம் புலிவாழ்சுரம்’ என்னும் வஞ்சியுரிச்சீ ரிரண்டு முளவாகவைத்து, ஒரு பயனோக்கித் தூஉமணி, கெழூஉமணி என்றளபெடுத்து நேர்நடுவாகிய வஞ்சியுரிச் சீர்க்கு உதாரணம் எடுத்துக்காட்டினார் நத்தத்தனார் முதலாகிய ஒருசாராசிரியர். அதுபோல இந் நூலுடையாரும் தேமா, புளிமா என்னும் இரண்டு நேரீற்றியற்சீரு முளவாக வெண்பாவின் இறுதிச் சீருக்கு உதாரண வாய்பாட்டான்

---

*யாப்பருங்கலம் - இள.

†ஈண்டு அளபெடைகள் இரண்டும் அலகுபெற்றில எனவும், ‘அளபெடுத்ததூஉம்’ என்பது ‘து’ தொகுத்தல் விகாரம் பெற்று ‘அளபெடுத்தூஉம்’ என்றாயிற்று எனவுங் கொள்க.

ஓசையூட்டுதற் பொருட்டாகக் குற்றியலுகரம் ஈறுகிய காசு, பிறப்பு என்னும் வாய்பாட்டான் நேரீற்றியற்சீ ரிறுக வேறுதாரணம் எடுத்தோதினர் எனக் கொள்க.

குறள் வெண்செந்துறை, குறட்டாழிசை

அந்தமில் பாத மளவிரண் டொத்து முடியின்வெள் ளைச்
செந்துறை யாகுந் திருவே யதன்பெயர் சீர்பலவாய்
அந்தங் குறைநவுஞ் செந்துறைப் பாட்டி னிழிபுமங்கேழ்ச்
சந்தஞ் சிதைந்த குறளுங் குறளினத் தாழிசையே. (ங௧)

இ-கை. குறள்வெண்பாவிற் கினமாகிய துறையும், தாழிசையும், ஆமா றுணர்த்துதல் நுதலிற்று.

"அந்தமில் பாதம் அளவிரண்டொத்து முடியின் வெள்ளைச் செந்துறையாகும்" என்பது: இரண்டடியாய்த் தம்முள் அளவொத்து வருவது வெண்செந்துறை என்றும், செந்துறை வெள்ளை என்றும் பெயரிட்டு வழங்கப்படும் எ-று.

'அந்தமில்பாதம்' என்று சிறப்பித்தவதனால், விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையு முடைத்தாய் வருவதெனக் கொள்க.

என்னை,

*"ஒழுகிய வோசையின் ஒத்தடி யிரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே"

என்பது யாப்பருங்கலம்.

வெண்செந்துறை எ-டு:

†"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை"

‡"கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
என்று மேத்தித் தொழுவோ மியாமே."

---

*யாப்பருங்கலம் - சுங. †முதுமொழிக்காஞ்சி - க.
‡கொன்றைவேந்தன் - க.

இவை விழுமிய பொருளும், ஒழுகிய வோசையுமாய் வந்தமையான், வெண்செந்துறை.

'திருவே' என்பது: மகடூஉ முன்னிலை.

'சீர்பலவாய், அந்தங் குறைநவும்' என்பது:

நாற்சீரின் மிக்க பலசீரான் வந்து அடியிரண்டாய் ஈற்றடி குறைந்து வருவன குறட்டாழிசை எனப்படும் எ - று.

இரண்டடியென்ப ததிகாரத்தான் வருவித்துரைக்கப் பட்டது. குறட்டாழிசை யெனினும், தாழிசைக் குறளெனினும் ஒக்கும். சீர்வரையறை யில்லாமையால் எனைத்துச் சீரானும் அடியானும் வரப்பெறும் எனக் கொள்க.

குறட்டாழிசை வ.6

"நன்னு வார்வினை நைய நாடொறு நற்ற வர்க்கர சாய
கண்ணி னுனடி யேயடை வார்கள் கற்றவரே." [ஞானநற்

"நீலமாகட லீடுவார் திரை நின்றநின்றபோற் பொங்கிப் [பொன்றுமால்
காலம்பல காலஞ் சென்றுஞ் செல்வர் யாக்கை கழிதலுமே."

இவை ஈற்றடி குறைந்து இரண்டடியாய்ப் பல சீரான் வந்தமையால், குறட்டாழிசை.

'செந்துறைப் பாட்டி னிழியும்' என்பது:

அடியிரண்டாய் அளவொத்து விழுமிய பொருளும் ஒழுகிய வோசையுமின்றி இவ்வாறே செந்துறை வெள்ளையிற் சிதைந்து வருவனவெல்லாஞ் செந்துறைச் சிதைவுத் தாழிசைக்குறள் எனப்படும் எ - று.

குறட்டாழிசை

"பிண்டியி னிழற் பெருமான் பிடர்த்தல
மண்டலந் தோன்றுமால் வாழி யன்னய்."

"அறுவர்க் கறுவரைப் பெற்றுங் கவுந்தி
மறுவறு பத்தினி போல்வையி னீரே."

இவை விழுமிய பொருளும் ஒழுகிய வோசையுமின்றி இரண்டடியுந் தம்முள் ஒத்து வந்தமையிற் செந்துறைச் சிதைவுத் தாழிசைக்குறள்.

'அங்கேழ்ச் சந்தஞ் சிதைந்த குறளுங் குறளினத் தாழிசையே' என்பது:

செப்பலோசையிற் சிதைந்து வேற்றுத் தளைதட்டுக் குறள் வெண்பாவிற் சிதைந்து வருவனவெல்லாங் குறள் வெண்பாவின் இனமாகிய குறட்டாழிசை எனப்படும் எ - று.

குறட்டாழிசை எ.6.

"வண்டார்பூங் கோதை வரிவளைக்கைத் திருநுதலாள்
பண்டைய ளல்லள் படி."

இது சந்தஞ் சிதைந்த தாழிசைக் குறள்.

என்னை,

*"அந்தடி குறைநவுஞ் செந்துறைச் சிதைவுஞ்
சந்தழி குறளுந் தாழிசைக் குறளே"
†"உரைத்தன இரண்டுங் குறட்பா வினமே"

என்பன யாப்பருங்கலம்.

வெளிவிருத்தம், வெண்டாழிசை, வெண்டுறை

மூன்றடி யானு முடிந்தடி தோறு முடிவிடத்தத்
தான்றனிச் சொற்பெறுந் தண்டா விருத்தம்வெண் டாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறு மூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடி தாஞ்சில அந்தங் குறைந்திறும் வெண்டுறையே. (௩௨)

இ - கை. வெளிவிருத்தமும் வெண்டாழிசையும், வெண்டுறையும் ஆமா றுணர்த்துதல் நுதலிற்று.

'மூன்றடி யானும் முடிந்தடிதோறும் முடிவிடத்துத், தான்றனிச் சொற்பெறுந் தண்டா விருத்தம்' என்பது:

மூன்றடியானும் முற்றுப்பெற்று அடிதோறும் ஒரு சொல்லே இறுதிக்கண் தனிச்சொல்லாய் வருவது வெளி விருத்தம் எனப்படும் எ - று.

*† யாப்பருங்கலம் - ௬௪, ௬௫.

'மூன்றடியானும்' என்ற உம்மையால் நான்கடியானும் வரப்பெறும் எனக்கொள்க.

என்னை,

"ஒருமூன் றொருநான் கடியடி தோறுந்
தனிச்சொல் தழுவி நடப்பது வெள்ளை
விருத்த மெனப்பெயர் வேண்டப் படுமே"

என்றார் காக்கைபாடினியார்.

'தண்டா விருத்தம்' என்று சிறப்பித்தவதனால் நாற்சீரடியுட்பட் டடங்காது வேறாய் வருவது ஈண்டுத் தனிச்சொல் எனக் கொள்க.

வெளி விருத்தம் உ-டு.

"கொண்டல் முழங்கினவாற் கோபம் பரந்தனவா—
லென்செய் கோயான்
வண்டு வரிபாட வார்தளவம் பூத்தனவா—
லென்செய் கோயான்
எண்டிசையுந் தோகை யிருந்தகவி யேங்கினவா—
லென்செய் கோயான்."

இது மூன்றடியான் என்செய்கோயான் என்னும் தனிச்சொல் பெற்றுவந்த வெளிவிருத்தம்.

வெளி விருத்தம்

"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தா—ரொருசாரார்
கூகூ வென்றே கூவிளி கொண்டா—ரொருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தா—ரொருசாரார்
ஏகீர் நாய்கீ ரென்செய்து மென்றா—ரொருசாரார்."

இது நான்கடியாய் ஒருசாரார் என்னும் தனிச்சொற் பெற்றுவந்த வெளிவிருத்தம்.

'வெண்டாழிசையே, மூன்றடியாய் வெள்ளைபோன் றிறும்' என்பது.

மூன்றடியான் ஈற்றடி வெண்பாவே போல முச்சீரடியான் இறுவது வெண்டாழிசை யென்றும் வெள்ளொத் தாழிசை யென்றும் வழங்கப்படும்; எ - று.

என்னை,

*"அடியொரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
விடினது வெள்ளொத் தாழிசை யாகும்."

வருமாறு:

வெண்டாழிசை எ.டு.

"நண்பி தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவ செய்யார்
அன்பு வேண்டு பவர்."

இது மூன்றடியாசிரியத் தளையான்வந்த வெண்டாழிசை.

'மூன்றிழி பேழுயர்வாய், ஆன்றடி தாஞ்சில அந்தங் குறைந்திறும வெண்டுறையே' என்பது:

மூனறடிச் சிறுமையாய் ஏழடிப் பெருமையாய் இடை யிடை நான்கடியானும், ஐந்தடியானும், ஆறடியானும் வந்து பின்பிற சில அடி சில சீர் குறைந்து வருவன வெண்டுறை எனப்படும்: எ - று.

ஆனறடிதாம்' என்று சிறப்பித்த வதனால், முன்பிற் சிலவடி ஓரோசையாயும், பின்பிற் சிலவடி மற்றோரோசை யாயும் வருவன ஒருசார் வேற்றொலி வெண்டுறை எனக் கொள்க;

என்னை,

"அடியைந் தாதியு மிக்கும் ஈற்றடி
ஒன்று மிரண்டுஞ் சீர்தபின் வெண்டுறை"

என்றார் அவிநயனார்.

†"மூன்றடி முதலா ஏழடி காறும்வந்
தீற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாகும்"

என்பது யாப்பருங்கலம்.

வெண்டுறை எ.6.

"தாளாள ரல்லாதார், தாம்பல ராயக்கா லென்னாமென்னாம்
ஆளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்த்துவிழும் [1]பிளிற்றி யாங்கே."

(பாடம்) 1. பிளிறறி.

*யாப்பருங்கலம் - கக. †யாப்பருங்கலம் - கஎ.

இது மூன்றடியாய் ஈற்றடி யிரண்டும் இரண்டுசீர் குறைந்து வந்த ஒரொலி வெண்டுறை.

"குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் [குலைமேற்பாய
அழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென் றயல்வாழ்
களும்வனபோல் நெஞ்சயர்ந்து கல்லருவி தாஉம் [மந்தி
கிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்."

இது நான்கடியாய் ஈற்றடி யிரண்டும், இரண்டு சீர் குறைந்துவந்த ஒரொலி வெண்டுறை.

ஒரொலி வெண்டுறை

"வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயினும்
உறவுற வரும்வழி யுரைப்பன வுரைப்பன்மற்
செறிவுறு தகையினர் சிறந்தன ரிவர்நமக்
கறிவுறு தொழிலரென் றல்லவை சொல்லன்மின்
பிறபிற விகழ்வன பின்."

இஃது ஐந்தடியாய் ஈற்றடி ஒன்றொரு சீர் குறைந்து வந்த ஒரொலி வெண்டுறை

"கல்லாதார் நல்லவையுட் கல்லேபோற் சென்றிருந்தாற்
கருமம் யாதாம்
இல்லாதார் செல்வரைக்கண் டிணங்கியே ஏமுற்றால்
இயைவ தென்னாம்
பொல்லாதார் நன்கலன் மெய்புதைப்பப் பூண்டாலும்
பொலிவ தென்னாம் [தென்னே
புல்லாதார் பொய்கேண்மை புனைந்துரைத்தா லாவ
அல்லாதார் பொய்யாவ தறிபவேல் அமையாதோ."

இஃது ஐந்தடியாய் ஈற்றடியிரண்டும் இரண்டுசீர் குறைந்துவந்த ஒரொலி வெண்டுறை.

"முழங்கு [1]களியானை மூரிக் கடற்படை மூரித்தார் மன்னர்
வழங்குமிடமெல்லாந் தன்புகழேபோக்கிய வைவேல் விண்
செழுந்தண்பூம் பழசையுட் சிறந்ததுநா ளுஞ்செய [ணன்
எழுந்த சேதிகத் துள்ளிருந்த அண்ணலாரடி
விழுந்தண்பூ மலர்களால் வியந்துநா ளுந்தொழத்
தொடர்ந்துநின்ற வெவ்வினை துறந்துபோ மாலரோ."

அஃது ஆறடியாய் முதலிரண்டும் அறுசீராய்ப் பின் னான்கடியும் நாற்சீராய், முதலிரண்டடியும ஒரிசையாய்ப்

---

(பாடம்) 1. கடல்யானை.

பின் நான்கடியும் மற்றோரிசையாய் வந்த வேற்றொலி வெண்டுறை.

"முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலகு மேவல்செய
முறைசெய் கோமான்
வழங்குதிறல் வாண்மாறன் மாச்செழியன் றுக்கரிய
வைவேல் பாடிக்
[1]கலங்கிநின் றுரெலாங் கருதலா காவணம்
இலங்குவா ளிரண்டினு லிருகைவீ சிப்பெயர்க்
தலங்கன்மா லையவிழ்ந் தாடவா டும்மிவள்
பொலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் றுரெலாம்
விலங்கியுள் ளந்தப விளிந்துவே றுபவே."

இஃது ஏழடியாய் முதல் இரண்டடியும் அறுசீராய் ஓரோசையாய்ப் பின் ஐந்தடியும் நாற்சீராய் வேறோர் ஓசையாய் வந்த வேற்றொலி வெண்டுறை.

"மூன்றடி யாய்வெள்ளை போன்றிறுந் தாழிசை மூன்றிழி
ஆன்றடி தாஞ்சில வந்தத் தடிக ளவைகுறைந்து [பேழ்
தோன்றுந் துறைவெள்ளை தண்டா விருத்தந் தனிச்சொல்
மூன்றடி யானு முடியு முடியுமோர் நான்கினுமே" [வந்து

என்று வெண்பாவிற்கு இனமாகிய தாழிசை, துறை, விருத்தங்கட்கு முறையானே இலக்கணஞ் சொல்லாது தலை தடுமாற்றமாகக் காரிகை சொல்லவேண்டியது என்னையோ வெனின், ஒருசார் வெண்டுறையின் ஈற்றடி ஒன்றொருசீர் குறைந்து வருதலும் உளதெனபதூஉம், வெள்ளொத் தாழிசையின் முதல் இரண்டடியும் நான்கு சீரான் வரு மென்பதூஉம், சிந்தியல் வெண்பா ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருவன வெல்லாம் வெள்ளொத்தாழிசை என்று வழங்கப்படும் என்பதூஉம் அறிவித்தற்கு வேண்டப் பட்டது; 'தலை தடுமாற்றந் தந்து புணர்த்துரைத்தல்' என்பது தந்திர உத்தியாகலான்.

வெள்ளொத் தாழிசை முதலிரண்டடியும் நாற்சீராய் வருவது* 'கண்பிது' என்னும் இலக்கியத்துட் கண்டுகொள்க.

(பாடம்) 1. கலந்து நின்றுர்.

*இச் செய்யுளை அஉ ஆவது பக்கத்திற் காண்க.

வெள்ளொத்தாழிசை

"அன்று யறங்கொ னலங்கிளர் சேட்சென்னி
ஒன்று ருடைபுலம் போல நலங்கவர்ந்து
[1]துன்னான் றுறந்து விடல்".

"ஏடு யறங்கொ னலங்கிளர் சேட்சென்னி
கூடா ருடைபுறம் போல நலங்கவர்ந்து
நேடான் றுறந்து விடல்"

"பாவா யறங்கொ னலங்கிளர் சேட்சென்னி
மேவா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
காவான் றுறந்து விடல்."[1]

இவை சிந்தியல் வெண்பா ஒரு பொருண்மேன் மூன்றடுக்கி வந்தமையான், வெள்ளொத்தாழிசை.

என்னை,

"ஈரடி முக்கா லிசைகொள நடந்து
மூன்றுட னடுக்கித் தோன்றினொத் தாழிசை."

என்றார் மயேச்சுரர்.

உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

கோண்டன் முழங்கின் வாவா விருத்தங் குழலிசைய
வண்டினம் வெணடுறை தாளாண் முழங்கோடு தாழிசையே
கண்பிதென் றாகலி கோனறைவெண செந்துறை நீலநண்ணும்
பிண்டி யறவாவண் டார்வெறி தாழிசை பெய்வளையே. (௩௩)

இவ்வுரைச்சூத்திரக் காரிகையின் வழியே வெண்பா வினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதல் நினைத்துக் கொள்க.

வெண்பாவும் அதன் இனமும்

முற்றும்.

---

(பாடம்) 1. தூவான் றுறந்துவிடல்.

## 3. ஆசிரியப்பாவும், அதன் இனமும்

### நான்குவகை ஆசிரியப்பா

கடையயற் பாதமுச் சீரவரின் நேரிசை காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குற ளேல்லா அடியுமொத்து
நடைபெறு மாயின் நிலைமண் டிலகடு வாதியந்தத்
தொடைதரு பாதத் தகவல் அடிமறி மண்டிலமே. (௩௰)

இ-கை. அகவலோசையோடு அளவடித்தாகியும், இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியும், தன்றளை தழுவியும், பிறதளை மயங்கியும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் வருதலில்லா ஆசிரியப்பாவினை, அடியானுந், தொடையானும், ஓசையானும், பொருளானும் பெயர் வேறுபா டுணர்த்துவான் எடுத்துக் கொண்டார்.

அவற்றுள், இக்காரிகை நேரிசையாசிரியப்பாவும், இணைக்குறளாசிரியப்பாவும், நிலைமண்டில வாசிரியப்பாவும், அடிமறி மண்டில வாசிரியப்பாவும் ஆமா றுணர்த்துதல் நுதலிற்று.

'கடையயற் பாத முச்சீர்வரின் நேரிசை' என்பது.

ஈற்றயலடி முச்சீரான் வருவது நேரிசை யாசிரியப்பா எ-று.

என்னை,

"ஈற்றதன் அயலடி ஒருசீர் குறைய
நிற்பது நேரிசை ஆசிரி யம்மே"
*"அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை யாசிரி யம்மே"

என்றாராகலின.

வருமாறு:

i. நேரிசையாசிரியப்பா

†"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கு நாடனொடு நட்பே."

இஃது ஈற்றயலடி முச்சீரான் வந்தமையால், நேரிசையாசிரியப்பா.

---

1. அவிநயனார்.
*யாப்பருங்கலம் - ௭௧. †குறுந்தொகை - ௩.

'ஈமருசி, ரிடை பலகுன்றி னிணைக்குறள்' என்பது.

ஈற்றடியும், முதலடியும் ஒழிந்து, இடையடிகள் இரண்டும் பலவும் குறளடியானும், சிந்தடியானும் வருவன இணைக்குறளாசிரியப்பா; எ - று.

என்னை,

"இடைபல குறைவ திணைக்குற ளாகும்"

என்றார் அவிநயனார்.

"அளவடி யந்தமு மாதியு மாகிக்
குறளடி-சிந்தடி யென்று இரண்டும்
இடைவர நிற்ப திணைக்குற ளாகும்"

என்றார் காக்கைபாடினியார்.

"இடையிடை சீர்தபின் இணைக்குற ளாகும்"

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

வருமாறு:

ii. இணைக்குறளாசிரியப்பா ·*· உ.ம்

"நீரின் தண்மையுந் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து
தீரத் தீரும்
சாரல் நாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்போல் லாதே."

இது முதலடியும் ஈற்றடியும் நாற்சீராய், இடையடி இருசீரானும், முச்சீரானும் வந்தமையால், இணைக்குற ளாசிரியப்பா.

இணைக்குறளாசிரியப்பா

*"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும்

*புறநானூறு - உஙஎ.

நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றுனும்
நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடுவழி யெல்லாம்
எமக்கீயு மன்னே
அம்பொடு வேல்நுழை வழியெல்லாம்
தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவு நாறு மென்றலை
தைவரு மன்னே
அருங்கலை இரும்பாண ரகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல்நுண் தேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுநரு மில்லைப்
பாடுநர்க்கொன் றீகுநரு மில்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே.''

இஃது இடையிடையே இருசீரடியும், முச்சீரடியுமாய் வந்தமையால், இணைக்குறளாசிரியப்பா.

'காமருசீர்' என்று சிறப்பித்த வதனால் ஆசிரியப்பா நான்கும் 'ஏ' என்னும் அசைச்சொல்லான் இறுவதே சிறப்புடைத்து; பிற எழுத்தும் ஈறாய் வரப்பெறுமாயினும் எனக் கொள்க.

என்னே,

*''அகவ லிசையன அகவல் மற்றவை
ஏ ஓ ஈ ஆய் என் ஐ யென் றிறுமே''

என்றாராகலின்.

'எல்லா வடியுமொத்து, கடைபெறுமாயின் நிலைமண் டிலம்' என்பது;

---

*யாப்பருங்கலம் - சுக.

எல்லாவடியுந் தம்முள் அளவொத்து நாற்சீர் அடியாய் வருவது நிலைமண்டில ஆசிரியப்பா; எ - று.

வருமாறு:

iii. நிலைமண்டில ஆசிரியப்பா ௭.௬ *

"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே."

இஃது எல்லாவடியும் நாற்சீராய் அளவொத்து வந்தமையால், நிலைமண்டில ஆசிரியப்பா. மண்டிலம் எனினும் நிலைமண்டிலம் எனினும் ஒக்கும்.

நிலைமண்டில ஆசிரியப்பா 'என்' என்னும் அசைச்சொல்லான் இறுவது சிறப்புடைத்து, மற்றொரு சார் ஒற்றினும், உயிரினும் ஈறாய் வரவும் பெறும் எனக் கொள்க.

என்னை,

"ஒத்த வடித்தாய் உலையா மரபொடு
நிற்பது தானே நிலைமண் டிலமே"

"என்னென் கிளவியை யீறுப் பெறுதலும்
அன்ன பிறவும் அந்த நிலைபெற
நிற்கவும் பெறூஉம் நிலைமண் டிலமே"

என்றார் காக்கைபாடினியார்.

'நடுவாதியந்தத் தடைதரு பாதத் தகவ லடிமறி மண்டிலமே' எனபது:

எல்லாவடியும் முதல், நடு, இறுதியாக உச்சரிப்பினும் ஓசையும், பொருளும் பிழையாது வருவது அடிமறிமண்டில வாசிரியப்பா; எ - று.

---

*குறுந்தொகை - ௧அ

என்னை,

*"மனப்படு மடிமுத லாயிறின் மண்டிலம்"
"உரைப்போர் குறிப்பி னுணர்வகை யன்றி
இடைப்பால் முதலீ றென்றிவை தம்முண்
மதிக்கப் படாதன மண்டில யாப்பே"

என்றார் காக்கைபாடினியார்,

"எழுவா யிரட்டித் திறுதி யொன்றாய்
வரினது மண்டில வாசிரி யம்மே"

என்றாராகலின்.

வருமாறு:

iv. அடிமறிமண்டில ஆசிரியப்பா x

"சூரல் பம்பிய சிறுகால் யாறே
சூரர மகளிர் ஆரணங் கினரே
வாரலை யெனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே."

இதனை எல்லாவடியும் முதல், நடு, இறுதியாக உச்சரித்து ஓசையும், பொருளும் பிழையாது வந்தமையால் அடிமறிமண்டில ஆசிரியப்பா ஆமாறு கண்டுகொள்க.

உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

நேரிசை யாகு நிலத்தினு மேன்ப நிணைக்குறட்பா
நீரின் சிறிய நிலைமைய தாகிலை மண்டிலப்பா
வேரலென் றாகும் விரைமலர்க் கோதைவில் லேர்நுதலாய்
சூரல்பம் மேன்ப தடிமறி யாகத் துணிந்தனரே. (௩௫)

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின் வழிபே ஆசிரியப்பா நான்கிற்கும் காட்டிய இலக்கியங்களை முதல் நினைத்துக் கொள்க.

*யாப்பருங்கலம் - ௭௩.

## ஆசிரியத்தாழிசை துறை விருத்தங்கள்

தருக்கியல் தாழிசை மூன்றடி யொப்பன, நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக் காயும், இடையிடையே
சுருக்கடி யாயுந் துறையாங் குறைவில்தோல் சீரகவல்
விருத்தங் கழிநெடில் நான்சோத் திறவது மேல்லியலே.

(௩௯)

இ-கை. ஆசிரியத்தாழிசையும், ஆசிரியத்துறையும் ஆசிரிய விருத்தமும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

'தருக்கியல் தாழிசை மூன்றடி ஒப்பன' என்பது :

மூன்றடியாய்த் தம்முள் அளவொத்து வருவன ஆசிரியத்தாழிசை : எ - று.

'தருக்கியல் தாழிசை' என்று சிறப்பித்ததனுல் அவை ஒரு பொருள்மேல் மூன்றடுக்கி வருவன சிறப் புடையன; தனியே வரப்பெறுமாயினும் எனக் கொள்க.

என்னை,

"அடிமூன் ருத்திறி னெத்தா ழிசையே"

என்ருர் காக்கைபாடினியார்.

*"மூன்றடி யொத்த முடிவின வாய்விடின்
ஆன்ற அகவற் ருழிசை யாமே,"

"ஒத்த வொருபொருள் மூவடி முடியினஃ
தொத்தா ழிசையாம் உடன்மூன் றடுக்கின்"

என்ருர் மயேச்சுரர்.

வருமாறு :

i. ஆசிரியத்தாழிசை

†"கன்று குணிலாக் [1]கனியுகுத்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமேல் அவன் வாயிற்
கொன்றையந் திங்குழல் கேளாமோ தோழீ."

---

(பாடம்) 1. கனியுதிர்த்த.

* யாப்பருங்கலம் - எடு.

† சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை, பாட்டு ௧.

*"பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன் வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி"

†"கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லிநம் மானுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி."

இவை ஒரு பொருண்மேன் மூன்றடுக்கி வந்த ஆசிரியத் தாழிசை.

ஆசிரியத்தாழிசை ௩.

"வானுற நிமிர்ந்தனை வையகம் அளந்தனை
பால்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீலிற வண்ணநின் நிரைகழல் தொழுதனம்."

இது தனியே வந்த ஆசிரியத்தாழிசை.

'நான்கடியாய் எருத்தடி நைந்தும் இடைமடக்காயும் இடையிடையே சுருக்கடியாயுந் துறையாம்' என்பது:

நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து வருவனவும் நான் கடியாய் ஈற்றயலடி குறைந்து இடைமடக்காய் வருவனவும், நான்கடியாய் இடையிடை குறைந்து வருவனவும், நான்கடி யாய் இடையிடை குறைந்து இடைமடக்காய் வருவனவும் ஆசிரியத்துறை; எ - று.

'நான்கடியாய்' என்பதனை எல்லாவற்றினோடுங் கூட்டி 'இடைமடக்காய்' என்பதனை ஒருகால் இருதலையுங் கூட்டி மத்திம தீபமாகப் பொருள் உரைத்துக் கொள்க.

சீர் வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும் அடியாய் வரப்பெறும். முதலயலடி குறைந்தும், நடுவீரடி குறைந்தும் மிக்கும் வருவன ஆசிரியத்துறையாம், அல்லது ஓரடி குறைந்து வருவன ஆசிரிய நேர்த்துறை யென்றும், ஈரடி குறைந்து வருவன ஆசிரிய இணைக்குறட்டுறைஎன்றும் கொள்க.

---

* - † சிலப்பதிகாரம், ஆய்ச்சியர் குரவை, பாட்டு - ௨, ௩.

வருமாறு :

2. ஆசிரியத்துறை

"கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி[1] வருதிராயின்
அரையிருள் [2]யாமத் தடுபுலியே றும்மஞ்சி யகன்றுபோக
நரையுரு மேறுநுங் கைவே லஞ்சு நும்மை
வரையர மங்கையர் வெளவுத லஞ்சுதும் வாரலியோ."

இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்துவந்த ஆசிரியத்துறை.

ஆசிரியத்துறை

"வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட்சேய் வடிவே போலத்
தண்டளிர்ப்பூம் பிண்டித் தழையேந்தி மாவினவித் தணந்
தண்டளிர்ப் பூம்பிண்டித் தழையேந்தி வந்துநம் [தோன்யாரே
பண்டைப் பதிவினவிப் பாங்கு படமொழிந்து படர்ந்தோ
[னன்றே."

இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து, இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறை.

ஆசிரியத்துறை

"இரங்கு குயின்முழவா இன்னிசையாழ் தேனு
அரங்கு மணிபொழிலா ஆடும் போலும் இளவேனில்
அரங்கு மணிபொழிலா ஆடு மாயின் [வேனில்."
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்ததிள

இது நான்கடியாய் இடையிடை குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரிய இணைக்குறட்டுறை.

ஆசிரியத்துறை

*"கொன்றூர்ந் தமைந்த குருமுகத் தெழில்சிறக்
குருதிக் கோட்டின் இருந்தாட் பெருங்கைக்

(பாடம்) 1. வருவிராயின். 2. 'யாமத் தடுபுலியேறு நும்மஞ்சி' (இலக்கண விளக்கம்)

*இவ்வாசிரியத்துறையின் ஈற்றடி எளிதாகச் சீர்பிரித்தற் இயலாததாய் அமைந்துள்ளது.

சிதம்பரச் செய்யுட் கோவையில் இதே இலக்கணம் பெற்றமைந்துள்ள ஆசிரியத்துறையானது நான்கடியும் எளிதாகச் சீர்பிரித்தற்கியன்றதாய் உளது.

"உண்டாங் கெனினு மிலதென் றறிஞர்கள், பொய்யெனப் புகலவு மெய்யெனப் பெயர்பெற், றுன்னுமுன் மின்னமென வுன் தாய் மாய்வது, நிலையில் யாக்கை."

குன்றுமென அன்றுமெனக்
குமுறு நின்றன கொடுந்தொழில் வேழம்
வென்றூர்ந் தமைந்த விளங்கொளி யிளம்பிறைத்
துலங்குவா ளிலங்கெயிற் றழலுளைப் பருஉத்தா
ளதிரும் வானென வெதிருங் கூற்றெனச்
சுழலா நின்றன சுழிக்கண் யாளி
சென்றூர்ந் தமைந்த சிறுநுதி வள்ளுகிர்ப்
பொறியெருந் தெறும்வலிப் புலவுநா றழல்வாய்ப்
புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமான் ஏற்றை
*''என்றும் இவையிவை யியங்கலி னெந்திறத்
தினிவரல் வேண்டலந் தனிவர லெனத்தலை
விலக்கவு மிருவரை மிசையெறி குறும்பிடை
யிரவிடைக் களவுளங் கற்றுயது கற்பன்றே''

இது நான்கடியாய் முதலடியும், மூன்றுமடியும் பதினான்கு சீராய் அல்லாத அடியிரண்டும் பதினாறு சீரால் இடையிடை குறைந்துவந்த ஆசிரியத்துறை.

என்னை,

†''கடையதன் அயலடி கடைதபு நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
[1]இடையிடை குறைநவும் அகவல் துறையே''

என்பது யாப்பருங்கலம்.

---

கண்டாங் கெகழுங் கிழமுதி ரமையத், தைவளி பித்தெனு மெய்தரும் வித்தில், கடலிற் றிரையென வுடலிற் றிரையொடு, கனியா நின்றன கவிவுசெய் நோய்கள்.

புண்டாங் கயின்முக் குடுமிப் படையொடு, மெழிறலைத் தழல் விழித் துயி நணக் கனல்சேர் புகையாமென நிழலாமெனத் திரியா நின்றது, கொலைசெய் கூற்றம்.

விண்டாங் ககனுபு மெய்ப்பொரு டுணிவோர், மின்பொலி பொன்புனை மன்றிலெம் முயிராம், விமலன் குஞ்சித கமலங்கும்பிட, வேண்டுவர் வேண்டார் விண்மிசை யுலகே.''

(பாடம்) 1. இடையடி.

*இவ்வடியில் 20 சீர்கள் இலக்கணத்துக்கு மாறாக இருந்ததால் திருத்தப்பட்டுளது.

†யாப்பருங்கலம் - எக.

'குறைவில்தொல் சீரகவல், விருத்தங் கழிநெடிலுன் கொத்திறுவது' எ - று.

கழிநெடிலடி நான்காய்த் தம்முள் அளவொத்துவருவன ஆசிரியவிருந்தம்; எ - று.

'குறைவில்தொல் சீர்' என்று சிறப்பித்தவதனால் எண்சீரின் மிக்க சீரான் வந்த அடியெல்லாஞ் சிறப்பில எனக் கொள்க.

வருமாறு:—

ii. ஆசிரியவிருத்தம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

"விடஞ்சூ ழரவி னிடைநுடங்க மினல்வாள்
வீசி விரையார்வேங்
கடஞ்சூழ் நாடன் காளிங்கன் கதிர்வேல்
பாடும் மாதங்கி
வனஞ்சேர் கொங்கை மலைதாந்தாம் வடிக்கண்
ணில மலர்தாந்தாம்
தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தா மென்னுந்
தன்கைத் தண்ணுமையே."

இஃது அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம்.

௧. 'கணிகொண்ட' என்பது: எழுசீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம.

௨. 'மூவடிவினுல்' என்பது: எண்சீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம.

௩. 'இடங்கை வெஞ்சிலை' என்பது: ஒன்பதின் சீர்க் கழிநெடிலடியான வந்த ஆசிரிய விருத்தம்.

௪. 'கொங்குதங்கு' என்பது: பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருதகம

---

௧, ௨, ௩ ஆவது பக்கத்திலும், ௩, ௪, ௩அ ஆவது பக்கத்திலுங் கழிநெடிலடிக்கு உதாரணமாகக் காட்டப்பட்டன.

இவை ஈண்டு எதற்காகக் காட்டப்பட்டனவெனின், அவ்வடியான் வரும் விருத்தத்திற்கு உதாரணமாகக் காட்டப்பட்டன என்க.

என்னை,

*"கழிநெடி லடிநான் கொத்திறின் விருத்தமஃ
தழியா மரபின தகவ லாகும்"

'மெல்லியலே' என்பது பாடம் அன்றி.

### உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

கன்று குணிலவா றுறத்தா ழ்சையாங் கரைபோருகான்
என்றலும் வண்டோர் பூந்தா ரிரங்கு குயின்முழவா
கொன்றாக் தமைந்த வகவற் றுறைதுறை யாவிருத்தம்
பின்றாழ குழலி விடங்கணி மூவடி வாதியவே. (௫௭)

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின் வழியே ஆசிரியப்பா வினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க.

ஆசிரியப்பாவும் அதன் இனமும்
முற்றும்

---

## 4. கலிப்பாவும், அதன் இனமும்

### நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

### அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொற் சுரிதகமாய்
நிரலொன்றி னேரிசை யோத்தா ழிசைக்கலி நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடி முச்சீர் குறளடு வேமடுப்பின்
அரவொன்று மல்குலஃ தம்போ தரங்கவோத் தாழிசையே. (௫௮)

துள்ளல் ஓசைத்தாய், நேரீற்றியற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வாராது நிரைமுதலாகிய வெண்பாவுரிச்சீர் மிக்கு, நேரடித்தாய்க் கலித்தளையும் அயற்றளையுந்தட்டுத் தரவு, தாழிசை என்னும் முதல் உறுப்பும் அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னுந் துணை உறுப்பும் உடைத்தாய் ஒத்தாழிசைக்கலி, வெண்கலி, கொச்சகக்கலி என்னும் வேறு பாட்டாற் கிடந்த கலிப்பாக்களை உறுப்பினானும் ஓசையானும், பொருளானும் பெயர் வேறுபாடு உணர்த்துவான் எடுத்துக் கொண்டார்.

---

*யாப்பருங்கலம் - எ.

அவற்றுள், இக் காரிகை நேரிசை யொத்தாழிசைக் கலிப்பாவும், அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'தரவொன்று தாழிசைமூன்று தனிச்சொற் சுரிதகமாய் நிரலொன்றி னேரிசை யொத்தாழிசைக்கலி'' என்பது:

முன் ஒரு தரவு வந்து, அதன் பின்பு மூன்று தாழிசை வந்து, அதன்பின் ஒரு தனிச்சொல் வந்து, அதன்பின் ஆசிரியத்தானுவது, வெண்பாவானுவது ஒரு சுரிதக உறுப்புப்பெற்று வருவது நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா: எ – று.

தரவு எனினும், எருத்தம் எனினும் ஒக்கும்.

தாழிசை எனினும், இடைநிலைப்பாட்டு எனினும் ஒக்கும்.

தனிச்சொல் எனினும், விட்டிசை எனினும், கூன் எனினும், தனிநிலை எனினும் ஒக்கும்.

சுரிதகம் எனினும், அடக்கியல் எனினும், வாரம் எனினும், வைப்பு எனினும், போக்கியல் எனினும் ஒக்கும்.

என்னை,

''தந்துமுன் னிற்றலிற் றரவே தாழிசை
யொத்தாழ்ந் திசைத்தலின் ஒத்தா ழிசையே''

''தனிதர நிற்றலிற்[1] றனிச்சொற் குளிதிரை
நீர்ச்சுழி போல நின்றுசுரிந் திறுதலிற்
சோர்ச்சியில் புலவர் சுரிதக மென்ப''

என்று காரணக்குறி சொன்னருமுளர் எனக் கொள்க.

இனித் தரவு, தாழிசைகட்கு அடிவரையறை யாமாறு *'சுருங்கிற்று மூன்றடி' என்னுங் காரிகையுட் போக்கிச் சொல்லுதும்.

(பாடம்) 1. 'தனிநிலை'
*இஃது ஒழிபியலுள் ஏழாவது காரிகை.

வருமாறு:—

i. நேரிசை ஒத்தாழிசைக்கலிப்பா

"வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றுய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணெடுங்கு முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ."

இது தரவு.

குருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவாற்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே,
சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய வென்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே
சிலம்படைந்த வெங்கானஞ் சீரிலவே யென்பவாற் [ரே.
புலம்படைந்து நலந்தொலையப் போவாரோ பொருளில

இவை மூன்றுந் தாழிசை.

எனவாங்கு

இது தனிச்சொல்.

"அருளெனு மிலராய்ப் பொருள் வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடு தானையிற் பொலிந்தே."

இது சுரிதகம்.

இது தரவு மூன்றடியாய்த், தாழிசை மூன்றும் இரண்டிரண்டடியாய்த், தனிச்சொற் பெற்று, மூன்றடி ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா.

என்னை,

"தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொற் கிடந்து சுரிதகந் தழுவ
வைத்த மரபின தொத்தா ழிசைக்கலி"

என்றார் மயேச்சுரர்.

"தரவு தாழிசை தனிச்சொற் சுரிதகம்
எனுநான் குறுப்பின தொத்தா ழிசைக்கலி"

என்றார் காக்கைபாடினியார்.

வெள்ளைச் சுரிதகத்தாலிற்ற நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் செய்யுள்:

வருமாறு:—

"முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனிவனே
எத்திசையும் பல்லுயிர்க ளின்புற வினிதிருந்து
பத்துறு திசையனைத்தும் பகைபசி பிணிநீங்க [வினுய்.
உத்தமர்க டொழுதேத்த வொளிர்வரைபோற் செல

இது தரவு

எள்ளனைத்து மிட ரின்றி யெழின்மாண்ட பொன்னெயில்
உள்ளிருந்த வுன்னையே வுறுதுணையென் றடைந்தோரை
வெள்ளில்சேர் வியன்காட்டு ளுறைகென்றல் விழுமிதோ.

குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன் னடைந்தோரைப்
பிணம்பிறங்குபெருங்காட்டு ளுறைகென்றல் பெருமையோ.

விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கநின் னடைந்தோரைத்
தடத்தகைய காடுறைக வென்பதுநின் றகுதியோ.

இவை மூன்றுந் தாழிசை.

எனவாங்கு

எனைத் துணையை யாயினு மாகமற் றுன்கட்
டினைத்துணையுந் தீயவை யின்மையிற் சேர்தும்
வினைத்தொகையை வீட்டுக வென்று."

இது சுரிதகம்.

'சீர்த்திரை போன், மரபொன்று நேரடிமூச்சிச் சுறணடுவே மடுப்பின், அது அம்போதரங்க வொத்தாழிசை என்பது:

கரைசாரக் கரைசார ஒருகாலைக் கொருகாற் சுருங்கி வருகின்ற *நீர்த்தரங்கம்போல நாற்சீர் அடியும், முச்சீர் அடியும், இருசீர் அடியும் ஆகிய அசையடிகளைத் தாழிசைக்கும், தனிச்சொற்கும் நடுவே, தொடுத்துத் தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஐந்து உறுப்புடைத்தாய் வருவது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா; எ - று.

'அரவொன்று மல்குல்' என்பது: மகடூஉ முன்னிலை.

'மாபோன்று நேரடி' என்று சிறப்பித்தவதனால், அசையடிதான் †ஈரடியால் இரண்டும், ‡ஓரடியால் நான்கும், முச்சீரால் எட்டும், இருசீரால் பதினாறுமாய் வருவது சிறப்புடைத்து. எட்டும், பதினாறும் என்று சொல்லப்பட்டன, நான்கும் எட்டுமாகச் சுருங்கிவரப் பெறுமாயினும் எனக் கொள்க.

என்னை,

"ஈரடி யிரண்டு மோரடி நான்கும்
முச்சீ ரெட்டு மிருசீ ரிரட்டியும்
அச்சீர் குறையினு மம்போத ரங்கம்"

என்றாராகலின்.

அம்போதரங்கம் எனினும், அசையடி எனினும், பிரிந்திசைக்குறள் எனினும், சொற்சீரடி எனினும், எண் எனினும ஒக்கும்.

என்னை,

"அனைய வாகிய வசையடி நான்குந்
தனியொடு தாழிசை யிடைவரு மென்ப"

*இது, 'பல உறுப்புக்களு முறையே சுருங்கியும், ஒரோவழிப் பெருகியும் முடுகியுங் கடைக்கண் விரிந்து, நீர்த்தரங்கம் போறலின்' என்பர், நச்சினார்க்கினியரும்.

†—‡ இவை நாற்சீரடி யென்றுணர்க.

அவற்றைப் *பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் என்று பெயரிட்டு வழங்குவாரும் உளர்.

வருமாறு :

ii. அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

"கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
அழலவிர் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
ஆர்புன லிழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்;

இது தரவு.

முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ.

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோவும்
மாணாதா ருடம்பொடு மறம்பிதிர வெதிர்கலக்கிச்
சேணுய ரிருவிசும்பிற் சேர்த்ததுநின் சினமாமோ.

படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரினொடு மருப்பொசிய வீழ்ந்துதிறல் வேறுக
எருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ.

இவை மூன்றுந் தாழிசை.

இலங்கொளி மகரத் தெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கையின் மாஅ னின்னிறம்;
விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை.

இவை நாற்சீரடி இரண்டம்போதரங்கம் (பேரெண்)

* நாற்சீரடியாய் வருவன பேரெண் எனவும், நாற்சீரோரடியாய் வருவன அளவெண் எனவும், முச்சீரோரடியாய் வருவன இடையெண் எனவும், இருசீரோரடியாய் வருவன சிற்றெண் எனவும் கூறினரெனக் கொள்க.

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை;
தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை;
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை;
வலிமிகு சகட மாற்றிய வடியினை;

இவை நாற்சீரோரடி நான்கம்போதரங்கம். (அளவெண்)

போரவுணர்க் கடந்தோய் நீ,
புணர்மருதம் பிளந்தோய் நீ;
நீரகல மளந்தோய் நீ;
நிழறிகழைம் படையோய் நீ;

இவை முச்சீரோரடி நான்கம்போதரங்கம். (இடையெண்)

வாழி நீ;
உலகு நீ;
ஆழி நீ;
அருளு நீ;
உருவு நீ;
அருவு நீ;
அறமு நீ;
மறமு நீ;

இவை இருசீரோரடி எட்டம்போதரங்கம். (சிற்றெண்)

எனவாங்கு,

இது தனிச்சொல்.

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
தொழுகழற் கொடும்பூண் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
தொன்று முதிர்கட லுலகம் முழுதுடன்
ஒன்றுபுரி திகிரி யுருட்டுவோ னெனவே."

இஃது ஆசிரியச் சுரிதகம்.

இஃது எட்டும், பதினாறும் என்று சொல்லப்பட்ட முச்சீர் அடியும், இருசீர் அடியும், நான்கும் எட்டுமாய் வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா.

"நலங்கிளர் திருமணியு நன்பொன்னுங் குயின்றமைகார்
இலங்கெயிற் றழலரிமா னெருத்தஞ்சே ரணையின்மேல்
இருபுடையு மியக்கரச ரிணைக்கவரி [1]யெடுத்தசைப்ப
விரிதாமந் துயல்வருஉம் வென்குடைமூன் றுடனிழற்ற
வண்டரற்ற நாற்காதம் வகைமாண வுயர்ந் தோங்கெ[யே.
தண்டளிர்ப்பூம் பிண்டிக்கீழ்த் தகைபெறவீற் றிருந்தனை

(பாடம்) 1. 'யெடுத்தெறிய'

என்னும் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவினுள் *எட்டும், பதினாறும் என்று சொல்லப்பட்ட அம்போதரங்கம் குறையாதே வந்தவாறு யாப்பருங்கல விருத்தியுட் கண்டு கொள்க.

என்னை,

"நீர்த்திரை போல நிரலே முறைமுறை
ஆக்கஞ் சுருங்கி யசையடி தாழிசை
விட்டிசை விரியத் தொடுத்துச் சுரிதகந்
தாக்கித் தொடுத்த தரவினொ டெனவும்[1]
யாப்புற் றமைந்த வம்போ தரங்கம்"

என்றார் காக்கைபாடினியார்.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

வாணெடுங் கண்பனி நேரிசை யாகு மதர்த்திருண்டு
சேணுற வோடிக் குழையிட றிச்செருச் செய்யும்விழி
நாணுந் திருவு மறிவுஞ் செறிவு முடைய நல்லாய்
ஏனுங் கெடலரு மாமுனி யம்போ தரங்கமென்னே.

இவ் வுரைச்சூத்திரக் காரிகையின் வழியே நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும், அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குங் காட்டிய இலக்கியங்களை முதல் நினைத்துக் கொள்க.

iii. வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்கலிப்பா

அசையடி முன்னர் அராகம்வந் தெல்லா உறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக வொத்தாழிசைக்கலி வான்றளைதட்
டிசைதன தாகியும் வெண்சீர் ஓரையைந்துமின் பான்மொழியாய்
விசையறு சிந்தடி யாலிறு மாய்விடின் வெண்கலியே. (௩0)

இ - கை. வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவும் வெண் கலிப்பாவும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

*இவை இந்நூலுள் அடுத்துவரும் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவில் அவ்வாறே குறையாமல் எட்டும், பதினாறுமாய் வந்தவாறு காண்க.

1. (பாடம்.) டைந்தும்.

'அசையடி முன்னரராகம்வந் தெல்லா வுறுப்புமுண் டேல், வசையறு வண்ணக வொத்தாழிசைக்கலி' என்பது:

அம்போதரங்க உறுப்பிற்கும் தாழிசைக்கும் நடுவே அராக உறுப்புப்பெற்றுத் தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறுறுப் பினையும் உடைத்தாய் வருமெனின் அது வண்ணக ஒத் தாழிசைக் கலிப்பா எனப்படும்; எ - று.

அராகம் எனினும் வண்ணகம் எனினும், முடுகியல் எனினும் அடுக்கியல் எனினும் ஒக்கும்.

'வசையறு வண்ணகம்' என்று சிறப்பித்தவதனால் அராக உறுப்புத்தான் அளவடி முதலாய எல்லா வடியானும் வரப்பெறும் எனக் கொள்க.

அடிவரையறையாவது: சிறுமை நான்கடி, பெருமை எட்டடி, இடை ஐந்தடியானும், ஆறடியானும், எழ்டியானும் வரப்பெறும் எனக் கொள்க.

என்னை,

"அளவடி முதலா வனைத்தினு நான்கடி
முதலா யிரட்டியு முடுகிய லடக்கும்"

என்றாராகலின்.

வருமாறு :—

வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

விளங்குமணிப் பசும்பொன்னின் விரித்தமைத்துக் கதிர்கான்று
துளங்குமணிக் கனைகழற்காற் றுறுமுமலர் நறும்பைந்தார்ப்
பருஉத்தடக்கை மதயானைப்[1] பணையெருத்தின் மிசைத்தோன்றுங்
குருஉக்கொண்ட மணிப்பூணேய் குறையிரந்து முன்னாட்கண்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கு மல்லார்க்குந்
தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரகேள் ;

இது தரவு.

(பாடம்) 1. பகட்டெருத்தி லெரிகுஞ்சி.

காட்சியாற் கலப்பெய்தி யெத்திறத்துங் கதிர்ப்பாகி
மாட்சியாற் றிரியாத மரபொத்தாய் கரவினாற்
பிணிநலம் பெரிதெய்திப் பெருந்தடந்தோள் வனப்பழிவ
அணிநலந் தனியேவந் தருளுவது மருளாமோ ;

அன்பினா லமிழ்தனைஇ யறிவினாற் பிறிதின்றிப்
பொன்புனை பூணாகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோ ளருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்குங் காதலுங் காதலோ ;

பாங்கனையே வாயிலாப் பல்காலும் வந்தொழுகுந்
தேங்காத கரவினையுந் தெரியாத விருளுடைக்கட் [யாய்த்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் தமியை
தடமலர்த்தார் அருளுநின் தகுதியுந் தகுதியோ ?

இவை மூன்றும் தாழிசை.

தாதுமுறிசெறிதடமல ரிடையிடை தழலென விரிவனபொழில்
போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு கருநெய்தல் விரிவனகழி
தீதுறு திறமறு கெனநனிமுனிவன துணையொடு பிணைவன
மூதறு மொலிகலி நுரைதரு திரையொடு கழிதொடர் [துறை,
[புடையது கடல் ;

இவை நான்கும் அராகம்.

கொடுந்திற லுடையன சுறவேறு கொட்பதனால்
இடுங்கழி யிராவருதல் வேண்டாவென் றிசைத்திலமோ ;
கருநிறத் தடுதொழிற் கராம்பெரி துடைமையால்
இருணிறத் தொருகான லிராவார லென்றிலமோ ;

இவை நாற்சீர் ஈரடி யிரண்டம்போதரங்கம்.

நாணொடு கழிந்தன்றாற் பெண்ணரசி நலத்தகையே :
துஞ்சலு மொழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்
அரற்றொடு கழிந்தன்றா லாயிருளு மாயிழைக்கே : [ணே
நயப்பொடு கழிந்தன்றா னனவதுவு நன்னுதற்கே ;

இவை நாற்சீர் ஓரடி நான்கம்போதரங்கம்.

அத்திறத்தா லசைந்தன தோள் :
அலர்தற்கு மெலிந்தன கண் ;
பொய்த்துறையாற் புலர்ந்தது முகம் ;
பொன்னிறத்தாற் போர்த்தன முலை ;

(பாடம்) 1. மொழி.

அழலினு லசைந்தது நகை ;
அணியினு லொசிந்த திடை ;
குழலினு லவிர்ந்தது முடி ;
குறையினுற் கோடிற்று விரை ;

இவை முச்சீர் ஓரடி யெட்டம்போதரங்கம்.

உட்கொண்ட தகைத்தொருபால் ;
உலகறிந்த வலத்தொருபால் ;
கட்கொண்டல் துளித்தொருபால் ;
கழிவெய்தும் படித்தொருபால் ;
பரிவுறாஉந் தகைத்தொருபால் ;
[1]படர்வுறாஉம் பசப்பொருபால் ;
இரஉறாஉந் துயரொருபால் ;
இளிவந்த எழிற்றெருபால் ;
மெலிவுறாஉந் தகைத்தொருபால் ;
விளர்ப்புவந் தடைந்தொருபால் ;
பொலிவுசென் றகன்றொருபால் ;
பொறைவந்து கூர்ந்தொருபால் ;
காதலிற் கதிர்ப்பொருபால் ;
கட்படாத் துயரொருபால் ;
ஏதில்சென் றணைந்தொருபால் ;
இயனணிற் செறிவொருபால் ;

இவை இருசீர் ஓரடிப் பதினறம்போதரங்கம்.

என வாங்கு.

இது தனிச்சொல்.

இன்னதிவ் வழக்கம் இத்திறம் இவணலம்
என்னவு முன்னுட் டுன்று யாகிக்
கலந்த வண்மையை யாயினு நலந்தக
கிளையொடு கெழீஇத் தளையவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே
பொற்பொடு பொலிக நும் புணர்ச்சி தானே.''

இது சுரிதகம்.

இஃது ஆறுறுப்புங் குறைவின்றி வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.

---

(பாடம்) 1. பசப்புவந்தடைந்தொருபால்

என்னை,

"அச்சொலப் பட்ட உறுப்போ டாகம்
வைத்த நடையது வண்ணக மாகும்"

என்றார் காக்கைபாடினியார்.

'வான்றளை தட் டிசைதன தாகியும் வெண்பா வியைந் தும், விசையறு சிந்தடி யாலிறு மாய்விடின் வெண்கலியே' என்பது: கலித்தளை தட்டுக் கலியோசை தழுவியும், வெண் டளை தட்டு வெள்ளோசை தழுவியும், வந்து ஈற்றடி முச்சீரான் இறுமெனின் அது வெண்கலிப்பா என்றும், கலி வெண்பா என்றும் வழங்கப்படும் : எ - று.

'இன்பான் மொழியாய்' என்பது : மகடூஉ முன்னிலை.

'விசையறு சிந்தடி' என்று சிறப்பித்தவதனால் *வேற்றுத்தளை தட்டு அருகிவரவும் பெறும் எனக்கொள்க.

வருமாறு :—

வெண்கலிப்பா

"வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணுகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையான் வந்தேத்தச்
சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன்முறையான்
மனையறமுந் துறவறமு மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து விடொடுகட் டிவையுரைத்த
தொன்மைசால் மிகுகுணத்தெந் துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் விடெய்து மாறு"

இது தன்றளையானும், துள்ளல் ஓசையானும் வந்தமையான், வெண்கலிப்பா.

V. கலிவெண்பா

†"சுடர்த்தொடீஇ கேளாய் தெருவிநு மாடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி

---

* இங்ஙனம் பொதுப்படக் கூறினாரேனும் வெண்கலிப் பாவே அவ்வாறு வேற்றுத் தளைதட்டு வருமெனக் கொள்க.

† கலித்தொகை, குறிஞ்சி - கரு.

நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானு மிருந்தேமா இல்லிரே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானும்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை யலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்
செய்தானக் கள்வன் மகன்''

இது வெண்டளைதட்டு வெள்ளோசை தழுவி ஒரு பொருண்மேல் வந்தமையால், கலிவெண்பா.
என்னை,

*''ஒருபொரு ளுதலிய வெள்ளடி யியலாற்
திரிபின்றி வருவது கலிவெண் பாட்டே''

''வெண்டளை தன்றளை யென்றிரு தன்மையின்
வெண்பா வியலது வெண்கலி யாகும்''

என்றார் காக்கைபாடினியார்.

இனிப் பிறதளையான் வருமாறு :—

வெண்கலிப்பா

''ஏர்மலர் நறுங்கோதை யெருத்தலைப்ப விறைஞ்சித்தன்
வார்மலர்த் தடங்கண்ணார் வலைப்பட்டு வருந்தியவென்
தார்வரை யகன்மார்பன் றனிமையை யறியுங்கொல்
சீர்மலி கொடியிடை சிறந்து.''

இஃது ஆசிரியத்தளையானும், தன்றளையானும் வந்த வெண்கலிப்பா.

பிறவும் யாப்பருங்கல விருத்தியுட் காண்க.

* தொல், பொருள், செய்யுளியல் - கரிச.

உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

நின்று விளங்கு மணிப்பசும் பொன்னிற[1] மாறுறப்பும்
ஒன்றிய வண்ணக வோத்தா ழிசைக்கலி யோசைகுன்றாத்
துன்றிய வாளார் மழையுஞ சுடர்த்தொடீஇ யேர்மலரும்
என்றிவை வெண்கலிப் பாவிற் கிலக்கிய மேந்திழையே. (சுக)

இவ் வுரைச் சூத்திரக் காரிகையின் வழியே வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும், வெண்கலிப்பாவிற்குங் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க.

கொச்சகக் கலிப்பாவின் வகை

தரவே தரவிணை தாழிசை தாமுஞ் சிலபலவாய்
மரபே யியன்று மயங்கியும் வந்தன வாங்கமைத்தோள்
அரவே ரகலல்கு லம்பேர் நெடுங்கண்வம் பேறகோங்கைக்
குரவே கமழ்குழ லாய்சொன்ட வான்பெயர் கோச்சகமே.

இ - கை. தரவு கொச்சகக் கலிப்பாவும், தரவிணைக் கொச்சகக் கலிப்பாவும், சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவும், பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவும், மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'தரவே தரவிணை தாழிசை தாமுஞ் சிலபலவாய், மரபே யியன்று மயங்கியும் வந்தன' என்பது.

ஒரு தரவு வந்தும், இரண்டு தரவு வந்தும், தாழிசை சில வந்தும், தாழிசை பல வந்தும், தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்னும் ஆறுறுப்புந் தம்முண் மயங்கியும், வெண்பாவினோடும், ஆசிரியத்தினோடும் மயங்கியும் வருவனவெல்லாங் கொச்சகக் கலிப்பா என்று பெயரிட்டு வழங்கப்படும்; எ - று.

'சொல்லின் முடிவி னப்பொருண் முடித்தல்' என்பது, தந்திரவுத்தியாகலின் தரவு கொச்சக முதலாயின அவ்வப் பெயரானே வழங்கப்படும் எனக்கொள்க.

ஒரு தரவு வந்தால் தரவு கொச்சகக் கலிப்பா என்றும், தரவு இரண்டாய் வந்தால் தரவிணை கொச்சகக் கலிப்பா

(பாடம்) 1. பொன்னிறை யாறுறப்பும்.

என்றும், சில தாழிசை வந்தால் சிஃறுழிசைக் கொச்சகக் கலிப்பா என்றும், பல தாழிசை வந்தால் பஃறுழிசைக் கொச்சகக் கலிப்பா என்றும், தம்முண் மயங்கியும் பிறவற்றி னோடும் மயங்கியும் வருவனவெல்லாம் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்றும் வழங்கப்படும்.

'தாமும்' என்று மிகுத்துச் சொல்லியவதனுல் தனிச் சொல்லும், சுரிதகமும் இடையிடை வரப்பெறும் எனக் கொள்க.

'மரபே மியன்றும்' என்று சிறப்பித்தவதனுல் வா லாற்று முறைமையோடுங் கூட்டிக் கலியுறுப்பில் மிக்கும், குறைந்தும், பிறழ்ந்தும். உறழ்ந்தும், மயங்கியும், கலியுள் வாரா என்ற நேரிற்று இயற்சீரும், நிரைகடுவாகிய வஞ்சி யுரிச்சீரும், ஐஞ்சீர் அடியும் வந்து, ஒத்தாழிசைக் கலிப்பாக்க ளோடு ஒவ்வாது வருவனவெல்லாம் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்று வழங்கபபடும் எனக் கொளக.

'வாங்கமைத்தோள்.........குழலாய்' என்பது மகடூஉ முன்னிலை.

*'கொண்டவான் பெயர் கொச்சகமே' என்பது இறுதி விளக்கு;

வருமாறு :—

vi. தரவு கொச்சகக் கலிப்பா

†"செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த் தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ விடைநுழையு மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே"

இது சுரிதகம் இல்லாத தரவு கொச்சகக் கலிப்பா.

---

* இதன் பொருள் (மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தான் வரும் பாக்கள்) அமையப்பெற்ற சிறந்த பெயரானது கொச்சகம் என்பது.

†இச் செய்யுள் ௯௪-வது பக்கத்திற் கலித்தளைக்கும் ௬௨-வது பக்கத்திற் கலிப்பாவின் சிறுமைக்கும் ௧௧-வது பக்கத்தில் அகவற்றுள்ளலோசைக்கும் உதாரணமாகக் காட்டப் பட்டது.

தரவு கொச்சகக் கலிப்பா

"குடநிலைத் தண்புறவிற் கோவல ரெடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவிற் றகையேறு மரம்பாய்ந்து
வீங்குமணிக் கயிறுரீஇத் தாங்குவனத் தேறப்போய்க்
கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப."

இது தரவு

எனவாங்கு,

இது தனிச்சொல்.

"ஆனொடு புல்லிப் பெரும்புதன் முனையும்
கானுடைத் தவர்தேர் சென்றவாறே."

இது தனிச்சொல்லும், சுரிதகமும், பெற்று வந்த தரவு கொச்சகக் கலிப்பா.

தரவிணைக் கொச்சகக் கலிப்பா

"வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனாய்
கொடிபடு மணிமாடக் கூடலார் கோமானே;

இது தரவு.

எனவாங்கு,

இது தனிச்சொல்.

துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் துறப்புண்டாங்
கிணைமலர்த்தா ரருளுமே லிதுவிதற்கோர் மாறென்று
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரோ;

இது தரவு.

அதனால்,

இது தனிச்சொல்.

செவ்வாய்ப் பேதை யிவடிறத்
தெவ்வா றுங்கொலிஃ தெண்ணிய வாறே."

இது சுரிதகம்.

இஃது இடையிடைத் தனிச்சொற் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் இற்ற தரவிணைக் கொச்சகக் கலிப்பா.

சுரிதகமில்லாதது வந்தவழிக் கண்டுகொள்க.

## vii. சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா

"பருஉத்தடக்கை மதயானைப் பணியெருத்தின் மிசைத்தோன்றக்
குருஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் றேரினொடும் பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார் கோமானே ;

இது தரவு.

ஆங்கொருசார்,

இது தனிச்சொல்.

உச்சியார்க் கிறைவனா யுலகமெலாங் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனாப் பாவித்தார்
வச்சிரங் காணாத காரணத்தான் மயங்கினரே ;

ஆங்கொருசார்,

இது தனிச்சொல்.

அக்கால மணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனாப் பாவித்தார்
சக்கரங் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே ;

ஆங்கொருசார்,

இது தனிச்சொல்.

மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியவனாப் பாவித்தார்
வேல்கொண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே ;

இவை மூன்றுந் தாழிசை.

அஃதான்று,

இது தனிச்சொல்.

கொடித்தேர்த் தோன்றல் கொற்கைக் கோமான்
நின்றபுக ழொருவன் செம்பூட் சேஎய்
என்றுநனி யறிந்தனர் பலரே தானும்
ஐவரு ளொருவனென் றறிய லாகா
மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழிதிருவொடும் பொலிந்தே."

இது சுரிதகம்.

இது நான்கடித் தரவும், மூன்றடித் தாழிசை மூன்றும் சுரிதகமுமாய், இடையிடை தனிச்சொற் பெற்று, நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற் சிறிது வேறுபட்டு வந்தமையால் சிஃருழிசைக் கொச்சகக் கலிப்பா.

viii. பஃருழிசைக் கொச்சகக் கலிப்பா

"தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியு முடைநிறையு முடன்றளர முன்னாட்கட்
கண்மதியோர்ப் பிவையின்றிக் காரிகையை நிறைகவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ ;
இது தரவு.

இளநல மிவள்வாட விரும்பொருட்குப் பிரிவாயேல் ;
தளநல முகைவெண்பல் தாழ்குழல் தளர்வாளோ ;
தகைநல மிவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநல மிவள்வாடி வருந்தியில் லிருப்பாளோ ;
அணிநல மிவள்வாட அரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசோடு மடிவாளோ ;
நாம்பிரியே மினியென்று நறுநுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியோ மெனவுரைத்த உயர்மொழியும் பழுதாமோ ;
குன்றளித்த திரடோளாய் கொய்புனத்திற் கூடியநாள்
அன்றளித்த அருண்மொழியால் [1]அருளியதும் பழுதாமோ ;
சில்பகலு மூடியக்காற் சிலம்பொலிச்சி றடிபரவிப்
பல்பகலுந் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ ;
இவையாறுந் தாழிசை.

எனவாங்கு,
இது தனிச்சொல்.

[2]அரும்பெற லமிழ்தினுந் தரும்பொரு ளதனினும்
[3]பெரும்பெற லரிதிவள் வெறுக்கையு மற்றே ;
அதனால்,
விழுமிய தறிமதி வாழி
கெழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே.
இது சுரிதகம்.

இது நாலடித்தரவும், இரண்டடித் தாழிசை ஆறும் தனிச்சொல்லும், நான்கடிச் சுரிதகமும் பெற்றுவந்த பஃருழிசைக் கொச்சகக் கலிப்பா.

---

(பாடம்) 1. அருளுவது. 2. அரும்பெறல் இவளினும். 3. பெரும் பெறல் அரியன.

ix. மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

"மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்
நுரைநிவந் தவையன்ன நொய்ப்பறைய சிறையன்னம்
இரைநயந் திறைகூரு மேமஞ்சால் துறைவகேள்;
மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி யிறக்கலா
தெழுமுந்நீர் பரந்தொழுகு மேமஞ்சால் துறைவகேள்;

இவை இரண்டுந் தரவு.

கொடிபுரையு நுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோள்
தொடிநெகிழ்ந்த தோள்கண்டுந் துறவலனே யென்றியால்;
கண்கவரு மணிப்பைம்பூட் கயில்கவைஇய சிறுபுறத்தோள்
தெண்பனிநீ ருகக்கண்டுந் திரியலனே யென்றியால்;
நீர்பூத்த நிரையிதழ்க்க ணின்றொசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே யென்றியால்;
கனைவரல்யாற் றிடுகரைபோற் கைந்நில்லா துண்ணெகிழ்ந்து
நினையுமென் னிலைகண்டு நீங்கலனே யென்றியால்;
வீழ்சுடரி னெய்யேபோல் விழுமநோய் பொறுக்கல்லா
தாழுமென் னிலைகண்டு மகல்கிலனே யென்றிபால்;
கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்;

இவை யாறுந் தாழிசை.

அதனால்,

இது தனிச்சொல்

அடும்பம லிறும்பி னெடும்பனை மிசைதொறுங்
கொடும்புற மடலிடை யொடுங்கின குருகு;
செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர்
நெறிதரு புரவியின் மறிதருந் திமில்;
அரசுடை நிரைபடை விரைசெறி முரைசென
நுரைவரு திரையொடு கரைபொருங் கடல்;
அலங்கொளி யவிர்சுட ரிலங்கெழின் மலர்தொறுங்
கலந்தெறி காலொடு புலம்பின பொழில்;

இவை நான்கும் அராகம்.

விடாஅது கழலுமென் வெள்வளையுந் [1]தவிர்ப்பாய்மன்
கெடாஅது பெருகுமென் கேண்மையு நிறுப்பாயோ;

---

(பாடம்) 1. செறிப்டாய்மன்.

ஒல்லாது கழலுமென் ஞெளிவளையுஞ் செறிப்பாய்மன்
னில்லாது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ ;
தாங்காது கழலுமென் றகைவளையுந் தவிர்ப்பாய்மன்
னீங்காது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ ;
மறவாத வன்பினேன் மனனிற்கு மாறுரையாய்
துறவாத தமருடையேன் றுயர்திரு மாறுரையாய் ;
காதலார் மார்பன்றிக் காமக்கு மருந்துரையாய்
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய் ;
இணைபிரிந்தார் மார்பன்றி யின்பக்கு மருந்துரையாய்
துணைபிரிந்த தமருடையேன் துயர்திரு மாறுரையாய் ;

இவை யாறுந் தாழிசை

எனவாங்கு,

இது தனிச்சொல்.

பகைபோன்றது துறை ; தகையிழந்தன தோள்
பரிவாயின குறி ; தலைசிறந்தது துயர் ;
நகையிழந்தது முகம் : புகைபரந்தது மெய்
நனி[1] நாணிற் றுளம் ; பொறையாயிற்[2]றென் னுயிர் ;

இஃது இருசீரோரடி எட்டம்போதரங்கம்.

அதனால்,

இது தனிச்சொல்.

இனையது நிலையா லனையது பொழுதால்
நினையல் வாழி தோழி[3] துணைவரற்
பனியொடு கழிக உண்கண்
என்னொடு கழிகவித் துன்னிய நோயே.''

இது சுரிதகம்

இது தரவு இரண்டும், தாழிசை ஆறும், தனிச்சொல்லும், அராகம் நான்கும், பெயர்த்தும ஆறு தாழிசையும் தனிச்சொல்லும், இரு சீரோரடி யெட்டம்போதரங்க உறுப்பும் பெற்று நான்கடி ஆசிரியச் சுரிதகத்தா லிற்றுக் கலிக்கோதப்பட்ட ஆறுறுப்பும் மிக்கும் குறைந்தும், பிறழ்ந்தும், உறழ்ந்தும், மயங்கியும் வந்தமையான், மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

வெண்பாவினேடும், ஆசிரியத்தினேடும் வந்த மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா யாப்பருங்கல விருத்தியுள்

(பாடம்) 1. வாடிற்றுடம்பு, 2. றுயிர், 3. தொலையாப்.

"காமர் கடும்புனல்" என்னும் பழம்பாட்டிற் கண்டு கொள்க.

இன்னும், 'மரபா மியன்றும்' என்று சிறப்பித்ததனால், ஒருபோகு முதலா உடையனவற்றை யெல்லாம் இதனுற் பெயர்கொடுத்துக் கொச்சகம் என்று வழங்கப்படு மெனக் கொள்க.

என்னை,

"எருத்திய லின்றி யிடைநிலை பெற்றும்
இடைநிலை யின்றி யெருத்துடைத் தாயும்
எருத்த மிரட்டித் திடைநிலை பெற்றும்
இடைய திரட்டித் தெருத்துடைத் தாயும்
இடையு மெருத்து மிரட்டுற வந்தும்
எருத்த மிரட்டித் திடைநிலை யாரு
அடக்கியல் காறு மமைந்த வுறுப்பிற்
கிடக்கை முறைமையிற் கிழமைய தாயுந்
தரவொடு தாழிசை யம்போ தரங்கம்
முடுகியல் போக்கிய லென்றிவை யெல்லாம்
முறைதடு மாற மொழிந்தவை யின்றி
யிடையிடை வெண்பாச் சிலபல சேர்ந்தும்
மற்றும் பிறபிற வொப்புறுப் பில்லன
கொச்சக மென்னுங் குறிப்பின வாகும்"

என்றார் காக்கைபாடினியார்.

"தரவே தரவிணை தாழிசை சிலபல
வரன்முறை பிறழ அயற்பா மயங்கியுந்
தனிச்சொற் பலவா யிடையிடை நடந்தும்
ஒத்தா ழிசைக்கலி யுறுப்பினிற் பிறழ
வைத்த முறையான் வண்ணக விறுவாய்
மயங்கிவந் தனவு மியங்குநெறி முறைமையிற்
கொச்சகக் கலியெனக் கூறினர் புலவர்"

என்றார் காமவேளைக் கடுத்த புத்தேள் நாமந் தாங்கிய *நல்லாசிரியர்.

"ஓதப் பட்ட வுறுப்பு வகையெல்லாம்
ஏதப் படாமற் கலிக்கியல் பெய்தி

*இவர் மயேச்சுரர் ஆவர்.

மிக்குங் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும்
வண்ணமு மடியுந் தொடையு மயங்கியும்
அடக்கிய லந்தந் தொடுத்தன பல்கியும்
கலிவயிற் கடிந்த சிறிடை மிடைந்தும்
நாற்சி ரிறந்த சீரொடு சிவணியும்
முச்சி ரிருசி ரம்போ தரங்கம்
அச்சீர் முடிவிடை யழிவில தழுவியுங்
கொச்சகக் கலியெனக் கூறவும் படுமே.''

''கூறிய வுறுப்பில் குறைபா டின்றித்
தேறிய விரண்டுந் *தேவ பாணியுந்
தரவே யொழியினுந் தாழிசை யொழியினும்
இருவகை முத்திறத் தெண்ணே நீங்கினும்
†ஒருபோ கென்ப உணர்ந்திசி னோரே''

என்றார் மயேச்சுரர்.

‡''தரவின் றாகித் தாழிசை பெற்றுந்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கிய லின்றி யடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக வொருபோ காகு மென்ப''

என்றார் தொல்காப்பியனார்.

இவற்றிற் கிலக்கியம் யாப்பருங்கல விருத்தியுட் கண்டு கொள்க.

---

*தேவபாணியின் இலக்கணந் தொல்காப்பியம், செய்யுளியலில்,

''ஏனையொன்றே,
தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே''

என்னுஞ் சூத்திரத்தானும் அதனுரையானும் உணர்க.

†ஒரு போகானது, கொச்சக ஒருபோகும் அம்போதரங்க ஒருபோகும் என இருவகையாம். அடுத்துள்ள 'தரவின்றாகி' என்னுந் தொல்காப்பியச் சூத்திரம் கொச்சக ஒருபோகின் இலக்கணங் கூறுவது: அம்போதரங்க ஒருபோகின் இலக்கணச் சூத்திரம் வருமாறு:—

''எருத்தே கொச்சக மராகஞ் சிற்றெண்
அடக்கியல் வாரமோ டந்நிலைக் குரித்தே.''

‡தொல். பொருள். செய்யுளியல் - கசக.

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

குடநிலைத் தண்சேல்வப் போர்க்கதக் கண்ணன் றாவுகுன்று
வடிவுடை யாகுந் தாவிணை மன்னும் பருஉத்தடக்கை
இடமிக வாஞ்சிலை முழிசை தண்மதி யேர்பலவாய்
மடலவிழ் கோதை மணிகிள ராகு மயங்கிசையே. (௪௩)

இவ் வுரைச்சூத்திரக் காரிகையின் வழியே கொச்சகக் கலிப்பாக்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதல் நினைத்துக் கொள்க.

கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம்

அடிவரை யின்றி அளவொத்து மந்தடி நீண்டிசைப்பிற்
கடிதலில் லாக்கலித் தாழிசை யாகுங் கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது நேரடி யீரிரண்டாய்
விடினது வாகும் விருத்தந் திருத்தகு மெல்லியலே. (௪௪)

இ - கை. கலித்தாழிசையும், கலித்துறையும், கலிவிருத்தமும் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

'அடிவரை யின்றி யளவொத்து மந்தடி நீண்டிசைப்பிற், கடிதலில் லாக்கலித் தாழிசை யாகும்' என்பது:

இரண்டடியும், பலவடியும் வந்து, ஈற்றடிமிக்கு அல்லாத வடி தம்முள் ஒத்தும், ஒவ்வாதும் வருவது கலித்தாழிசை எ - று.

'கடிதலில் லாக்கலித் தாழிசை' என்று சிறப்பித்ததனால், ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வருவது சிறப்புடைத்து; தனியே வரப்பெறுமாயினும் எனக்கொள்க.

வருமாறு:—

i. கலித்தாழிசை

"கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்."

"ஐய்தினை காத்தும் அருவி யடுக்கத்தெம்
மாசில் சிறுகுடி வாரல்நீ ஐய நலம்வேண்டின்."

"மென்றினை காத்து மிகுபூங் கமழ்சோலைக்
குன்றச் சிறுகுடி வாரல்நீஐய நலம்வேண்டின்."

இவை யிரண்டடியாய் ஈற்றடிமிக்கு ஒருபொருள் மேல் மூன்றடுக்கி வந்தமையால், கலித்தாழிசை;

"வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போழ்தில் எழால்வாழி வெண்டிங்காள்
கேள்வரும் போழ்தி லெழாலாய்க் குறலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்டிங்காள்."

இஃது ஈற்றடிமிக்கு, ஏனையடி மூன்றும் ஒத்துவந்த கலித்தாழிசை;

'அளவொத்தும்' என்ற உம்மையால் ஈற்றடிக்கு ஏனையடி ஒவ்வாது வரப்பெறும் எனவுங் கொள்க.

"பூண்ட பறையறையப் பூதமருள
நீண்ட சடையான் ஆடுமே
நீண்ட சடையான் ஆடுமென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே."

இஃது ஈற்றடிமிக்கு இரண்டாமடி குறைந்து, முதலடியும் மூன்றுமடியும் ஒததுவந்த கலித்தாழிசை.

சீர் வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும் அடியானும் வரப்பெறும் எனக் கொள்க.

எனனே,

*"அடியெனைத் தாகியும் ஒத்துவந் தளவினிற்
கடையடி மிகுவது கலித்தா ழிசையே"
"அந்தடி மிக்குச் சிலபல வாயடி
தந்தமு ளொப்பன தாழிசை யாகும்"

என்றாகலின.

'கலித்துறையே, நெடிலடி நான்காய் நிகழ்வது' என்பது ஐஞ்சீரடி நான்காய் வருவது கலித்துறை; எ - று.

வருமாறு :—

---

*யாப்பருங்கலம். அஎ.

### ii. கலித்துறை

"யானுந் தோழியும் ஆயமும் ஆடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளுங் கைதையு மெல்லாங் கரியன்றே"

*"வென்றான் வினையின்—நீங்கினின்றார்."

இவை நெடிலடி நான்காய் வந்த கலித்துறை.

என்னை,

†"நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை
ஐஞ்சீ ரடியின் அடித்தொகை நான்மையோ
டெஞ்சா தியன்றன வெல்லாங் கலித்துறை"

என்றார் காக்கைபாடினியார்.

'நேரடி ஈரிரண்டாய், விடினது வாகும் விருத்தம்' என்பது: நாற்சீரடி நான்காய் வருவது கலிவிருத்தம் எ-று. 'இருத்தகு மெல்லியலே' என்பது; மகடூஉ முன்னிலை.

வருமாறு :—

### iii. கலிவிருத்தம்

"வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலின்
ஆய்தலின் ஒண்சுடர் ஆழியி னின்றமர்
வாய்தலின் நின்றனர் வந்தென மன்னர்முன்
நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்."

‡"தேம்பழுத் தினிய—தவள மாடமே"

என்னை,

§"அளவடி நான்கின கலிவிருத் தம்மே"

என்பது யாப்பருங்கலம்.

"நாலொரு சீரான் நடந்த அடித்தொகை
ஈரிரண் டாகி இயன்றன யாவையும்
காரிகை சார்ந்த கலிவிருத் தம்மே"

என்றார் காக்கைபாடினியார்.

---

* இந்தச் செய்யுளை கஉசு ஆவது பக்கத்திற் காண்க.
† யாப்பருங்கலம் - அஅ.
‡ இந்தச் செய்யுளை கஉசு ஆவது பக்கத்திற் காண்க.
§ யாப்பருங்கலம் - அகூ

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

கோய்தினை ஆய்தினை மேன்தினை வாள்வரி பூண்டபறை
எய்திய தாழிசை யானுமவேன் றானுங் கலித்துறையே
மைதிக ழோதி [1]வரிநெடுங் கண்ண வனமுலையாய்
மெய்தரு வேய்தலை தேம்பழுத் தேனைய விருத்தங்களே. (சரு)

இவ் வுரைச்சூத்திரக் காரிகையின வழியே கலிப்பா வினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக் கொள்க.

கலிப்பாவும் அதன் இனமும் முற்றும்.

---

## 5. வஞ்சிப்பாவினினமும்

### *வஞ்சிப்பாவிற் கீருமாறும்

வஞ்சித்தாழிசை, துறை, விருத்தம், அதன் ஈறு

குறளடி நான்கின மூன்றொரு தாழிசை கோதில்வஞ்சித்
துறையொரு வாது தனிவரு மாய்விடிற் சிந்தடி நான்
கறைதரு காலை யமுதே விருத்தந் தனிச்சொல்வந்து
மறைதலில் வாரத்தி னுலிறும் வஞ்சிவஞ் சிக்கோடியே.
(சகூ)

இ - கை. வஞ்சித்தாழிசையும், வஞ்சித்துறையும், வஞ்சி விருத்தமும், வஞ்சிப்பாவிற்கு ஈருமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

'குறளடி நான்கின மூனறொருரு தாழிசை கோதில்' என்பது: இருசீரடி நான்காய் மூன்று செய்யுள் ஒரு பொருண்மேல் அடுக்கிவருவன வஞ்சித்தாழிசையாம்; எ - று.

---

(பாடம்) 1. வடிவேல் நெடுங்கண்.

*இப் பாவிற்கு ஈருமாறொழிய மற்றைய இலக்கணங்கள் உறுப்பியலில் கச ஆவது சூத்திரமாகிய 'வெள்ளைக்கிரண்டடி' என்னுங் காரிகையினும் இவ்வியலின் முதற்சூத்திரமாகிய 'வெண்பாவகவல்' என்னுங் காரிகையினுங் கூறப்பெற் றுள்ளன; ஆதலின் ஈண்டு அவற்றுள் கூறப்பெறாத ஈருமா றொன்றுமே கூறினர்.

வெண்பா முதலிய மற்றைய மூன்று பாக்களுக்கும் அவ் விரு காரிகைகளினுங் கூறப்பெற்ற இலக்கணங்களன்றி வேருகக் கூற வேண்டிய இலக்கணங்கள் பெரிது முன்மையின், அப் பாக்கள் வெவ்வேருக விதந்து இலக்கணம் கூறப்பெற்றன.

'கோதில்' என்று மிகுத்துச்சொல்லியவதனால், அவை யொரு பொருள்மேன் மூன்றடுக்கி யல்லது வாரா எனக் கொள்க.

வருமாறு :—

i. வஞ்சித்தாழிசை

"மடப்பிடியை மதவேழம்
தடக்கையான் வெயின்மறைக்கும்
இடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்."

"பேடையை யிரும்போத்துத்
[1]தோகையான் வெயின்மறைக்கும்
காடக மிறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்."

"இரும்பிடியை யிகல்வேழம்
பெருங்கையான் வெயின்மறைக்கும்
அருஞ்சுர மிறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்."

இவை இருசீரடி நான்காய் ஒரு பொருண்மேன் மூன்றடுக்கி அடிமறியாக வந்த வஞ்சித்தாழிசை.

*"குறளடி நான்கவை கூடின வாகி
முறைமையின் அவ்வகை மூன்றணைந் தொன்றி
வருவன வஞ்சித் தாழிசை யாகும்"

என்றார் காக்கைபாடினியார்.

'கோதில் வஞ்சித் துறையொரு வாது தனிவரு மாய் விடின்' என்பது: இருசீரடி நான்காய் ஒரு பொருள்மேல் ஒன்றும் வருவது வஞ்சித்துறை ; எ - று.

வருமாறு :—

ii. வஞ்சித்துறை

"மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்."

இது குறளடி நான்காய் ஒரு பொருள்மேல் தனியே வந்தமையான் வஞ்சித்துறை

---

(பாடம்) 1. கோடையால்.

என்னை,

"குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை தனிவரின்
துறையென மொழிப துணிந்திசி னோரே"

என்றாராகலின்.

'சிந்தடிநான், கறைதரு காலை விருத்தம்' என்பது: முச்சீரடி நான்காய் வருவது வஞ்சிவிருத்தம்; எ - று.

வருமாறு :

iii. வஞ்சி விருத்தம்

"சோலை யார்ந்த சுரத்திடைக்
காலை யார்கழ லார்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்கண் இவள்வாழுமே."

இது சிந்தடி நான்காய் வந்தமையான், வஞ்சிவிருத்தம்:

என்னை,

"சிந்தடி நான்காய் வருவது வஞ்சிய
தெஞ்சா விருத்த மென்மனர் புலவர்"

என்பது யாப்பருங்கலம்.

'தனிச்சொல் வந்து, மறைதலில் வாரத்தினாலிறும் வஞ்சி' என்பது: குறளடி வஞ்சிப்பாவும் சிந்தடி வஞ்சிப் பாவுந் தனிச்சொற்பெற்று ஆசிரியச் சுரிதகத்தாலிறும்; எ - று.

'மறைதலில் வாரம்' என்று சிறப்பித்தவதனால் வஞ்சிப்பா ஆசிரியச்சுரிதகத்தால் இறுவதல்லது வெள்ளைச் சுரிதகத்தால் இறப்பெறாது எனக் கொள்க.

வருமாறு :—

iv. வஞ்சிப்பாவுக்கு ஈறு

†"பூந்தாமரை" என்னுங் குறளடி வஞ்சிப்பா "நாளும்" என்னுந் தனிச்சொற் பெற்று ஆசிரியச் சுரிதகத்தாலிற்ற வாறும்,

---

* யாப்பருங்கலம் - கஉ.

† இச் செய்யுளை உஅ ஆவது பக்கத்திற் காண்க.

வஞ்சிப்பா

"கொடியவாலன குருநிறத்தன குறுந்தாளன
வடிவாளெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தின் இணையரிமா னணையேறித்
துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி
எயினடுவண் இனிதிருந் தெல்லோர்க்கும்
பயில்படுவினை பத்தியலாற் செப்பினோன்
புணையெனத்
திருவுறு திருந்தடி திசைதொழ
வெருவுறு நாற்கதி விடுநனி யெளிதே"

இச் சிந்தடி வஞ்சிப்பா "புணையென" என்னுந் தனிச் சொற்பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் இற்றவாறுங் கண்டு கொள்க.

என்னை,

*"தாங்கல் இசையன வஞ்சி மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோ டகவலின் இறுமே"

என்பது யாப்பருங்கலம்.

"அமுதே" என்பதும், "வஞ்சிக்கொடியே' என்பதும் மகடூஉ முன்னிலை :

உதாரண இலக்கிய முதல்நினைப்புக் காரிகை

மடப்பிடி பேடை யிரும்பிடி வஞ்சியின் தாழிசையாம்
வடிப்புரை கண்ணினல் லாய்கை சிறந்தன வான்றுறையாங்
தடப்பெருஞ் சோலை விருத்தம் தாகுந் தயங்குவஞ்சிக்
கொடித்தொடி பூந்தா மரைக்கொடி வால னுதாரணமே. (சஎ)

இவ் வுரைச்சூத்திரக் காரிகையின வழியே வஞ்சிப்பா வினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதல்நினைத்துக் கொள்க.

வஞ்சிப்பாவின் இனமும் வஞ்சிப்பாவிற் கீருமாறும் முற்றும்.

---

* யாப்பருங்கலம் - ௯0.

## 6. மருட்பா

பண்பார் புறநிலை பாங்குடைக் கைக்கிளை வாயுறைவாழ்த்
தொண்பாச் செவியறி வென்றிப் பொருள்மிசை யூனமில்லா
வெண்பா முதல்வந் தகவல்பின் னாக விளையுமென்றால்
வண்பால் மொழிமட வாய்மருட் பாவெனும் வையகமே.

(சஅ)

இ - கை. மருட்பா ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: புறநிலை வாழ்த்தும், கைக்கிளையும், வாயுறை வாழ்த்தும், செவியறிவுறூஉவும் என்னும் நான்கு பொருள்மேலும் வெண்பா முதலாக, ஆசிரியம் ஈறாக வருமெனின், அதனை மருட்பா என்று வழங்குவர் புலவர் எ - று.

'வணபால் மொழி மடவாய்' என்பது மகடூஉ முன்னிலை.

என்னை,

> ''வெள்ளை முதலா ஆசிரிய மிறுதி
> கொள்ளத் தொடுப்பது மருட்பா வாகும்''

என்றார் காக்கைபாடினியார்.

வருமாறு :

### i. புறநிலை வாழ்த்து மருட்பா

> ''தென்ற லிடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
> முன்றில் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்
> குன்றமர்ந்த கொல்லேற்றான் நிற்காப்ப என்றுந்
> திரா நண்பின் தேவர்
> சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே.''

இது வழிபடு தெய்வ நிற்புறங்காப்பப் பழிதீர் செல்வமொடு ஒருகாலைக் கொருகாற் சிறந்து பொலிக என்றமையாற் புறநிலை வாழ்த்து மருட்பா.

என்னை,

*"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ"

என்றார் தொல்காப்பியனார்.

ii. கைக்கிளை மருட்பா

†"திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடும்
இருநிலஞ் சேவடியுந் தோயும்—அரிபரந்த
போகிதழ் உண்கணும் இமைக்கும்
ஆகு மற்றிவள் அகலிடத் தணங்கே."

இது துணிதலை நுதலிய ஒருதலைக் காமமாதலிற் கைக்கிளை மருட்பா.

என்னை,

"காட்சி முதலாக் கலவியி னொருதலை
வேட்கையிற் புலம்புதல் கைக்கிளை யதுதான்
கேட்போ ரில்லாக் கிளவிகள் பெறுமே"

என்றாராகலின்.

iii. வாயுறை வாழ்த்து மருட்பா

"பலமுறையும் ஓம்பப் படுவன கேண்மின்
சொலல் முறைக்கண் தோன்றிச் சுடர்மணித்தேர் ஊர்ந்து
நிலமுறையின் ஆண்ட நிகரில்லார் மாட்டுஞ்
சிலமுறை யல்லது செல்வங்கள் நில்லா
இலங்கும் எறிபடையும் ஆற்றலும் அன்பும்
கலந்ததம் கல்வியும் தோற்றமும் ஏனைப்
பொலன்செய் புனைகலனே டிவ்வாற னாலும்
விலங்கிவரும் கூற்றை விலக்கலும் ஆகா
நனைத்தாதல் நீயிநுங் காண்டிர்—நினைத்தக்க
கூறிய வெம்மொழி பிழையாது
தேறிநீ ரொழுகின் சென்றுபயன் தருமே."

இது மெய்ப்பொருள் சொன்னமையால், வாயுறை வாழ்த்து மருட்பா.

என்னை,

---

* தொல். பொருள். செய்யுளியல் - ௧0௯.
† புறப்பொருள் வெண்பாமாலை, கைக்கிளை - ௬.

*"வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே."

### iv. செவியறிவுறூஉ மருட்பா

"பல்யானை மன்னர் முருங்க அமருழந்து
கொல்யானைத் தேரொடுங் கோட்டத்து - நல்ல
தல்லாலங் கானம் பொலியத்—தொல்லைப்
படுகளம் பாடுபுக் காற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக—அடுதிறல்
ஆளி நிமிர்தோட் பெருவழுதி யென்ஞான்றும்
ஈர முடையையாய் என்வாய்ச்சொற் கேட்டி
உரிய உழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருகா லுழவர்க்கு வேளாண்மை செய்யல்
மழவ ரிழைக்கும் வரைக்கான் நிதியிட்டங்
காட்டும் அமைச்சரை யாற்றத் தெளியல்
அடைத்த வரும்பொரு ளாறன்றி வெளவல்
[1]இனத்தைப் [2]பெரும்பொரு ளாசையினுற் சென்று
மன்ற மறுக அகழாதி—என்றும்
மறப்புற மாக மதுரையா ரோம்பும்
அறப்புறம் ஆசைப்ப டேற்க—அறத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி—நவையாக
நட்டார் குழிசி சிதையாதி—ஒட்டார்
செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற்—கவிபடைத்தாய்
கற்றூர்க் கினனுகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்றூர்ச் செறுத்துநிற் சேர்ந்தாரை யாக்குதி
அற்றம் அறிந்த அறிவினுய்—மற்றும்
இவையிவை வியா தொழுகின் நிலையாப்
பொருகட லாடை நிலமகள்
ஒருகுடை நீழல் துஞ்சுவன் மன்னே."

இது வியப்பின்றி உயர்ந்தோர்கண் அவிந்தொழுகுதல் கடனென அரசர்க் குரைத்தமையாற் செவியறிவுறூஉ மருட்பா.

—என்னை,

---

* தொல். பொருள். செய்யுளியல் - ககஉ.

(பாடம்) 1. சகை. 2. பெருங்குழிசி.

*"செவியுறை தானே
பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தற்றே."

'என்றிப்பொருள்மிசை' என்று மிகுத்துச் சொல்லிய வதனால் இந் நான்கு பொருண்மேலுமன்றி மருட்பா வரப் பெறுமெனக் கொள்க.

என்னை,

†"புறநிலை வாயுறை செவியறி வுறாஉவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதின் தெரியின்
வெண்பா வியலினும் ஆசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின வென்ப"

என்றார் தொல்காப்பியனார்.

'பண்பார் புறநிலை' என்றும், 'ஒண்பாச்செவியறிவு' என்றுஞ் சிறப்பித்தவதனால், புறநிலைவாழ்த்தும், வாயுறை வாழ்த்தும், செவியறிவுறாஉவும் இவ்வாறன்றி வெண்பாவே யாயும், ஆசிரியமேயாயும வரப்பெறும், கலியும் வஞ்சியுமாய் வரப்பெறா எனக் கொள்க.

என்னை,

"கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ
வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி வுறாஉவும்என் றவையு மன்ன"

என்றாராகலின்.

'பாங்குடைக் கைக்கிளை' என்று சிறப்பித்த வதனால் கைக்கிளை எல்லாப் பாவாலும் வரப்பெறும், மருட்பாவே யாய் வருகவென்னும் யாப்புறவில்லை என்றும், கைக்கிளை வெண்பா முதலாக ஆசிரியம் ஈருக வரும்வழி ஆசிரியவடி இரண்டேயாய் அவற்றுள், ஈற்றயலடி முச்சீராய் வரும் என்றும், வெண்பாவடியும் ஆசிரியவடியும் ஒத்து வருவன சமநிலை மருட்பா என்றும் ஒவ்வாதன வியனிலை மருட்பா

(பாடம்) 1. பாங்கினவாகும்.
* தொல். பொருள். செய்யுளியல் - கக௪.
† தொல். பொருள். செய்யுளியல் - கஎக.

என்றும் வழங்கப்படும் என்றுங் கொள்க. 'ஊனமில்லா வெண்பா' என்று சிறப்பித்தது வேற்று வண்ணம் விரவாது வெள்ளை வண்ணம் எல்லா வண்ணத்துள்ளுஞ் சிறப்புடைத்தாய் மங்கலமரபிற்றும்; அவ்வாறே வேற்றுத் தளையும் அடியும், சீரும் விரவாமையால் எல்லாப் பாவி னுள்ளும் வெண்பா சிறப்புடைத்தென்று முன்வைக்கப் பட்டதென்பது அறிவித்தற்கு எனக் கொள்க.

### வெண்பா

நாற்சீ ரடியால் நடைபெறுதலும், வேற்றுப்பாவினுல் இருமையும், எல்லாப் பொருள்மேலும் சொல்லப்படுதலும் என றிவற்றுல் ஆசிரியத்தோடு ஒத்தலும், உயர்ந்த ஓசைத் தாகலும், உத்தமசாதியாகலும், வேற்றுத்தளையும் வேற் றடியும் வேற்றுப்பாவும் விரவாமையும் என்னும் அதிக குணமுடைமையும் நோக்கி வெண்பா ஆசிரியத்தின்முன் வைக்கப்பட்டது.

### ஆசிரியப்பா

அளவடியால் நடைபெறுதலும், தனது நடையால் தானினி திறுதலும், எல்லாப்பொருள்களையுந் தன்கண்ணே யடக்கலும், ஒருவாத பொருளிற்றுதலும் என்னும் ஒரு புடையால் வெண்பாவோ டொத்தலும், அகவிய வோசைத் தாகலும், அரசர் குலத்தினதாகலும், வேற்றுத்தளையும் அடியும் விரவி வருதலும் என்னும் வேறுபாடுடைமையும் நோக்கி வெண்பாவின்பின் ஆசிரியப்பா வைக்கப்பட்டது.

### கலிப்பா

நேரடியால் நிலைபெறுதலும், அயலடியும் அயற்றளையும் விரவிவருதலும், ஆசிரியத்தோடு ஒத்தலும், அயற்பாவினு லிறுதலும், புறநிலை வாழ்த்து முதலிய பொருள்கண்மேற் புகாமையும் வணிக குலத்தினதாகலும், துள்ளலோசைத் தாகலும் நோக்கி ஆசிரியத்தின்பின கலிப்பா வைக்கப்பட்டது.

### வஞ்சிப்பா

புறநிலை வாழ்த்து முதலிய பொருள்கள்மேற் புகாமை யும், அயற்றளையும் அயலடியும் விரவி வருதலும், அயற்

பாவினு லிறுதலும், என்றிவற்ருற் கலிப்பாவினேடொத்த லும் நாற்சீரடியால் நடவாமையும் தாழ்ந்த குலத்தின தாகலும் தூங்கலோசைத்தாகலும், அகப்பொருள்கள்மேல் அருகியன்றி வாராமையும் நோக்கிக் கலிப்பாவினபின் வஞ்சிப்பா வைக்கப்பட்டது. இது நிறுத்த முறைமை.

"வெண்பா முதலா நால்வகைப் பாவும்
எஞ்சா நால்வகை வருணம் போலப்
பாவினத் தியற்கையும் அதனே ரற்றே"

"வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர்ந்து நிகழ்ந்த நெடுங்குலம்போல்
ஆதிசால் பாவு மரசர் வியன் பாவும்
ஓதியவா றேத மருட்பாவாய் ஓங்கிற்றே"

"பண்ணுந் திறமும்போற் பாவு மினமுமாய்
வண்ண விகற்ப வகைமையார்—பண்ணின்
திறம்விளரிக் கில்லதுபோற் செப்பல் அகவல்
இசைமருட்கு மில்லை இனம்."

இவற்றை விரித்துரைத்துக் கொள்க.

### உதாரண இலக்கிய முதல் நினைப்புக் காரிகை

தேன்ற லிடையுந் திருநுதல் வேர்வரும் பன்முறையேன்
றூன்றிய பாவும்பல் யானையு மேன்பவோண போதமைந்த
பொன்றிக ழோதி புறநிலை கைக்கிளை வாயுறைவாழ்த்
தேன்றிவற் ற்குஞ் செவியறி விறகு மிலக்கியமே. (சக)

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின் வழியே மருட்பா நான்கிற்குங் காட்டிய இலக்கியங்களை முதல் நினைத்துக் கொள்க.

### செய்யுளியற் செய்யுட்களின் முதல்நினைப்புக் காரிகை

வெண்பா வளம்பட வீரடி யோன்றுடன் கேரிசையும்
கண்பானல் போன்மயில் அந்தமில் மூன்மங் கடைதருக்கி
கண்பார் தரவோன் றசைதா வபடி யோடுகுறள்
பண்பார் புறநிலை செய்யு ளியலென்ப பாவலரே. (௫0)

செய்யுளியல் முற்றும்.

———

# ௬. ஒழிபியல்

## எழுத்துக்கள் அலகுபெறுதன, பெறுவன

சீருந் தளையுஞ் சிதையின் சிறிய இஉ அளபோ
டாரும் அறிவ ரலகு பெறுமை ஐ காரநைவேல்
ஒருங் குறிலிய லொற்றள பாய்விடின் ஓரலகாம்
வாரும் வடமுந் திகழும் முகிழ்முலை வாணுதலே. (௩௪)

என்பது காரிகை - இவ்வியல் என்ன பெயர்த்தோ வெனின், உறுப்பியலுள்ளும், செய்யுளியலுள்ளுஞ் சொல்லா தொழிந்தவைகளை உணர்த்தினமையால் ஒழிபியல் என்னும் பெயர்த்து.

இவ்வியலுள் இக்காரிகை என்னுதலிற்றோ வெனின் ஒருசார் எழுத்துகட் கெய்தியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

'சீருந் தளையுஞ் சிதையிற் சிறிய இஉ அளபோ, டாரு மறிவ ரலகு பெறுமை' எனபது:

'சீருந் தளையுங் கெடவந்த விடத்துக் குற்றியலிகரமும் குற்றியலுகரமும், உயிரளபெடையும் அலகு காரியம் பெறு, எனறவாறு.

'ஒற்றளபாய் விடி னோரலகாம்' என்றுரைத்தமையால் ஈண்டுயிரளபெடையே கொள்ளப்பட்டது.

'ஆருமறிவர்' என்று மிகுத்துச் சொல்லிய வதனால், குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஒற்றியல்பினவாய் நிற்கும் உயிரளபெடைகள் நெட்டெழுத்தியல்பினவாய் நிற்கும் அலகிடும் இடத்தெனக் கொள்க.

எனவே எதிரது மறுத்தலென்னும் இலக்கணத்தாற் சீருந் தளையுந் திருந்த நிற்புழிச் 'சிறிய இஉஅளபோடாரு மறிவ ரலகுபெறுதல்' என்பதாயிற்று.

இன்னும் 'ஆருமறிவர்' என்று மிகுத்துச் சொல்லிய வதனல், அவை அலகுகாரியம் பெறும்போது குற்றியலிக

மும், குற்றியலுகரமும் குற்றெழுத்தின் பயத்தவாம். உயி ரளபெடை அலகுகாரியம் பெறுமாறு தத்தங் காரிகையுட் போக்கிச் சொல்லுதும்.

வருமாறு:—

நேரிசை வெண்பா

"சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி பின்னும் பெரிதென்—றுறுநன்றி
தானவாய்ச் செய்வதுந் தானமன் றென்பவே
வானவா முள்ளத் தவா."

இதனுள், 'இன்றிவர்க்கியாம்' என்புழி, குற்றியலிகரம் வந்து வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீராயிற்று: வெண்பாவி னுள் வஞ்சியுரிச்சீர் விரவுமென்னும் ஒத்திலாமையால் வெண்பா வழிய நிற்குமாதலால், ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ் விலக்கணத்தால் அலகுபெறுதென்று களையச் சீர் சிதையாதாம்.

குறள் வெண்பா

*"குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்."

குறள் வெண்பா

†"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்."

இவற்றுள், 'குழலினி தியாழினிது' என்புழி ஆசிரியத் தளையும், 'அருளல்லதியாதெனில்,' என்புழிக் கலித்தளையுந் தட்டு, 'வெள்ளைத்தன்மை குன்றிப்போஞ் சீர்களி புகிற் புல்லாதயற்றளை' என்னும் இலக்கணத்தோடும், 'வெள்ளை யுட் பிறதளை வாரா; அல்லன எல்லாத் தளையும் மயங்கியும்

* திருக்குறள், மக்கட்பேறு -ங.
"குழலினிது யாழினி தென்பதம் மக்கள்" எனப் பிரிப்பின் குற்றிய லிகரம் அலகுபெற நின்றே இவ் வடி வெண்டளை பொருந்துகின்றதாயினும் அவ்வாறு பிரிப்பது மரபன்றென்க.
† திருக்குறள், புலான்மறுத்தல் - ச.

வழங்கும்' என்னும் இலக்கணத்தோடும் மாறுகொள்ளு மாதலால், ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகுபெறாதென்று களையச் சீருந் தளையுஞ் சிதையாவாம்.

இனிக் குற்றியலுகரத்திற்குச் சொல்லுமாறு :

வஞ்சிப்பா

''கொன்று கோடு நீடு குருதி பாயவும்
சென்று கோடு நீடு செழுமலை பொருவன
வென்று கோடு நீடு விறல்வேழம்
என்று மூடுநீடு பிடியுள போலும்
அதனால்,

இது தனிச்சொல்.

இண்டிடை யிரவிவண் நசைஇ வரின்
வண்டுண் கோதை உயிர்வா ழலளே.''

இவ்விருசீரடி வஞ்சிப்பாவினுட் குற்றுகரம் பல வந்து ஆறசைச்சீராயின. இவ்வாறு வருகவென்னும் ஓத்தில்லாமையிற் குற்றுகரத்தை இவ்விலக்கணத்தால் அலகு பெறாதென்று களையச் சீருந் தளையுஞ் சிதையா வாம்.

இனி உயிரளபெடைக்குச் சொல்லுமாறு :

நேரிசை வெண்பா

''பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள்
சொல்லுக்குத் தோற்றின்னந் தோற்றிலவால்—நெல்லுக்கு
நூறோஒ நூறென்பாள் நுடங்கிடைக்கும் மென்முலைக்கும்
மாறோமா லன்றளந்த மண்.''

இதனுள் 'நூறோஒ நூ' றென்புழிப் பண்டமாற்றின்கண் அளபெடை அநுகரணம் வந்து வெண்பாவினுள் நாலசைச் சீராயிற்று. அவ்வாறு வருகவென்னும் ஓத்தில்லாமையால் இவ்வா றலகிட்டு உதாரண வாய்பாட்டால் ஓசையூட்டும்பொழுது ஓசையுண்ணாது செப்பலோசை பிழைத்து நிற்குமாதலால், ஈண்டு உயிரளபெடையை இவ்விலக்கணத்தால் அலகுபெறாதென்று நெட்டெழுத்தே போலக் கொண்டு அலகிடச் சீருந் தளையுஞ் சிதையாவாம்.

நேரிசை வெண்பா

"இடை நுடங்க ஏர்ங்கோதை பின்தாழ வாட்கண்
புடைபெயரப் போழ்வாய் திறந்து—கடைகடையில்
உப்போஒ வெனவுரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்
கொப்போநீர் வேலி யுலகு."

இதனுள், 'உப்போஒ' என்புழிப் பண்டமாற்றின்கண் அளபெடை யநுகரணம் வந்து கலித்தளை தட்டு வெண்பா அழியநிற்குமாதலின், ஈண்டு உயிரளபெடையை இவ்விலக்கணத்தால் அலகு பெருதென்று நெட்டெழுத்தே போலக் கொண்டு அலகிடத் தளை சிதையாதாம்.

இனிக் குற்றியலிகரக் குற்றியலுகரங்கள் குற்றெழுத்தே போல நின்று அலகுபெறுமாறு :

நேரிசை வெண்பா

"வந்துநீ சேரின் உயிர்வாழும்[1] வாராக்கால்
முந்தியாய் பெய்த வளைகழலும் – முந்தியாங்
கோளானே கண்டனங் கோல்குறியாய் இன்னுமோர்
நாளானே நாம்புணரு மாறு."

இதனுள் 'வந்துநீ' என்புழிக் குற்றியலுகரமும் 'முந்தியாய்' என்புழிக் குற்றியலிகரமும் வந்து சீருந் தளையுந் திரிந்து நிற்புழிக் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகு பெற்றவாறு கண்டுகொள்க.

என்னை,

*"தளைசீர் வண்ணந் தாங்கெட வரினே
குறுகிய இகரமுங் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகிய லிலவே."

என்பது யாப்பருங்கலம்.

'ஐகார நைவே லோருங்குறிலியல்' என்பது ஒன்றரை மாத்திரை என்றோதப்பட்ட ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்தே போலக் கொண்டு அலகிடப்பெறும்: எ - று.

'ஒரும்' என்பது: இடைச்சொல்.

(பாடம்) 1. பேரி னுயிர்வாழும்.
* யாப்பருங்கலம்-௪.

என்னை,

"குறுமை யெழுத்தின் இயல்பே ஐகார
நெடுமையின் நீங்கி யக்கால்"

என்றாராகலின்.

"இஉ - இரண்டன் குறுக்கந் தனிதப
நிற்புழி யொற்று நிலையின வாகும்."
"உயிரள பேழும் உரைத்த முறையான்
வருமெனின் அவ்வியல் வைக்கப் படுமே'

என்றார் காக்கைபாடினியார்.

"ஈறும்[1] இடையும் இணைந்தும் இணையிசை
யாகு மென்ப அறிந்திசி னோரே"

குறள் வெண்பா

"அன்னையையான் நோவ தவமா லணியிழாய்
புன்னையையான் நோவன் புலந்து"

நேரிசை வெண்பா

"நடைக்குதிரை யேறி நறுந்தார் வழுதி
அடைப்பையாய் கோல்தா வெனலும் அடைப்பையான்
சுள்ளற் சிறுகோல் கொடுத்தான்[2] தலைப்பெறினும்
[3]கொள்ளாதி யாங்கண் டிலம்"

குறள் வெண்பா

"கெண்டையை வென்ற கிளரொளி உண்கணாள்
பண்டைய ளல்லள் படி"

என்னுமிவற்றுள், ஐகாரக் குறுக்கம் குற்றெழுத்தே போலக் குறிலோடும், நெடிலோடுங் கூடிநின்று நிரையசையாயின வாறும், தனியே நின்று நேரசையாயினவாறும் கண்டுகொள்க.

'ஒற்றளபாய்விடி னேரலகாம்' என்பது; ஒற்றுக்கள் அளபெழுந்த விடத்து நேரசையாம்; எ - று.

---

(பாடம்) 1. ஈது. 2. தலையிறினும்.
3. 'எள்ளாதி யாங்கண் டிலம்'

என்னை,

"ஆய்தமும் ஒற்றும் அளபெழ நிற்புழி
வேறல கெய்தும் விதியின வாகும்"

என்றார் காக்கைபாடினியார்.

அளபெழாத விடத்து ஒற்றுகள் அலகுபெறா வென்பதாம்.

என்னை,

"தனிநிலை ஒற்றிவை தாமல கியலா
அளபெடை யல்லாக் காலை யான"

என்றாராகலின்.

"ஈரொற் றுயிறு*மூவொற் றுயினும்
ஓரொற் றியல என்மனார் புலவர்"

என்றாராகலின்.

---

* மூன்றொற்றுட னிலையாய் வருவதற்கு உதாரணம்:—
துவர்ப்பு, பீர்க்கு.

இவற்றுட் குற்றுகரத்தை மெய்யெழுத்தாகக் கொண்டு மூன்றொற்றுட னிலையாதலைக் காண்க.

குற்றுகரத்தை மெய்யெழுத்தாகக் கொள்ளவேண்டுவதென்னெனின் ஒரு மாத்திரையிற் குறைந்து மெய்யெழுத்திற்போல அரை மாத்திரை கொண்டு நிற்றலின் என்பது.

இதனைத் தொல்காப்பியம், எழுத்ததிகாரம், மொழி மரபியலில் 'ஓரெழுத்தொரு மொழி' என்னும் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையானு முணர்க.

குற்றிய லிகரத்திற்கும் இவ்விதி யாமாறு கண்டுகொள்க.

'ஆருமறிவர்' என்று மிகுத்துச் சொல்லியவதனான் 'அவை அலகு காரியம் பெறும்போது குற்றியலிகரமும், குற்றியலுகரமும் குற்றெழுத்தின் பயத்தவாம்' என்று இதற்கு முன்னே கூறப்பட்ட இச்சூத்திர உரையும் ஈண்டுக் கவனிக்கத்தக்கது.

இதனால் அலகு காரியம் பெறாதபோது குற்றியலிகரமும், குற்றியலுகரமும் மெய்யெழுத்தின் பயத்தவாம் என்பது பெறப் படுமா றறிக.

நேரிசை வெண்பா

"குற்றிகரக் குற்றுகர மென்றிரண்டும் ஆய்தமும்
ஒற்று மெனவொரு நான்ககற்றிக்—கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினார் கொள்ளச்
செயிர்தீர்ந்த செய்யுள் அடிக்கு"

இவ் வெண்பாச்சூத்திரமும் ஈண்டுக் கவனிக்கத் தக்கது இந்த இலக்கணவிளக்கத்துட் காட்டப்பட்ட மேற்கோட் சூத்திரம்

கார்க்கடல், கார்ச்சேதம், கதிர்ச்செந்நெல், கடாய்க் கன்றுஎன, ஈரொற்றுடனிலையாய் நிற்பினுங் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகுபெறு என்பதூஉம், ஒற்றளபெழினும் மற்றோரெழுத்தினொடுங்கூடி நிரையசை ஆகாதென்பதூஉம் பெறப்பட்டன.

வருமாறு :

"கண்ண் டண்ண்ணெனக் கண்டுங் கேட்டும்"

ஒற்றளபெடை தனிக் குறிலாக அலகிட்டபட்டது

இன்னிசை வெண்பா

"கண்ண்கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வாய் இலவம்பூ
மின்ன் னுழைமருங்கின் மேதகு சாயலாள்
என்ன் [1]பிறமகளா மாறு."

குறள் வெண்பா

"எஃஃ கிலங்கிய கையராய் இன்னுயிர்
வெஃஃ குவார்க்கில்லை வீடு."

இவற்றுள், ஒற்றும், ஆய்தமும் அளபெழுந்து ஓரலகு பெற்றவாறு கண்டுகொள்க.

'வாரும் வடமும் திகழு முகிழ்முலை வாணுதலே' என்பது மகடூஉ முன்னிலை.

**விட்டிசைத் தல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசையென்**
**றோட்டப் படாததற் குண்ணு னுதாரணம் ஓசைகுன்று**
**நேட்டள பாய்விடின் நேர்நேர் நிரையொடு நேரசையாம்**
**இட்டத்தி னற்குறில் சேரின் இலக்கிய மோர்சிதைவே. (ருஉ)**

இ - கை. ஒருசார் அசைகட் கெய்தியதோர் இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

---

(பாடம்) 1. குறமகளாமாறு.

'விட்டிசைத் தல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசையென் றுரைட்டப்படாது' என்பது.

மேற் பொதுவகையால் தனிக்குறில் நேரசை என்றாராயினும், விட்டிசைத்து நின்றவழியல்லது மொழிமுதற்கணின்ற தனிக்குற்றெழுத்து நேரசையாமென் றுடம்படப் பெறாது ; எ - று.

எனவே விட்டிசையாதவழி மொழிமுதற்கண் தனிக் குறில் குறிலொடும், நெடிலொடுங் கூடி நிரையசையாம் என்பதாயிற்று.

'அதற் குண்ணுன் உதாரணம்' என்பது ;

நேரிசை வெண்பா

*"உண்ணுன் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும்."

இதனுள் அ ஆ எனபுழி அருளின்கட் குறிப்பாய் மொழி முதற்கணின்ற குற்றெழுத்து விட்டிசைத்து நேரசையாயினவாறும், அல்லாதவழி குறிலோடும், நெடிலோடுங்கூடி நிரையசையாயினவாறுங் கண்டுகொள்க.

நேரிசை வெண்பா

"வெறிகமழ் தண்புறவின் வீங்கி யுகளும்
மறிமுலை யுண்ணாமை வேண்டிப்—பறிமுன்கை
அ உ அறியா வறிவில் இடைமகனே
நொ அலைபல் நின்னாட்டை நீ."

குறள் வெண்பா

"அஅவனும் இஇவனும் உஉவனுங் கூடியக்கால்
எஎவனை வெல்லா ரிகல்."

இவற்றின்கண் தனிக்குறில் முதற்கண் விட்டிசைத்து நேரசையாயினவாறு கண்டுகொள்க.

---

(பாடம்) 1. தண்சிலம்பின்.
* நாலடியார், செல்வ நிலையாமை - க.

இவற்றுள் 'அ உ அறியா' என்பது: தற்சுட்டுக் குறிப்புச்சொல். 'நொ' எனபது: செயவென் எச்சத் திறுதி தொக்கு முதனிலை குறுகிய குறிப்புச்சொல். 'அ இ உ எ' என்பன சுட்டும் வினவுமாகிய குறிப்புச்சொல்.

'ஒட்டப்படாது' என்று மிகுத்துச் சொல்லியவதனான் மொழிக்கு மூன்றிடத்தும் விட்டிசைத்து வந்த குற்றெழுத்து நேரசையாம் என்பதூஉம், விட்டிசைப்பது தான் குறிப்பு, ஏவல், தற்சுட்டு, வினா, சுட்டு என்னும் ஐந்தன் கண்ணும் என்பதூஉம், குற்றெழுத்து விட்டிசைத்து நின்ற விடத்து மற்றோ ரெழுத்தினோடுங் கூடி நிரையசை யாகாதென்பதூஉம் பெறப்பட்டன.

என்னை,

"அ இ உ எ குறிய மற்றைய
ஏழுநெட் டெழுத்தா நேரப் படுமே."

இதனுண் மொழிக்கு மூனறிடத்தும், விட்டிசைத்து வந்த குற்றெழுத்து நேரசையாயினவாறு கண்டுகொள்க.

இவை தற்சுட்டு. ஏவல் வந்தவழிக் காண்க.
என்னை,

"ஏவல் குறிப்பே தற்சுட் டல்வழி
யாவையுந் தனிக்குறின் முதலசை யாகா
சுட்டினும் வினாவினும் உயிர்வரு காலை
ஒட்டி வருஉம் ஒருசாரு முளவே"

என்றார் மயேச்சுரர்.

'ஓசைகுன்றா நெட்டளபாய் விடின் நேர்நேர்' என்பது நெட்டெழுத்து அளபெழுந்து வருமெனின், அஃது இரண்டு நேரசையாக வைக்கப்படும்; எ - று.

'ஓசைகுன்றா' என்று மிகுத்துச் சொல்லியவதனான் மூன்று மாத்திரையின மிக உச்சரிப்பினும், நேர் நேராக வைக்கப்படும் எனக் கொள்க.

'நிரையொடு நேரசையாம் இட்டத்தினாற் குறில் சேரின்' என்பது: குற்றெழுத்தினோடு புணர்ந்த நெட்டெழுத்து அளபெழுந்தால் அவ் விரண்டனையுங் கூட்டி நிரை அசையும், நேர் அசையுமாக வைக்கப்படும்; எ - று.

'இலக்கியம் ஏர்சிதைவே' என்பது:

குறள் வெண்பா

''ஏஎர் சிதைய வழாஅல் எலாஅஇன்
சேயரி சிந்தின கண்.''

இப்பாட்டு நேர்நேரா தற்கும் நிரைநேரா தற்கும் இலக்கியமாம் என்க. 'ஏஎர்' என நேர் நேராயிற்று.

'அழாஅல், எலாஅ' என நிரைநேரா யின:

'இட்டத்தினால்' என்று மிகுத்துச் சொல்லியவதனால், பின்னின்ற குறிலொடும், நெடிலொடுங் கூடி அளபெடை நிரை அசையாகாது எனக் கொள்க.

என்னை,

''தனிநிலை அளபெடை நேர்நே ரியற்றே
இறுதிநிலை யளபெடை நிரைநே ரியற்றே''

என்றார் நத்தத்தனார்.

மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவில் விளங்கனிவந்
தாஞ்சீ ரடையா அகவ லகத்துமல் லாதவெல்லாந்
தாஞ்சீர் மயங்குந் தளையுமஃ தேவெள்ளைத் தன்மைகுன்றிப்
போஞ்சீர் கனிபுகின் புல்லா தயற்றளை பூங்கொடியே. (ருக)

இ-கை. சீருந் தளையுஞ் செய்யுளகத்து நிற்பதொரு முறைமை யுணர்த்துதல் நுதலிற்று.

'மாஞ்சீர் கலியுட் புகா' என்பது: தேமா, புளிமா, என்னும் நேரீற் றியற்சீ ரிரண்டும் கலிப்பாவினுட் புகப்பெறா; எ - று.

'கலிப்பாவில் விளங்கனிவந் தாஞ்சீ ரடையா' என்பது: 'கருவிளங்கனி, கூவிளங்கனி' என்னும் நிரைநடு

வாகிய வஞ்சியுரிச்சீ ரிரண்டுங் கலிப்பாவினுட் புகப்பெறா; எ - று.

'அகவலகத்தும்' என்பது: ஆசிரியப்பாவினுள்ளுங் 'கருவிளங்கனி, கூவிளங்கனி' என்னும் இரண்டு சீரும் புகப்பெறா; எ - று.

'அல்லாத வெல்லாந் தாஞ்சீர் மயங்கும்' என்பது; இவையொழிந்த சீர்கள் எல்லாப் பாவினுள்ளும், பாவினத்துள்ளும் வந்து மயங்கப்பெறும்; எ - று.

'தளையுமஃதே' என்பது எல்லாத் தளையும் எல்லாப் பாவினுள்ளும், பாவினத்துள்ளும் வந்து மயங்கப்பெறும்; எ - று.

'வெள்ளைத் தன்மை குன்றிப் போஞ்சீர் கனிபுகின்' என்பது: 'எல்லாச்சீரும் எல்லாப் பாவினுள்ளும், பாவினத்துள்ளும் வந்து மயங்கப்பெறும்' என்றாராயினும், வஞ்சியுரிச்சீர் நான்கும் வெண்பாவிற் புகப்பெறா: புகிற் செப்பலோசை யழிந்து வேறுபட்டு ஓசை யுண்ணாது கெடும்; எ - று.

'புல்லா தயற்றளை' என்பது: 'எல்லாத் தளையும் எல்லாப் பாவினுள்ளும், பாவினத்துள்ளும் வந்து மயங்கப் பெறும், என்றாராயினும், வெண்பாவில் இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் அல்லது வேற்றுத்தளை விரவாது; எ - று.

'பூங்கொடியே' என்பது: மகடூஉ முன்னிலை.

வருமாறு:—

*"குடநிலைத் தண்புறவில்—சென்றவாறே"

என்னும் தரவு கொச்சகக் கலிப்பாவில் நேரீற்றியற் சீரும் நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வாராது, நிரையீற்றாசிரிய உரிச்சீரும், வெண்பா உரிச்சீரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிச்

* இச்செய்யுளை கசஙு ஆம் பக்கத்திலுள்ள குறிப்பிற் காண்க.

சீரும் வந்து, வெண்டளையும், ஆசிரியத்தளையும், கலித்தளையும், வஞ்சித்தளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

நேரிசை யாசிரியப்பா

'நெடுவரைச் சாரற் குறுங்கோட்டுப் பலவின்
விண்டுவார் தீஞ்சுளை வீங்குகவுட் கடுவன்
உண்டு சிலம்பேறி யோங்கிய இருங்கழைப்
படிகம் பயிற்று மென்ப
மடியாக் கொல்வில் என்னையர் மலையே."

இவ்வாசிரியத்துள் தனசீரும், வெண்சீரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வந்து வெண்டளையும், தன்தளையும், கலித்தளையும், வஞ்சித்தளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

வஞ்சிப்பா

*"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும்"

வஞ்சிப்பா

"புன்காற் புணர்மருதின்
போதரும்பிய புனல்தாமரை
தேன்தாழ் திங்கரும்பின்
பூந்தாட் புனற்றுமரை
வார்காற் செங்கழுநீர்."

இக்குறளடி வஞ்சிப்பாக்களுள், வெண்சீரும், தன்சீரும், நேரீற் றியற்சீரும் வந்து, வெண்டளையும், தனறளையும், கலித்தளையும், ஆசிரியத்தளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

'முழங்குதிரைக் கொற்கை வேந்தன்' என்னும் வெண்டுறையுள் வஞ்சியுரிச்சீரும், இயற்சீரும், வெண்சீரும், வஞ்சித்தளையும், ஆசிரியத்தளையும், வெண்டளையும், கலித்தளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

* புறநானூறு - ௨.

## கலிவிருத்தம்

*"வளர்கொடியன மணம்விரிவன மல்லிகையொடு மௌவல்
தளிர்கொடியன நறுவிரையன நகுமலரன [1]வகுளம்
குளிர்கொடியன குழைமாதவி குவிமுகையன 'கோங்கம்
ஒளிர்கொடியன உயர்தளிரினொ டொழுகிணரன வோடை."

இக் கலிவிருத்தத்துள், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும், நேரீற் றியற்சீரும், வஞ்சித்தளையும், இயற்சீர் வெண்டளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

நேரீற் றியற்சீர் ஒத்தாழிசைக் கலியுள் வாராதவாறும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கலிப்பாவுள்ளும், ஆசிரியத்துள்ளும் வாராதவாறும், வெண்பாவினுள்ளும் வஞ்சியுரிச்சீர் வாராதவாறும், வேற்றுத்தளை விரவாமையும் மேற்காட்டிய செய்யுளகத்தும், பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க.

நேரீற் றியற்சீர் வெண்கலியுள்ளும், கொச்சகத்துள்ளும் வருதலும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கொச்சகத்துள் அருகிவருதலுஞ் செய்யுளோத்துள்ளே சொல்லப்பட்டன.

## நேரிசை வெண்பா

"குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு வெண்மணன்மேல் [3]நின்று—புலாலுணங்கல்
கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ நீபிறர்
உள்ளம்புக் கியாப்ப துரை."

இவ் வெண்பாவினுள், வஞ்சியுரிச்சீர் வந்தனவாலோவெனின், திருவள்ளுவப்பயன்' நாலடி நானூறு முதலாகிய கீழ்க்கணக்குள்ளும், முத்தொள்ளாயிர முதலாகிய சான்றோர் செய்யுளுள்ளும் வஞ்சியுரிச்சீர் வருகவென்னும் ஒத்தில்லாமையானும், வேற்றுத்தளை வெண்பாவினுள் வந்திலாமையானும் இத் தொடக்கத்தன குற்றமல்லது குணமாகா என்பது காக்கைபாடினியார் முதலாகிய தொல்லாசிரியர் துணிவு. அதுவே இந் நூலுடையார்க்கும் உடன்பாடு.

---

(பாடம்) 1. நறவம்.　　2. கோகுடி.
3. நேர்மணன் மேனின்று.

* சூளாமணி, தூது - ௪.

என்னை,

"இயற்சீர் நேரீற்றுத் தன்தளை யடைதல்
கலித்தியல் பிலவே காணும் கால
வஞ்சி யுள்ளும் வரத்தகா வாயினும்
ஓரோவிடத் தாகு மென்ப."

என்றார் பல்காயனார்.

*"நிரைநடு வியலா வஞ்சி உரிச்சீர்
கலியினோ டகவலிற் கடிவரை யிலவே"

என்பது யாப்பருங்கலம்.

இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான்
மயக்கப் படாவல்ல வஞ்சி மருங்கினெஞ் சாவகவல்
கயற்கணல் லாய்கலிப் பாதமும் வெண்ணுங் கலியினுள்ளான்
முயக்கப் படுமுதற் காலிரு பாவும் முறைமையினே. (ருச)

இ - கை, அடிமயக்கம் ஆமாறுணர்த்துதல் நுதலிற்று.

இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள் மயக்கப்படா வல்ல' என்டது, இயற்சீர் வெண்டளையான் வந்த வெண்பாவடியும், வஞ்சியடியும், ஆசிரியப்பாவினுள் வந்து மயங்கப்பெறும்; எ - று.

என்னை,

†"இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே"

என்றார் தொல்காப்பியனார்.

"வஞ்சி விரவ லாசிரிய முரித்தே
வெண்பா விரவினுங் கடிவரை யின்றே"

என்றார் பல்காயனார்.

வருமாறு :—

நேரிசை யாசிரியப்பா

‡"எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
உலைக்கல் லன்ன பாறை யேறிக்
கொடுவில் லெயினர் பகழி மாய்க்கும்

---

(பாடம்) 1. மருங்கிலெஞ்.

* யாப்பருங்கலம் - கக.

† தொல். பொருள். செய்யுளியல் - கக.

‡ குறுந்தொகை - கஉ.

கவலைத் தென்ப அவர்சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமற் கழறுமிவ் வழுங்க லூரே."

இதனுள், 'எறும்பி யளையிற் குறும்பல் சுனைய என்பது: இயற்சீர் வெள்ளடி. இதனை,

"எறும்பி [2]யளையிற் குறும்பல் சுனைய
குறுந்தொடி யாஞ்செல் சுரம்"

என உச்சரித்தது வெள்ளடியாமாறு கண்டுகொள்க.

*"இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்
உடைஇல நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே
அதனால்
நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற உயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறக்குநோக்கா
திழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலங்கல னாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே"

இதனுள், 'உப்பிலாஅ அவிப்புழுக்கல், கைக்கொண்டு பிறக்குநோக்கா' எனவும், 'இழிபிறப்பினோன ஈயப்பெற்று' எனவும் வஞ்சியடி விரவி வந்தவாறு கண்டுகொள்க.

'மயக்கப்படும்' என்றது 'மயக்கப் படாவல்ல' என்று இருகால் விலக்கிச் சொல்லியவதனால் வெண்சீர் விரவிய இயற்சீர் வெள்ளடியும், கலியடியும் ஆசிரியத்துள் அருகி வரப்பெறும் எனக் கொள்க.

---

(பாடம்)1. யளையுட்
* புறநானூறு - உகூ

வருமாறு:

நேரிசை யாசிரியப்பா

"அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி
ஏதில் மாக்களு நோவர் தோழி
என்று நோவா ரில்லை
தன்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே."

இதனுள், 'அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டென' என்பது: வெண்சீர் விரவிய இயற்றளை வெள்ளடி. இதனை,

"அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பொங்கிய பூசல் பெரிது"

என உச்சரித்து வெள்ளடியாமாறு கண்டுகொள்க.

நேரிசை யாசிரியப்பா

"குருகுவெண் டாளி கோடுபுய்த் துண்டென
மாவழுங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருள்பிடி திரிதருஞ் சாரல்
அருளா னருதல் ஆயிழை கொடிதே"

இதனுள், இரண்டாமடி கலியடி; இதனை,

"மாவழுங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
தீவழங்கு சுழல்விழிக்கட் சேயஞ்சென் றுழலுமே".

என உச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க.

'வஞ்சி மருங்கினெஞ் சாவகவல், கலிப்பா தழு நண்ணுறும்' என்பது: வஞ்சிப்பாவினுள் ஆசிரிய அடியும், கலியடியும் விரவி வரப்பெறும்; எ - று.

'எஞ்சா வகவல்' என்று சிறப்பித்தவதனால், வஞ்சியுள் ஆசிரியவடி பயின்றுவரும்; கலியடியும் வெள்ளடியும் அருகியன்றி வாரா எனக் கொள்க.

'கயற்கண் நல்லாய்' என்பது: மகடூஉ முன்னிலை.

'பட்டினப்பாலை' என்னும் வஞ்சி நெடும்பாட்டினுள் ஆசிரியவடி பயின்று வந்தன; கலியடியும், வெள்ளடியும் அருகின எனக் கொள்க.

'நேரிழை மகளி ருணங்குணக் கவரும்' என்றித் தொடக்கத்தன ஆசிரியவடி.

'வயலாமைப் புழுக்குண்டு வறளடம்பின் மலர்மிலைந்து' என்பது: கலியடி. இதனை,

"வயலாமைப் புழுக்குண்டு வறளடம்பின் மலர்மிலைந்து
சயனுட்டக் கடைசியர்தங் காதலர்தோள் மணந்தனரே'

என உச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க.

'கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை' என்பது: வெள்ளடி; இதனை,

"கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
ஆழிசூழ் வையக் கணி"

என உச்சரித்து வெள்ளடியாமாறு கண்டுகொள்க.

'கலியினுள் மூபக்கப் படுமுதற் காலிரு பாவும், என்பது: கலிப்பாவினுள் வெண்பா வடியும், ஆசிரிய வடியும் புக்கு மயங்கப்பெறும் ; எ - று.

'முறைமையினே' என்பது: முறைமையோடுங் கூட்டி வழங்கப்படும்: எ - று.

என்னை,

நேரிசை வெண்பா

"ஆசிரியப் பாவி னயற்பா வடிமயங்கும்
ஆசிரியம் வெண்பா கலிக்கண்ணும்—ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒன்பா வடிவிரவா வற்று."

இதனை விரித்துரைத்துக் கொள்க.

'காமர் கடும்புனல்' என்னும் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவினுள் வெண்பாவும், ஆசிரியப்பாவும்மயங்கினவாறு கண்டுகொள்க. ஆல் இரண்டும் அசை.

அருகிக் கலியோ டகவல் மருங்கினைஞ் சீரடியும்
வருதற் குரித்தேன்பர் வான்றமிழ் நாவலர் மற்றெருசார்
கருதிற் கடையே கடையிணை பின்கடைக் கூழையுமேன்
றிரணத் தொடைக்கு மொழிவர் இடைப்புணர்
[1]வென்பதுமே.

இ - கை. ஒருசார் அடிக்கும், தொடைக்கும் எய்தியதோர் இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

'அருகிக் கலியோ டகவல் மருங்கினைஞ் சீரடியும், வருதற் குரித்தெனபர் வான்றமிழ் நாவலர்' என்பது, ஒருசார் கலிப்பாவினுள்ளும், ஆசிரியப் பாவினுள்ளும் ஐஞ்சீர் அடியும் அருகி வரப்பெறும் என்று சொல்லுவர் புலவர்: எ - று.

வருமாறு:

"அணிமலர் சிறுபொறி அவிர்துத்தி மாநாகத் தெருத்தேறித்
துணியிரும் பனிமுந்நீர் தொட்டுழக்கு மலைந்தனையே."

இக்கலிப்பாவின் முதலடி ஐஞ்சீரடி வந்தவாறு கண்டு கொள்க.

நேரிசை யாசிரியப்பா

*"உமணர்ச் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்காட்
டின்றை வென்றிர் ஆயின்
இனியவோ பெரும தமியேற்கு மனையே"

இவ்வாசிரியத்துள் முதலடி ஐஞ்சீர் வந்தவாறு கண்டுகொள்க. 'சிறியகட் பெறினே' என்னும் இணைக் குறளாசிரியப்பாவினுள்ளும் ஐஞ்சீரடி வந்தவெனக் கொள்க. இவ்வாறே,

†"வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும்
ஐஞ்சீ ரடியு முளவென மொழிப"

என்றார் தொல்காப்பியனார்.

வெண்பாவினுள் ஐஞ்சீரடி வரப்பெறாதெனக் கொள்க.

---

(பாடம்) 1. வென்பதுவே.
* குறுந்தொகை கஉச.
† தொல். பொருள். செய்யுளியல் - சுஉ.

" ஐஞ்சீ ரடுக்கலு மண்டில மாகலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல"

என்று நந்தத்தனுர் அடிநூலில் எடுத்தோதினாராகலின்.

'மற்றொருசார், கருதிற் கடையே கடையிணை பின் கடைக் கூழையுமென், றிரணத் தொடைக்கு மொழிவர் இடைப்புணர் வென்பதுமே' என்பது: ஒருசார் ஆசிரியர் முரண்தொடையைக் கடைமுரணும், கடையிணை முரணும், பின்முரணும், கடைக்கூழை முரணும், இடைப்புணர் முரணும் என்று வேண்டுவர்; எ - று.

இரணத்தொடை எனினும், பகைத்தொடை எனினும், முரண்தொடை எனினும் ஒக்கும்.

என்னை,

" மொழியினும் பொருளினும் முரணத் தொடுப்பின்
இரணத் தொடையென் றெய்தும் பெயரே"

என்றார் காக்கைபாடினியார்.

" மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே"

என்றார் தொல்காப்பியனார்.

" மறுதலை யுரைப்பினும் பகைத்தொடை யாகும்"

என்றார் அவிநயனார்.

அவற்றுள், கடைமுரணாவது:—அடிதோறும் இறுதிச் சீர்க்கண் மறுதலைப்படத் தொடுப்பது.

கடையிணை முரணாவது :—கடை இருசீர்க்கண் மறுதலைப்படத் தொடுப்பது.

பின்முரணாவது :—இரண்டாஞ் சீர்க்கண்ணும், நான்காஞ் சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுப்பது.

கடைக்கூழை முரணாவது :—முதற்சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுப்பது.

இடைப்புணர் முரணாவது :—நடு இருசீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுப்பது.

வருமாறு :

நேரிசை யாசிரியப்பா

“ கயன்மலைப் பன்ன கண்ணிணை கரிதே
நடைமயி லிவளுந் தனிவடம் வெளிதே
நூலி னுண்ணிடை சிறிதே
ஆடமைத் தோளிக் கல்குலோ பெரிதே.”

இஃது அடிதோறும் இறுதிச்சீர்க்கண் மறுதலைப் படத் தொடுத்தமையால், கடைமுரண்.

நேரிசை யாசிரியப்பா

“ மீன்தேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் வீசினைக் [1]குழூஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவுந் தவிரான்
தேரோ கானலங் கான்டும்
பீரேர் வண்ணமுஞ் சிறுநுதல் பெரிதே.”

இஃது அடிதோறும் கடை இருசீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், கடையிணை முரண்.

நேரிசை யாசிரியப்பா

“ சார லோங்கிய தடந்தாள் தாழை
கொய்ம்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து
தமியம் இருந்தன மாக நின்றுதன்
நயனுடைப் பணிமொழி நன்குபல பயிற்றி
வீங்குதொடிப் பணைத்தோள் நெகிழத்
துறந்தோன் அன்னனெம் மேனியோ நீதே.”

இஃது அடிதோறும் கடைச்சீரும், இரண்டாஞ்சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால் பின்முரண்.

நேரிசை யாசிரியப்பா

“ காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளும் அணங்குமால் எமக்கே.”

---

(பாடம்) 1. தொகூஉம். 2. புகழ்ந்து.

இது முதற்சீரொழிந்த மூன்றுசீரும் மறுதலைப்பட்டுத் தொடுத்தமையால், கடைக்கூழை முரண்.

நிலைமண்டில வாசிரியப்பா

"[1]போதவிழ் குறிஞ்சி நெடுந்தண் மால்வரைச்
சோதையில் தாழ்ந்த வோங்குவெள் ளருவி
காந்தளஞ் செங்குலைப் பகுங்கூ தாளி
வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்
பெருமலைச் சீறூ ரிழிதரு நலங்கவர்ந்
தின்று வாயின இனியோர் மாட்டே."

இஃது இடை இருசீரும் மறுதலைப்பட்டுத் தொடுத்தமையால், இடைப்புணர் முரண்.

இவ்வாறு சொன்னார் சையனார் முதலாகிய ஆசிரியர் எனக் கொள்க.

இனி, 'இரண்டு தொடைக்கும்' என்ற உம்மையால் ஒழிந்த மோனை, இயைபு, எதுகை, அளபெடை என்னும் தொடை நான்கிற்கும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. அவை கூட்டி வழங்குமாறு :—

| | |
|---|---|
| கடைமோனை | கடையெதுகை |
| கடையிணைமோனை | கடையிணையெதுகை |
| பின்மோனை | பின்னெதுகை |
| கடைக்கூழைமோனை | கடைக்கூழையெதுகை |
| இடைப்புணர்மோனை-எனவும், | இடைப்புணரெதுகை - எனவும், |
| கடையியைபு | கடையளபெடை |
| கடையிணை இயைபு | கடையிணையளபெடை |
| பின்னியைபு | பின்னளபெடை |
| கடைக்கூழையியைபு | கடைக்கூழையளபெடை |
| இடைப்புணரியைபு-எனவும், | இடைப்புணரளபெடை |

எனவுங் கண்டுகொள்க. இவற்றிற் கிலக்கியம் யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க.

வருக்க நெடிலினம் வந்தா லெதுகையும் மோனையுமென்
றுருக்கப் பெயரான் உரைக்கப் படுமூன் றாசிடையிட்
டிருக்கு மொருசா ரிரண்டடி மூன்றும் எழுத்துமொன்றி
நிரக்கு மெதுகையென் றாலுஞ் சிறப்பில நேரிழையே. (ருகூ)

(பாடம்) 1. போதவிரி.

இ - கை. ஒருசார் எதுகைக்கும், மோனைக்கும் எய்திய தோர் இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

'வருக்க நெடிலின மம் வந்தா லெதுகையு மோனையு மென், றொருக்கப் பெயரா லுரைக்கப்படும்' என்பது:

'வருக்கவெழுத்தும், நெடிலெழுத்தும், இனவெழுத்தும் எதுகையும், மோனையுமாய் வந்தால், அவை வருக்க வெதுகை, நெடிலெதுகை, இனவெதுகை எனவும், வருக்க மோனை, நெடின்மோனை, இனமோனை எனவும் பெயரிட்டு வழங்கப்படும்; எ - று.

வருமாறு :

இன்னிசை வெண்பா

" நீடினார்க் கொம்பர்க் குயிலாலத் தாதூதிப்
பாடும்வண் டஞ்சி அகலும் பருவத்துத்
தோடார் தொடிநெகிழ்த்தா ருள்ளார் படவொல்லா
பாடமை சேக்கையுட் கண்."

இது டகர வருக்க வெதுகை.

*"அறத்தா றிதுவென—விடை."

இது றகர வருக்க வெதுகை.

†"ஆவாவென்றே—ஒருசாரார்."

என்பது இரண்டாமெழுத் தொன்றாதாயினும் இரண்டா மெழுத்தின் மேலேறிய நெடில் ஒப்புமை நோக்கி நெடி லெதுகை என்று வழங்கப்படும்.

இனி, இனவெதுகை மூன்று வகைப்படும்; வல்லின வெதுகையும், மெல்லின வெதுகையும், இடையின வெதுகை யும் என.

* இச்செய்யுளை சக ஆவது பக்கத்திற் காண்க.
† இச்செய்யுளை அச ஆவது பக்கத்திற் காண்க.

வருமாறு :

குறள் வெண்பா

*"தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்."

இது வல்லின வெதுகை.

குறள் வெண்பா

†"அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு.

இது மெல்லின வெதுகை.

குறள் வெண்பா

‡"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு."

இஃது இடையின வெதுகை

வருக்கமோனை முதலாகிய மூன்றும் வருமாறு :—

நேரிசை யாசிரியப்பா

"பகலே, பல்பூங் கானற் கிள்ளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து மேம்படத் திருகிப்
புனையீ ரோதி செய்குறி நசைஇப்
பூந்தார் மார்ப புனத்துள் தோன்றிப்
பெருவரை யடுக்கத் தொருவே லேந்திப்
பேயும் அறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்கண் உழுவைப் படுபகை வெரீஇப்
பொங்குசினந் தணியாப் பூநுத லொருத்தல்
போகாது வழங்கு மாரிரு ணடுநாள்
பௌவத் தன்ன பாயிருள் நீந்தி
இப்பொழுது வருகுவை யாயின்
நற்றூர் மார்ப நீண்டலெங் கதுப்பே."

இது பகர வருக்க மோனை.

---

* திருக்குறள், நடுவுநிலைமை - ௪.
† திருக்குறள், அன்புடைமை-௪　‡ திருக்குறள், வாய்மை-௩

"*ஆர்கலி யுலகத்து—ஒழுக்கமுடைமை."

இது முதலெழுத் தொன்றா தாயினும் முதலெழுத்தின் மேலேறிய நெடில் ஒப்புமை நோக்கி நெடில் மோனை எனறு வழங்கப்படும்.

இது, இனமோனை மூன்று வகைப்படும்: வல்லின மோனையும், மெல்லினமோனையும் இடையின மோனையும் என

நேரிசை யாசிரியப்பா

" நயலேர் உண்கண் கலுழ நாளுஞ்
சுடர்புரை திருநுதல் பசலை பாயத்
திருந்திழை அமைத்தோள் அரும்பட ருழப்பப்
போகல் வாழி யைய பூத்த
கொழுங்கொடி அணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வருஉம் பொழுதே."

இஃது எல்லாவடியும் முதற்கண்ணே வல்லெழுத்து வந்தமையான், வல்லினமோனை. மெல்லினமோனையும், இடையினமோனையும் வந்தவழிக் கண்டுகொள்க.

என்னை,

" வருக்க நெடிலினம் வரையா ராண்டே
நெடிய பிறவும் இனத்தினு மாகும்"

என்றார் பிறருமெனக் கொள்க.

'ஒருக்கப் பெயரான்' என்று சிறப்பித்தவதனால் ஒரு சார் ஆசிரியர் தலையாகு எதுகை, இடையாகு எதுகை, கடையாகு எதுகை என்றும், தலையாகுமோனை, இடையாகு மோனை, கடையாகுமோனை என்றும் வேண்டுவர் எனக் கொள்க.

---

* இச் செய்யுளை ௭௮ ஆவது பக்கத்திற் காண்க.

என்னை,

"சீர்முழு தொன்றில் தலையா கெதுகை
யோரெழுத் தொன்றின் இடைகடை பிறவே"

என்றாராகலின்.

இச் சூத்திரத்தான் மோனைக்கும் இவ்வாறே விசித்துரைத்துக் கொள்க.

வருமாறு:

நேரிசை வெண்பா

*"சிலைவிலங்கு—போழ்து"

என்பது தலையாகு எதுகை.

குறள் வெண்பா

‡"அகர முதல—யுலகு"

என்பது இடையாகு எதுகை.

குறள் வெண்பா

§"தக்கார்—காணப்படும்".

என்பது கடையாகு எதுகை.

---

* அடிதோறுஞ் சீர் முழுதும் எதுகை ஒன்றி வருவது தலையாகு எதுகை எனவும், அடிதோறும் இரண்டாமெழுத்தொன்றி வருவது இடையாகு எதுகை எனவும், வருக்க வெதுகை முதலாகப் பிறவழியால் வருவன கடையாகு எதுகை எனவும், அவ்வாறே, அடிதோறுஞ் சீர்முழுது மோனை யொன்றிவருவது தலையாகு மோனை எனவும், அடிதோறும் முதலெழுத்தொன்றுமே மோனை யொன்றி வருவது இடையாகு மோனை எனவும், வருக்கமோனை முதலாகப் பிறவழியால் வருவன கடையாகு மோனை எனவும் வழங்கப்படும் எனக்கொள்க.

† இச்செய்யுளை ௧௩ ஆவது பக்கத்திற் காண்க.

‡ இச்செய்யுளை ௭௬ ஆவது பக்கத்திற் காண்க.

§ இச்செய்யுளை ௧௪௩ ஆவது பக்கத்திற் காண்க.

குறள் வெண்பா

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்பது தலையாகு மோனை.

†"மாவும் புள்ளும்"

என்பது இடையாகு மோனை.

நேரிசை ஆசிரியப்பா

‡"பகலே, பல்பூங் கானல்"

என்பது கடையாகு மோனை.

'உயிராசிடையிட், டிருக்கு மொருசார் இரண்டடி மூன்று மெழுத்துமொன்றி, நிற்கு மெதுகை யென்றுமுஞ் சிறப்பில்' எனபது :

உயிரெதுகை, ஆசெதுகை, இடையிட் டெதுகை, இரண்டடி யெதுகை, மூன்றுமெழுத்தொன் றெதுகை என்று ஒருசார் எதுகையும் உளவாயினும் பெரியதொரு சிறப்பில எனக் கொள்க.

'நேரிழையே' என்பது : மகடூஉ முன்னிலை.

வருமாறு :

நேரிசை யாசிரியப்பா

" துனியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்
அணிகிளர் தாரோய் அருஞ்சுர நீந்தி
வடியமை யெஃகம் வலன்வயின் ஏந்தித்
தனியே வருதி நீயெனின்
மையிருங் கூந்த லுய்தலோ அரிதே."

இஃது §இரண்டாமெழுத் தொன்றுதாயினும், இரண்டாமெழுத்தின் மேலேறிய உயிரொன்றி வந்தமையால் உயிரெதுகை.

---

* திருக்குறள், துறவு - ௫0.
† இச்செய்யுளை ௪௭ ஆவது பக்கத்திற் காண்க.
‡ இச்செய்யுளை ௧௫௬ ஆவது பக்கத்திற் காண்க.
§ ஈண்டு 'இரண்டா மெழுத்து' என்றது மெய்யெழுத்தை என்றுணர்க.

இனி, ஆசெதுகை 'ய, ர, ல, ழ' என்னும் ஒற்று நான்கும் ஆசாய் வரும் எனக் கொள்க.

என்னை,

"யரலழ வென்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை உயிர்ப்பினஃ
தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டும்"

என்றார் *காக்கைபாடினியார்.

வருமாறு :

கலித்துறை

†"காய்மாண்ட தெங்கின் பழம்விழக் கமுகி னெற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையால் திசைபோய துண்டே."

இது யகர ஒற்றிடைவந்த ஆசெதுகை.

கலி விருத்தம்

‡"மாக்கொடி மாலையும் மௌவற் பந்தரும்
கார்க்கொடி முல்லையுங் கலந்து மல்லிகைப்
பூக்கொடிப் பொதும்பரும்[1] கான ஞாழலும்
தூக்கடி கமழ்ந்துதான் துறக்க மொத்ததே."

இது ரகர ஒற்றிடைவந்த ஆசெதுகை.

நேரிசை வெண்பா

§"ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின அல்லவாம்—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி யாபோல்
உருவு பலகொள லீங்கு."

இது லகர ஒற்றிடை வந்த ஆசெதுகை.

---

(பாடம்) 1. பொன்னின் ஞாழலும்.
* கையனார் பாட்டெனவுங் கூறுப.
† சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம் - ௨௧.
‡ குளா நாட்டு. 29.
§ நாலடியார், மெய்ம்மை - ௮.

நேரிசை வெண்பா

"அந்தரத் துள்ளே யகங்கை புறங்கையாம்
மந்தரமே போலும் மனைவாழ்க்கை—மந்தரத்து
வாழ்கின்றே மென்று மகிழன்மின் வாழ்நாளும்
போகின்ற பூளையே போன்று."

இது மகர ஒற்றிடை வந்த ஆசெதுகை.

குறள் வெண்செந்துறை

*"ஆர்கலி யுலகத்து"

இஃது ஆசிடையிட்டுவந்த வல்லின வெதுகை. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இடையிட்டெதுகை வருமாறு:

நேரிசை யாசிரியப்பா

"தோடா ரெல்வளை நெகிழ நாளும்
நெய்த லுண்கண் பைதல் கலுழ
வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைகல்தோறும் பைபப் பெருகின
நீடா ரிவரென நீமனங் கொண்டார்
கேளார் கொல்லோ காதலர் தோழி
வாடாப் பௌவ அறன்முகக் கெழிலி
பருவம் பொய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மல்லயன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே."

இஃது அடிதோறும் இடையிட்டு வந்தமையால் இடையிட்டெதுகை.

இது கையனார் காட்டிய பாட்டு.

என்னை,

†"தாஅ வண்ணம்
இடையிட்டு வந்த எதுகைத் தாகும்"

என்றார் தொல்காப்பியனார்.

---

* இச்செய்யுளை எஅ ஆவது பக்கத்திற் காண்க.
† தொல். பொருள். செய்யுளியல் - உகஙி.

இரண்டடி யெதுகை வருமாறு :

"துவைக்குந் துளிமுந்நீர்க் கொற்கை மகளிர்
அவைப்பதம் பல்லிற் கழகொவ்வா முத்தம்
மணங்கமழ்தார் அச்சுதன் மண்காக்கும் வேலின்
அணங்கும் அமுதமு மந்நலார் பாடல்."

இது முன் இரண்டடியும் ஒரெதுகையாய்ப் பின் இரண்டடியும் மற்றோரெதுகையாய் வந்தமையால் இரண்டடி எதுகை.

என்னை,

"இரண்டடி எதுகை யிரண்டொருங் கியன்றபின்
முரண்ட எதுகை யிரண்டில வரையார்"

என்றாராகலின்.

மோனைக்கும் அவ்வாறே யொட்டிக் கொள்க.

வருமாறு :

கலிவிருத்தம்

"ஆகங் கண்டக ராலற்ற ஆடவர்
ஆகங் கண்டகத் தாலற்ற அன்பினர்
பாகங் கொண்டு பயோதரஞ் சேர்த்தினர்
பாகங் கொண்டு பயோதரம் நண்ணினர்."

இது முன் இரண்டடியும் ஒரு மோனையாய்ப் பின் இரண்டடியும் மற்றொரு மோனையாய் வந்தமையால், இரண்டடி மோனை.

குறள் வெண்பா

"பவழமும் பொன்னுங் குவைஇய முத்தின்
திகழ்நரும் மின்றனபுன் னை."

குறள் வெண்பா

*"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்."

இவை மூன்றுமெழுத்தொன் றெதுகை.

* திருக்குறள் : வாய்மை - உ.

'விரக்கு மேதுகை' என்று சிறப்பித்தவதனால், விட்டிசை வல்லொற்றெதுகை என்றும், விட்டிசை மோனை என்றும் வேண்டுவோரும் உளர் எனக் கொள்க.

வருமாறு :

குறள் வெண்பா

"பற்றிப் பலகாலும் பான்மறி உண்ணுமை
நொஅவியல் நின்னட்டை நீ."

இது வல்லொற் றடுத்தாற்போல, விட்டிசைத்துக் குற்றெழுத்தினோடு புணர்ந்தமையான், விட்டிசை வல்லொற்றெதுகை.

குறள் வெண்பா

"அ அவனும் இ இவனும் உ உவனுங் கூடியக்கால்
எ எவனை வெல்லா ரிகல்."

இது முதலெழுத்து இரண்டடிக்கண்ணும் விட்டிசைத்து வந்தமையால் விட்டிசைமோனை. இவையெல்லாஞ் சிறப்பிலவெனக் கொள்க.

இன்னும் 'ஒருக்கப் பெயரான் உரைக்கப்படும்' என்று சிறப்பித்தவதனாற் பாவினங்கள் எல்லாத் தொடையானும் வரும் என்றாராயினும், பெரும்பான்மையுந் தலையாகு மோனையிற் றிரிந்தும், தலையாகு எதுகையிற் றிரிந்தும் வாராவெனவும், செந்தொடையொழித் தெல்லாத் தொடைக்கும், இனவெழுத்து வரத்தொடுப்பதூஉம், வழியெதுகை வரத்தொடுப்பதூஉம், வழிமுரண் வரத்தொடுப்பதூஉஞ் சிறப்புடைத் தெனவுங் கொள்க.

இனவெழுத்துப் பெற்று மோனை முதலாகிய தொடையும, தொடை விகற்பமும் போலாமை வேறுபடத் தொடுப்பது 'மருட்செந்தொடை' எனக் கொள்க. இனவெழுத்தாமாறு தானமொத்த குறிலும், நெடிலுந் தம்முள் இனமாம்

அவை,

அகர ஆகார ஐகார ஔகாரங்கள் தம்முள் இனமாம்.
இகர ஈகார எகர ஏகாரங்கள் தம்முள் இனமாம்.
உகர ஊகார ஒகர ஓகாரங்கள் தம்முள் இனமாம்.
ஒற்றினுள்,

இவை ஏறிய உயிர்மெய்க்கும் இவ்வாறே கொள்க.

சகர தகரங்கள் தம்முள் இனமாம்.
ஞகர நகரங்கள் தம்முள் இனமாம்.
மகர வகரங்கள் தம்முள் இனமாம்.

இவற்றை 'அனு' என்று வழங்குவாருமுளர்.

என்னை,

நேரிசை வெண்பா

"அகரமோ டாகாரம் ஐகாரம் ஔவாம்
இகரமோ டீகாரம் எஏ—உகரமோ
டூகாரம் ஒஓ ஞநமவ தச்சகரம்
ஆகாத அல்ல அனு"

என்றாராகலின்.

அவற்றுட் சில வருமாறு :

குறள் வெண்பா

*"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்"

குறள் வெண்பா

†"அமிழ்தினு மாற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்."

இவை இனவெழுத்துப் பெற்று மோனை முதலாயின தொடையும், தொடை விகற்பமும் போலாமை வேறுபடத் தொடுத்தமையான் மருட்செந்தொடை. பிறவு மன்ன.

---

* திருக்குறள், ஈகை – அ.

† திருக்குறள், மக்கட்பேறு – ச.

இனி, வழியெதுகை வருமாறு :

கட்டளைக் கலித்துறை

"மண்டலம் பண்டுண்ட திண்டேர் வரகுணன் தொண்டியின்
வாய்க்
கண்டலந் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கன [1]மகர
குண்டலம் கெண்டை இரண்டொடு தொண்டையுங்
கொண்டொர் திங்கள்
மண்டலம் வண்டலம் பக்கொண்டல் தாழ வருகின்றதே."

*'கொங்கு தங்கு' முதலாயினவுங் கொள்க. 'அனுப்பிராசம்' என்னும் வடமொழியை; 'வழியெதுகை' எனபது தமிழ் வழக்கு.

இனி, வழி முரண் வருமாறு :

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

†'செய்யவாய்ப் பசும்பொ னோலைச் சிறடிப் பரவை யல்குல்
ஐய நுண் மருங்குல் நோவ வடிக்கொண்ட குவவுக் கொங்கை
வெய்யவாய்த் தண்மணன் நீலம் விரிந்தென விலங்கி நீண்ட
மையவா மழைக்கட் கூந்தன் மகளிரை வருக வென்றான்."

கட்டளைக் கலித்துறை

"ஒருமால் வரைநின் றிருசுட ரோட்டி முந்நீர்க்கிடந்த
பெருமா நிலனுஞ் சிறுவிலைத் தாவுண்டு பேதையர்கண் [யிற்
பொருமா தரித்தெ தங்க லெங்கோன் பொரவல் லவன்பொதி
கருமா விழிவெண் பற்செவ்வாய்ப் பசும்பொற் கனங்குழைக்கே."

மோனையும் எதுகையும் திரிந்து, பாவும் இனமும் வாராமை மேற்காட்டியவற்றுள்ளும், பிறவற்றுள்ளும் கண்டு கொள்க.

சுருங்கிற்று மூன்றடி ஏனைத் தரவிரு மூன்றடியே
தரங்கக்கும் வண்ணகக் குந்தர வாவது தாழிசைப்பா
சுருங்கிற் றிரண்டடி [2]யோக்கம் இரட்டி சுரும்பிமிருந்
தாங்கக் குழலாய் சுருங்கந் தரவினில் தாழிசையே. (௫எ)

---

(பாடம்) 1. வயிரகுண்டலங் கெண்டை.
2. யோங்க விரட்டி ஒட்டி வரும்.

* இச் செய்யுளை கூஅ ஆவது பக்கத்தில் காண்க.

† சூளாமணி, சுய, ௪0௬.

இ-கை. தரவு தாழிசைகட்கு அடிவரையறையாமா றுணர்த்துதல் நுதலிற்று.

'சுருங்கிற்று மூன்றடி யேனைத் தரவு' என்பது 'அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும்' வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவும ஒழித்தல்லாத கலிப்பாவிற்குத் தரவு மூன்றடியே சிறுமை; பெருமை பாடுவோனது பொருள் முடிவுக் குறிப்பே; வரையறையில்லை; எ-று.

'இருமூன்றடியே தரங்கக்கும் வண்ணகக்குந் தரவாவது' என்பது: அம்போ தரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கும் பெருக்கஞ் சுருக்கமில்லை; ஆறடியே தரவாவது; எ-று.

'சுருங்கிற்று மூன்றடி யேனைத் தரவு' என்றாராயினும் 'வெள்ளைக்கிரண்டடி' என்னுங் காரிகையுள், கலிபபாவிற்கு நான்கடிச் சிறுமை சொனனமையால், தரவு கொச்சகக் கலிப்பாவிற்கு நான்கடியே சிறுமை வருவதெனக் கொள்க.

'தாழிசைப்பா சுருங்கிற் றிரண்டடி யோக்கம் இரட்டி' என்பது பொதுவகைபால் தாழிசை சொல்லிப் போந்தாராயினும், தாழிசைகட்கு இரண்டடி சிறுமை; நான்கடி பெருமை; இடை மூன்றடியானும் வருவது; எ-று.

'சுரும்பிமிருந் தாங்கக் குழலாய்' என்பது: மகடூஉ முன்னிலை.

'சுருங்குந் தரவினிற் றாழிசையே' என்பது: தரவடியிற் றாழிசையடி சுருங்கி வருவது; எ-று.

இவற்றிற் கிலக்கியம் மேற்காட்டியவற்றுள்ளும், பிற வற்றுள்ளுங் கண்டுகொள்க.

போருளோ டடிமுதல் நிற்பது கூனது வேபோருந்தி
இருள்சேர் விலாவஞ்சி ஈற்றினும் நிற்கும் இனியோழிந்த
மருள்தீர் விகாரம் வகையுளி வாழ்த்து வசைவனப்புப்
போருள்கோள் குறிப்பிசை யோப்புங்குறிக்கோள்
போலங்கோடியே. (௩அ)

இ - கை. மேற்சொல்லப்பட்ட பாக்கட்கெல்லா மெய்திய தோர் இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

'பொருளோ டடிமுதல் நிற்பது கூன்' என்பது அடி முதற்கட் பாவினது பொருளைத் தழுவித் தனியே நிற்பது 'கூன்' எனப்படும்.

'அதுவே பொருந்தி இருள் சேர்விலா வஞ்சி ஈற்றினு நிற்கும்' என்பது: அக் கூன் வஞ்சிப்பாவினது அடியின் இறுதிக்கண்ணும் நிற்கப்பெறும்; எ - று.

'ஈற்றினும்' என்ற உம்மையால் வஞ்சிப்பாவின் அடி நடுவினுங் கூன் வரப்பெறும் எனக் கொள்க.

'இருள்சேர் விலாவஞ்சி' என்று சிறப்பித்தவதனுல் வஞ்சியடியின் நடுவும், இறுதியும் அசை கூனய் வருவது சிறப்புடைத்து; சீர் கூனய் வரினும் உகர இறுதியாகிய நேரீற்று இயற்சீராயல்லது வாரா எனக் கொள்க. அசைச் சீர் எல்லாப் பாவினுள்ளும் அருகியல்லது கூனய் வாராது எனக் கொள்க. எனவே வெண்பா, ஆசிரியம், கலி என்னும் இவற்றின் இடையும், இறுதியுங் கூன் வரப் பெறுது எனக் கொள்க.

என்னை,

''அடிமுதற் பொருளைத் தானினிது கொண்டு
முடிய நிற்பது கூனென மொழிப''
''வஞ்சியி னிறுதியும் ஆகும் அதுவே''
''அசைகூ னுகும் என்மனூர் புலவர்''

என்ருர், பல்காயனர்.

கூனைத் தனிச்சொல் என்று வழங்குவாரு முளர்.

என்னை,

*''அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ
திறுதியும் வஞ்சியுள் இயலு மென்ப''

என்ருராகலின்.

---

*யாப்பருங்கலம் - கூ௪.

கொச்சகக்கலியுள் ஓரடி முழுதுங் கூனய் வரப்பெறும்; அவை சிறப்பில எனக் கொள்க.

வருமாறு:

நேரிசை வெண்பா

"உதுக்காண்; சுரந்தானு வண்கைச் சுவணமாப் பூதன்
பரந்தானுப் பல்புகழைப் பாடி—இரந்தார்மாட்
டின்மை யகல்வது போல இருணீங்க
மின்னும் அளிதோ் மழை."

இவ் வெண்பாவினுள் அடிமுதற்கண் 'உதுக்காண்' எனக் கூன் வந்தவாறு கண்டுகொள்க.

நேரிசை யாசிரியப்பா

* "அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடா ரெல்வளை நெகிழ வேங்கிப்
பாடமை சேக்கையுட் படர்கூர்ந் திசினே
அன்னள் அளியள் என்னாது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னுந் தோழியென் இன்னுயிர் குறித்தே."

இவ்வாசிரியப்பாவின் அடிமுதற்கண் 'அவரே' எனவும் 'யானே' எனவுங் கூன் வந்தவாறு கண்டுகொள்க.

தரவு கொச்சகக் கலிப்பா

"உலகினுள்,
பொருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே பிறழினும்
இருந்தகைய விறுவரைமேல் எரிபோலச் சுடர்விடுமே
சிறுதகையார் சிறுதகைமை சிறப்பெனினும் பிறழ்வின்றி
உறுதகைமை யுலகினுக்கோர் ஒப்பாகித் தோன்றுதே."

இக் கலிப்பாவினுள் அடிமுதற்கண் 'உலகினுள்' எனக் கூன் வந்தவாறு கண்டுகொள்க.

* குறுந்தொகை – உகக.

வஞ்சிப்பா

"உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி யொழுகுமென்ப
அதனால்,
நற்றிற நாடுதல் நன்மை
பற்றற யாவையும் பரிவறத் துறந்தே."

இவ் வஞ்சிப்பாவினுள் அடிமுதற்கண் 'உலகே' எனச் சீர் கூனாய் வந்தவாறும்,

"மாவழுங்கலின் மயக்குற்றன—வழி."

இவ் வஞ்சியடியின் இறுதிக்கண் 'வழி' என அசை கூனாய் வந்தவாறும்,

"கலங்கழாலிற் றுறை—கலக்குற்றன."

இவ் வஞ்சியடியின் நடுவில் 'துறை' என அசை கூனாய் வந்தவாறுங் கண்டுகொள்க.

"தேரோடத் துகள் கெழுமின—தெருவு."

இவ் வஞ்சி யடியினது இறுதிக்கண், 'தெருவு' என உகர விறுதியாகிய இயற்சீர் கூனாயினவாறு கண்டுகொள்க.

*'காமர் கடும்புனல்' என்னுங் கொச்சகக் கலியுள் 'சிறுகுடியீரே சிறுகுடியீரே' என ஓரடியாற் கூன் வந்தவாறு காண்க. பிறவுமன்ன.

இனி ஒழிந்த 'மருடீர் விகாரம் வகையுளி வாழ்த்து வசை வனப்புப, பொருள்கோள் குறிப்பிசை மொப்புங் குறிக்கோள்' என்பது :

மேல் †'எழுத்தசைசீர் பந்த மடிதொடை பாவினங் கூறுவன்' என்று அதிகாரம் பாரித்த காரிகையுள் ஓதப்

---

* கலித்தொகை, ௩௯.

† இச் செய்யுளைத் தற்சிறப்புப் பாயிரம் ௧ ஆவது செய்யுளில் காண்க.

படாத யாப்புறுப்பாய் மயக்கந்திர வகுக்கப்பட்ட விகாரமும், வகையுளியும், வாழ்த்தும, வசையும், வனப்பும், பொருளும், பொருள்கோளும், குற்றப்பிசையும் செய்யுள் ஒப்புமையும் ஆமாறு உபதேச முறைமையான் உணர்க; எ - று.

'பொலங்கொடியே' என்பது: மகடூஉ முன்னிலை.

அவற்றுள், விகாரம் அறுவகைப்படும்: வலித்தலும், மெலித்தலும்' விரித்தலும், தொகுத்தலும் நீட்டலும், குறுக்கலும் என.

என்னை,

‡"அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலு மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலுங் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்."

வருமாறு.

"குறுத்தாட் பூதஞ் சுமந்த
அறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே."

இதனுள், 'குறுங்காள்' எனற்பாலதனைக் 'குறுத்தாள்' என வலிக்கும்வழி வலித்தவாறும்,

"தண்டையின் இனக்கிளி கடிவோள்
பண்டையள் அல்லள் மானோக் கினளே."

இதனுள், 'தட்டை' எனற்பாலதனைத் 'தண்டை' என மெலிக்கும்வழி மெலித்தவாறும்;

இன்னிசை வெண்பா

"வெண்மண லெக்கர் விரிதிரை தந்தநீர்
கண்ணுடி மண்டிலத் தூதாவி யொத்திழியுந்
தண்ணந் துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார்
வண்ணங் கடைப்பிடியா தார்."

---

* தொல். சொல்: ௪0௩.

இதனுள், 'தண்டுறைவர்' எனற்பாலதனைத் 'தண்ணந் துறைவர்' என விரிக்கும்வழி விரித்தவாறும்,

நேரிசை வெண்பா

"பூத்தாட் புறவிற் புனைமதில் கைவிடார்
காத்தவிற் காவல ரேனையார்—பார்த்துளுர்
வேண்டார் வணக்கி விறன்மதில் தான்கோடல்
வேண்டுமாம் வேண்டார் மகன்."

இதனுள், 'வேண்டாரை வணக்கி' எனற்பாலதனை 'வேண்டார் வணக்கி' எனத் தொகுக்கும்வழித் தொகுத்த வாறும்,

நேரிசை வெண்பா

"பாசிழை யாகப் பசப்பித்தான்[1] பைந்தொடியை
மாசேனன் என்று மனங்கொளீஇ—மாசேனன்
சேயிதழ்க் கண்ணி தாதலாற் சேர்த்தியென்
னோய்திர நெஞ்சின்மேல் வைத்து."

*இதனுள், 'பச்சிழை' எனற்பாலதனைப் 'பாசிழை என நீட்டும்வழி நீட்டியவாறும்,

†"யானை, யெருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்."

இதனுள், 'தீயேன்' எனற்பாலதனைத் 'தியேன்' எனக் குறுக்கும்வழி குறுக்கினவாறும் கண்டுகொள்க. பிறவுமன்ன.

'மருள்தீர் விகாரம்' என்று சிறப்பித்தவதனால் வர லாற்று முறைமையோடுங் கூடிப் பொருந்தி வாராநின்றன வல்லது 'தவைக்குப்பாலில்லை' எனற்பாலதனைத் 'தூவைக் குப் பாலில்லை' என்றாற்போலப் புணர்க்கப்படாது என்க.

இன்னும் 'மருள்தீர் விகாரம்' என்று சிறப்பித்த வதனால், தலைக்குறையும், இடைக்குறையும், கடைக்குறையும்

---

(பாடம்) 1. பைந்தொடி.

* இது நன்னூலார்க்கு உடன்பாடன்று.

† இவை ௭௨ ஆவது பக்கத்திலுள்ள 'பன்மாடக் கூடன்' என்னும் பஃறொடை வெண்பாவின் கடையடிகள்.

வருவனவு முள. அவையும் வரலாற்று முறைமையோடுங் கூடி வழங்கப்படும் எனக் கொள்க.

வருமாறு :

"மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி."

இதனுள், 'தாமரை' எனற்பாலதனை 'மரை' எனத் தலைகுறைத்து வழங்கினவாறும்,

*"வேதின வெரிநின் ஓதி முதுபோத்து."

இதனுள் 'ஓந்தி' எனற்பாலதனை 'ஓதி' என இடை குறைத்து வழங்கினவாறும்,

†"அகலிரு விசும்பி னால் போல
வாலிதின் மலர்ந்தன புன்கொடி முசுண்டை."

இதனுள், 'ஆரல்' எனற்பாலதனை 'ஆல்' என இடை குறைத்து வழங்கினவாறும்,

"நீலுண் டுகிலிகை கடுப்ப."

இதனுள், 'நீலமுண் துகிலிகை கடுப்ப' எனற்பாலதனை 'நீலுண் துகிலிகை கடுப்ப' எனக் கடைகுறைத்து வழங்கின வாறுங் கண்டுகொள்க. பிறவுமன்ன.

'அந்நாற்சொலுந் தொடுக்குங்காலை' என்றவழி நான்கு சொல்லாவன, இயற்சொல், திரிசொல், திசைச்சொல் வடசொல் என இவை.

என்னை,

‡"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே"

என்றாராகலின்.

---

* குறுந்தொகை – கசo.

† மலைபடு கoo – க.

‡ தொல்காப்பியம், சொல் – ௩கஎ.

அவற்றுள், இயற்சொல்லாவன சோறு கூழ் பால் பாளிதம் என்பன.

என்னை,

"இயற்சொல் தாமே இயம்புங் காலைச்
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே"

என்றாராகலின்.

அவை நடக்கும் எல்லை யாவையோவெனின்; வையை யாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாகிய நான்கு எல்லைக்குட் பட்ட சோணாடு என்க.

என்னை,

"மன்ற வாணன் மலர்திரு வருளால்
தென்றமிழ் மகிமை சிவணிய செய்த
அடியவர் கூட்டமு மாதிச் சங்கமும்
படியில்மாப் பெருமை பரவுறு சோழனுஞ்
சைவமா தவருந் தழைத்தினி திருக்கு
மையறு சோழ வளநா டென்ப"

என்றாராகலின்.

திரிசொல்லாவன - அடுக்கல், பிறங்கல், ஓங்கல், விலங்கல், விண்டு, குவடு என்பனவை, மலை என்னும் ஒருபொருள் குறித்த வேறு சொல்.

உந்தி என்பது - ஆற்றிடைக் குறையும், கொப்பூழும், தேருருளும், யாழகத்தோருறுப்பும் என்னும் வேறு பொருள குறித்த ஒரு சொல்.

என்னை,

*"ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி"

என்றாராகலின்.

* தொல்காப்பியம், சொல், சே. - ௩௯௯.

திசைச்சொல்லாவன: மயிலே* 'மஞ்ஞை' என்றும், இளிமைக் 'கிள்ளை' என்றும், தாயைத் 'தள்ளை' என்றும், நாயை 'ஞமலி' என்றும் வழங்குவனவாம்.

என்னை,

†"செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி'

என்றாராகலின்.

செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரு கொடுந்தமிழ் நிலமாவன:—

நேரிசை வெண்பா

"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பன்றி யருவா அதன்வடக்கு—நன்றாய
சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்."

இதை விரித்துரைத்துக் கொள்க.

வடசொல்லாவன:—குங்குமம், மூலம், சங்கு, சந்தனம் என்பனவாம்.

என்னை,

‡"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே"

§"சிதைந்தன வரினு மியைந்தன வரையார்"

என்றார் தொல்காப்பியனார்.

'வகையுளி' என்பது: முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புகள் நிற்புழி யறிந்து, குற்றப்படாமல் வண்ணம் அறுத்தல் எனக் கொள்க.

---

* 'மஞ்ஞை' திசைச்சொல் என்பது சேனாவரையர்க்கு உடம்பாடன்று.

† தொல்காப்பியம் - சொல் – சே - ௪00.

‡ ,, ,, ,, ௪0௧

§ ,, ,, ,, ௪0௨

என்னை,

நேரிசை வெண்பா

"அருணுக்கு நீரா ரசைசீ ரடிக்கண்
பொருள்நோக்கா தோசையே நோக்கி—மருள்நீக்கிக்
கூம்பவும் கூம்பா தலரவுங் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு"

என்றாராகலின்.

வருமாறு:

குறள் வெண்பா

"கடியார்பூங் கோதை கடாயினன் திண்டேர்
சிறியார்தஞ் சிற்றில் சிதைத்து."

இதனைக் 'கடியார்' எனவும், 'பூங்கோதை' எனவும் 'கடாயினன்' எனவும் அலகிடின் ஆசிரியத்தளையும், கலித்தளையும் தட்டு வெள்ளைத் தன்மை குன்றுமாதலால் 'கடியார்பூ' என்று புளிமாங்காயாகவும் 'கோதை' என்று தேமாவாகவும், 'கடாயினன்' என்று கருவிளமாகவும் அலகிட்டுக் கொள்க.

குறள் வெண்பா

*"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

இதனை, 'நிலமிசை' எனவும், 'நீடு' எனவும், 'வாழ்வார்' எனவும் அலகிடின் ஆசிரியத்தளை தட்டு, வெண்பாவின் இறுதிக்கண் அசைச்சீர் ஆதற்பாலது இயற்சீராய், 'நிரையில் வெள்ளைக் கோரசைச்சீரு மொளிசேர் பிறப்பு மொண்காசு மிற்ற சீருடைச் சிந்தடியே முடிவாம்' என்னும் இலக்கணத் தோடு மாறுபடுமாதலின் 'நிலமிசை' எனக் கருவிளமாகவும், 'நீடுவாழ்' எனக் கூவிளமாகவும், 'வார்' என நாள் என்னும் நேரசைச்சீராகவும் அலகிட்டுக் கொள்க.

* திருக்குறள், கடவுள் வாழ்த்து - ௩.

நேரிசை வெண்பா

"பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் பண்டுதாங் கொண்டவர்க்கும்
ஊடுநர்க்குங் கூடுநர்க்கு மொத்தலால்—நீடுநீர்
நல்வய லூர நறுஞ்சாந் தணியகலம்
புல்லலின் ஊட லினிது."

இதனுள் டுகர நகரங்கள் பிரிந்திசைத்தன வாயினும் இரண்டினையுங் கூட்டி நிரையசையாக அலகிடச் சீரும், தளையுஞ் சிதைவாவாம். அல்லாவிடின் நாலசைச்சீராய் வண்ணமழிந்து ஓசையுண்ணாது கெடும். பிறவு மன்ன.

வாழ்த்து இருவகைப்படும்; மெய்வாழ்த்தும், இருபுற வாழ்த்தும் என.

வருமாறு :

நேரிசை வெண்பா

*"கார்நறு நீலங் கடிக்கயத்து வைகலும்
நீர்நிலை நின்ற பயன்கொலோ—கூர்நுனைவேல்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியால்
கொண்டிருக்கப் பெற்ற குணம்."

இது மெய்வாழ்த்து.

நேரிசை வெண்பா

"பண்டு மொருகால்தன் பைந்தொடியைக் கோட்பட்டு
வெங்கடத்து வில்லேற்றிக் கொண்டுழந்தான்—தென்
பூமான் திருமகளுக் கின்னும் புலம்புமால் [களந்தைப்
வாமான்தேர் வையையார் கோ."

இஃது இருபுறவாழ்த்து.

வசையும் இருவகைப்படும்; மெய்வசையும், இருபுற வசையும் என.

வருமாறு :

நேரிசை வெண்பா

"தந்தை இலச்சுமடன் [1]தாய்தொழிலி தான் பார்ப்பான்
எந்தைக் கிதெங்ஙனம் பட்டதுகொல்—மூந்தை
அவியுணவி னூர்தெரியின் ஆவதாங் கொல்லோ
கவிகண்ண னூர்தம் பிறப்பு."

---

(பாடம்) 1. தாய்தோழி.
* முத்தொள்.

இது மெய்வசை.

நேரிசை வெண்பா

"படையொடு போகாது நின்றெறிந்தான் என்றுங்
கொடையொடு நல்லார்கண் தாழ்ந்தான்—படையொடு
பாடி வழங்குந் தெருவெல்லாந் தான்சென்று
கோடி வழங்கு மகன்."

இஃது இருபுறவசை.

இனி வனப்பு எட்டுவகைப்படும்; அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என.

என்னை,

"அம்மை அழகு தொன்மை தோல்விருந்
தியைபு புலனிழை பெனவனப் பெட்டே"

என்றாராகலின்.

அவற்றுள் 'அம்மை' யாவது சிலவாய், மெல்லியவாய சொற்களால், ஒள்ளியவாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லிபது.

என்னை,

*"சின்மென் மொழியால் சீர்புனைந் தியாப்பின்
அம்மை தானே யடிநிமிர் பின்றே"

என்றாராகலின்.

வருமாறு:

குறள் வெண்பா

†"அறிவினுள் ஆதவ தன்டோ பிறிதின்நோய்
தன்நோய்போற் போற்றாக் கடை."

அழகு என்பது செய்யுட் சொல்லாகிய திரிசொற்களான் ஓசை இனியதாகப் புணர்க்கப்பட்டது.

என்னை,

---

* தொல், பொருள், செய்யுளியல் - ௨௩௩.

† திருக்குறள், அறன் வலி - ௭.

*"செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே"

என்றாராகலின்.

வருமாறு:

நேரிசை யாசிரியப்பா

"துணியிரும் பௌவங் குறைய வாங்கி
அணிகிள ரடுக்கல் முற்றிய வெழிலி
காலொடு மயங்கிய கனையிருள் நடுநாள்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
நெடுவரை மருங்கிற் [1]பாம்பென இழிதரும்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே."

'தோன்மை' என்பது பழையதாகி நிகழ்ந்த பெற்றி யுரைக்கப்படுவது.

என்னை,

†"தோன்மை தானே
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே"

என்றாராகலின்.

வருமாறு:

'செறிதொடி யுவகைகளாய் செஞ்சுடர்த் தெறு கதிர்ச்செல்வன் செய்வதொர்' என்பதாடம், மாபாரதம் காந்தம் போல்வனவுங் கொள்க.

'தோல்' என்பது - இழும் என்னும் மெல்லியவாகிய சொற்களாய் விழுமி பவாய்க் கிடப்பனவும், எல்லாச் சொற்களானும் பலவடியாய்க் கிடப்பனவும் என இருதிறத்தனவாம்.

என்னை,

‡"இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்த மொழியான் அடிநிமிர்ந் தொழுகினுந்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்"

என்றாராகலின்.

---

(பாடம்) 1. பரப்பலெங், பரபபுட.
* தொல்காப்பியம் – பொருள், செய்யுளியல். உகூ௪.
† " " " உகூ௫.
‡ " " " உகூ௬.

வருமாறு :

நிலைமண்டில ஆசிரியப்பா

"பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துனிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி யெளிதினிற் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நன்மை யிலலைத் தீமை யில்லை
செய்வோ ரில்லைச் செய்பொரு ளில்லை
அறிவோ ரியாரஃ திறுவுழி யிறுகென."

இது மார்க்கண்டேயனார் காஞ்சி. இஃது இழுமென் மொழியால் விழுமியது நுவன்றது.

*"திருமழை தலைஇய—சென்றவாறே."

இது பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகியது.

'விருந்து' என்பது, புதியவற்றின் மேற்று. அஃது இப்பொழுதுள்ளாரைப் பாடுவது:

என்னை,

†"விருந்தே தானும்
புதுவது கிளந்த யாப்பின் மேற்றே"

என்றாராகலின்.

அது வந்தவழிக் கண்டுகொள்க.

'இயைபு' என்பது ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாக வந்த பாட்டு.

என்னை,

‡"ஞகாரை முதலா ளகாரை யீற்றுப்
புள்ளி யிறுதி இயைபெனப் படுமே"

என்றாராகலின். அவையும் வந்தவழிக் கண்டுகொள்க.

'புலன்' என்பது இயற்சொல்லாற் பொருடோன்றச் சொல்லப்படுவது.

---

* இச் செய்யுளை கூஉ ஆவது பக்கத்திற் காண்க.

† தொல்காப்பியம், பொருள், செய்யுளியல் - உகூஎ.

‡ " , " உகூஅ.

என்னை,

[1] *"தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்
புலனென மொழிப புலனுணர்ந் தோரே"

என்றாராகலின்.

வருமாறு:

நேரிசை யாசிரியப்பா

"பார்க்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்ச்செறி முரசின் முழங்கி பொன்னார்
மலைமுற் றின்றே வயங்குகதுளி சிதறிச்
சென்றவ டிருமுகங் காணக் கடுந்தேர்
இன்றுசெலக் கடவுமதி பாக வுதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
இரும்பிடி யுழையப தங்கப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே."

'இழைபு' என்பது வல்லொற் றிபாதுந் நீண்டாது செய்யுளிய லுடையாரால் எழுத்தெண்ணி அடிவகுக்கப் பட்ட குறளடி முதலாகப் பதினேழ் நிலதது ஐந்தடியும் முறையானே யுடைத்தாய் ஓங்கிய சொற்களால் வருவது.

என்னை,

†"ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா ஐந்தடி [2]காறும்
ஓங்கிய மொழியா னோங்கன மொழுகின்
இழைபி னிலக்கணம் இயைந்த தாகும்."

செய்யுளிய லுடையார் நாற்சீரடி தன்னையே நான் கெழுத்து முதலா ஆறெழுத்தினகாறும் உயர்ந்த ‡மூன் றடியுங் குறளடி என்றும்,

(பாடம்) 1. சேரி...கிளந்தோதல். 2. ஒப்பித்து.

* தொல்காப்பியம், பொருள், செய்யுளியல் - உகக.

† தொல், பொருள், செய்யுளியல் - உசo.

‡ ஈண்டு 'மூன்றடி' என்றது நான்கெழுத்தடியையும், ஐந் தெழுத்தடியையும், ஆறெழுத்தடியையும் எனக் கொள்க. இவ் வாறே மற்றவற்றையுங்கொண்டு பதினேழ் நிலமாமா றுணர்க.

ஏழெழுத்து முதலா ஒன்பதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியுஞ சிந்தடி என்றும்.

பத்தெழுத்து முதலாப் பதினன்கெழுத்தின்காறும் உயர்ந்த ஐந்தடியும் அளவடி என்றும்

பதினைந்தெழுத்து முதலாப் பதினேழெழுத்தின் காறும் உயர்ந்த மூன்றடியும் நெடிலடி என்றும்,

பதினெட்டெழுத்து முதலா இருபதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் கழிநெடிலடி என்றும்,

இருபதெழுத்தின் மிக்கநாற்சீரடிப்பா இல்லை என்றும் வேண்டுவர்.

அவ்வெழுத் தெண்ணுமிடத்து குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஆய்தமும, ஒற்றும் ஒழித்து நின்ற உயிரும், உயிர்மெய்யுங் கூட்டி எண்ணப்படும்.

என்னை,

நேரிசை வெண்பா

"குற்றிகரங் குற்றுகர மென்றிரண்டு மாய்தமும்
ஒற்று மென வொருநான் கொழித்துக் - கற்றோர்
உயிரு முயிர்மெய்யு மோதினார் கொள்வச்
செயிர்தீர்ந்த செய்யு ளடிக்கு."

*"நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே."

†"நாலெழுத்து முதலா வாறெழுத் தெல்லை
யேறிய நிலத்த குறளடி யெனப."

"ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே
யீரெழுத் தேற்றம் அவ்வழி யான"

"பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே
மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே
யீரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப."

---

* தொல். பொருள். செய்யுளியல் - ௩௧.

† ,, ,, ௩௰, ௩௪, ௩௫, ௩௮.

*"மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத் து மிகுதலு மிவட்பெறு மென்ப"

நேரிசை வெண்பா

"ஈரிரண்டும் ஓரேழும் ஈரைந்து மூவைந்தும்
பாரியன்ற நாற்சீர் பதினெட்டும்—ஓரா
விளையும் பதினேழ் நிலத்துக் குறள்சிந்
தளவு கழிநெடிலோ டைந்து"

என்றாராகலின்.

வருமாறு:

நேரிசை யாசிரியப்பா

†"போர்ந்து போர்ந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நொந்து
வண்டு சூழ விண்டு வீங்கி
நீர்வாய் கொண்டு நீடு நீலம்
ஊர்வா யூதை வீச வூர்வாய்
மதியேர் வண்டோ டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னெல் லூர
அமையேர் மென்றோ ளாயரி மழைக்கண்
இணையீ ரோதி யேந்திள வனமுலை
இரும்பமல் மலரிடை பெழுந்த மாவின்
நறுங்தழை துயல்வருஉஞ் செறிந்தேந் தல்குல்
அணிநடை யசைஇய வரியமை சிலம்பின்
பணிவருள் வணர்குழல் வளரிளம் பிறைநுதல்
ஒளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளிரொடு
களிர் முழவு முழங்கிய வணிநிலவு மணிநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புகவு நறுந்தொடை
கலனளவு கலனளவு கலனளவு கலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்பவஃ
தொருநீ மறைப்பி னொழிகுவ தன்றே."

இனிப் 'பொருள்கோள்' எனபது உம்மைத் தொகை: பொருளும், பொருள்கோளும் என.

குறள்வெண்பா

‡"அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்."

---

* தொல். பொருள். செய்யுளியல்-௩௪.

† இச் செய்யுளின் பாடம் பலவாறு வேறுபட்டுளது.

‡ திருக்குறள், புலான் மறுத்தல்-௪.

இதனுள் அருளும், அருளல்லதும் எனற்பாலது 'அருளல்லது' என உம்மைதொக்கதாகக் கொள்க.

அவற்றுள், பொருளாவன *குறிஞ்சி, கைக்கிளை முதலிய அகமும், அகப்புறமும்.

†வெட்சி பாடாண்பாட்டு முதலிய புறமும் புறப்புறமு மாம். அவற்றை அவ்விலக்கணங் கூறிய நூல்களிற் கண்டு கொள்க.

இனிப் பொருள்கோள் ஒன்பது வகைப்படும் :—

நிரனிறைமொழிமாற்றும் சுண்ணமொழிமாற்றும், அடி மறிமொழிமாற்றும், அடிமொழிமாற்றும், பூட்டுவிற்பொருள் கோளும், புனல்யாற்றுப் பொருள்கோளும், அளைமறிபாப்புப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள்கோளும் என.

இவற்றுள், நிரனிறை இரண்டு வகைப்படும்; பெயர் நிரனிறையும் வினைநிரனிறையும் என. அவற்றுள், பெயர் நிரனிறை வருமாறு :

இன்னிசை வெண்பா

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்த முகம்வாய் முறுவல்
பிடிபிணை யன்னு நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்."

இனி 'வினை நிரனிறை' வருமாறு :

---

* குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்தும் அகம் எனவும்,

கைக்கிளை, பெருந்திணை என்னும் இரண்டும் அகப்புறம் எனவும்,

† வெட்சி, கரந்தை, வஞ்சி. காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை என்னும் ஏழும் புறம் எனவும்,

வாகை, பாடாண், பொதுவியல் என்னும் மூன்றும் புறப்புறம் எனவும் அறிக.

### நேரிசை வெண்பா

"காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியான்
மண்ணைமிர்தம் பங்கையர்தோள் மாற்றாரை யேற்றூர்க்கு
நுண்ணிய வாய பொருள்"

எனவும்,

### இன்னிசை வெண்பா

"அடல்வே லமர்நோக்கி நின்முகங் கண்டே
உடலு முடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்குள்
கடலுங் கனையிருளும் ஆம்பலும் பாம்புந்
தடமதிய மாமென்று தாம்"

எனவுங் கண்டுகொள்க.

இனி, 'முறை நிரனிறை, எதிர் நிரனிறை, மயக்க நிரனிறை மிகைபெண் ணிரனிறை, குறைபெண் ணிரனிறை' என்று வேண்டுவாரு முளர்.

அவற்றுட் 'சில வருமாறு':

### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

"கூற்றுவனை வில்மதனை யரக்கர் கோவைக்
கூனிலவைக் குஞ்சரத்தை இஞ்சி மூன்றை
ஏற்றுலகின் புறவுருவ மாள்த் தோள்கள்
இறவெறிப்ப விமையப்பெண் வெருவ வேவக்
காற்சாமுழிலால் நயனத்தால் விரலாற் கற்றைக்
கதிர்முடியாற் கரதலத்தாற் கணையாற் பின்னும்
ஊற்றமிய உதைத்தெரித்து நெரித்துச் சுடி
உரித்தோததான் அவனெம்மை யுடைய கோவே"

எனவும்,

### நேரிசை வெண்பா

"காதம குக விநுநிதுனி கண்புருவஞ்
சேதமுகங் கொங்கை திரண்டவாய்—ஓதக்
கரும்பார் மழபாடிக் காங்கேயன் பட்டந்
தரும்பார் குழலளகத் தார்க்கு"

எனவுங் கண்டுகொள்க.

இனிச், 'சுண்ண மொழிமாற்று' வருமாறு :

இன்னிசைச் சிந்தியல் வெண்பா

"சுரை ஆழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை."

இதனுள், 'சுரை' என்பதனோடு 'மிதப்ப' என்பது பொருள் கொள்ளவும் 'அம்மி' என்பதனோடு 'ஆழ' என்பது பொருள் கொள்ளவும், 'யானை' என்பதனோடு 'நிலை' என்பது பொருள் கொள்ளவும், 'முயல்' என்பதனோடு 'நீத்து' என்பது பொருள் கொள்ளவும், வந்தமையால் சுண்ண மொழிமாற்று.

இது 'அடிமறி மொழிமாற்று' வருமாறு :

*"சூரல் பம்பிய—நீவர லாறே"

என்னும் ஆசிரியம், வேண்டிற்றோர் அடியான் முதலாகச் சொன்னாலும் ஓசையும், பொருளும் பிழைபாது வந்தமையால் அடிமறி மொழிமாற்று.

இனி 'அடிமொழிமாற்று' வருமாறு :

குறள் வெண்பா

"ஆலத்து மேல குவளை குளத்துள
வாலின் நெடிய குரங்கு"

என்பதனுள், 'ஆலத்து, மேல குரங்கு, குளத்துள குவளை' என்று இரண்டடியின் மொழிமாற்றிப் பொருள் கொண்டமையால், அடிமொழிமாற்று.

இனி 'பூட்டுவிற் பொருள்கோள்' வருமாறு ;

நேரிசை வெண்பா

"திறந்திடுமின் தீயவை பிற்காண்டு மாதர்
இறக்கு படிற் பெரிதாம் ஏதம்—உறந்தையர்கோன்
தண்ணார மார்பின் தமிழர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு"

---

* இச்செய்யுளை ௧0 ஆவது பக்கத்திற் காண்க.

இதனுள், 'திறந்திடுமின்' என்பதனோடு 'கதவு' என்பது நோக்குடையதாய்ப் பொருள் கொண்டமையால் பூட்டுவிற் பொருள்கோள்.

இனிப் 'புனல்யாற்றுப் பொருள்கோள்' வருமாறு:

இன்னிசை வெண்பா

*"அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்
சொலற்பால அல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்."

இஃது அடிதோறும் பொருளற்று வந்தமையால் புனல்யாற்றுப் பொருள்கோள்.

இனி 'அளைமறிபாப்புப் பொருள்கோள்' வருமாறு:

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

"தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித்
தளர்வர் தாமுஞ்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து நாற்கதியில்
சுழல்வார் தாமும்
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே
முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி
முயலா தாரே."

இதனுள், 'வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறி முன்னி முயலாதார்' என்னும் இறுதிச்சொல் இடையும், முதலுஞ் சென்று பொருள் கொண்டமையால், அளைமறி பாப்புப் பொருள்கோள்.

இனித் 'தாப்பிசைப் பொருள்கோள்' வருமாறு:

குறள் வெண்பா

†"உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு"

---

* நான்மணிக்: ௨அ. † திருக்குறள். புலான்மறுத்தல்-௫.

இதனுள், 'ஊனை உண்ணாமை உள்ள துயிர்நிலை' எனவும், 'ஊனையுண்ண அண்ணாத்தல் செய்யா தளறு' எனவும் நடுநின்ற 'ஊன்' என்னுஞ் சொல் முதலும், இறுதியுஞ் சென்று பொருள் கொண்டமையால், தாப்பிசைப் பொருள்கோள்.

இனிக் 'கொண்டுகூட்டுப் பொருள்கோள்' வருமாறு:

இன்னிசை வெண்பா

"தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்."

இதனுள், 'அஞ்சனத்தன்ன பைங்கூந்தல்' எனவும் 'தெங்கக்காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டையுடைத்தன்னபசலை' எனவுஞ் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டமையால் கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

நேரிசை வெண்பா

"ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேல் தண்ணுமை—காரி
விறல்முள்ளூர் வேங்கைவீ தாநாணுந் தோளாள்
திறனுள்ளு முள்ள தலர்."

இதனுள், 'தண்ணுமை நாணுந்தோள்' எனவும் 'விறல் வேங்கைவீ' எனவும், 'அவர் ஆரியமன்னர் பறையினெழுந்தியம்பும்' எனவுஞ் சொற்களைக் கூட்டிப் பொருள் கொண்டமையால் இதுவுங் கொண்டு கூட்டுப் பொருள்கோள். பிறவுமன்ன.

இனிக் 'குறிப்பிசை' என்பது: எழுத்தல் ஓசையான் வந்த முற்றும், வினையும், இலதையும், அநுகரணமும் முதலாக உடையன செய்யுளகத்து வந்தால் அவை செய்யுள் நடையழியாமல் (அசையும், சீரும், அடியும், தொடையும் பிழையாமல்) அலகிட்டு வழங்கப்படும் எ-று.

## நேரிசை வெண்பா

வருமாறு :

"மன் நலங் கொன்றை மலர்மிலைந் துஃகுவக்
கென்று திரியும் இடைமகனே — சென்று
மறிமாட்டை உண்ணுமை வன்கையால் வல்லே
அறியாயோ அண்ணுக்கு மாறு."

ஒழிந்தனவும் இடைக்காடனர் பாடிய *"ஊசிமுறி" யுட் கண்டுகொள்க.

என்னை,

"எழுத்து விசையை அசைகொடு சேர்தலை
நிரைக்கவும் படுமென நேர்ந்திசி னோரே"

என்றாராகலின்.

இனி, 'ஒப்பு' என்பது மேற்சீரும், தளையும், அடியும், வரையறுக்கப்பட்ட பாவும், பாவினமுஞ் சொன்ன பெற்றியில் திரிந்தும், மிக்தும், குறைந்தும் வந்தால், அவை ஒருபுடையொப்புமை நோக்கி ஒழிந்த செய்யுட்களின்பாற் படுத்து வழங்கப்படும் ; எ - று.

வருமாறு :

"கோழியுங் கூவின குக்கில் குரல்காட்டுந்
தாழிபள் நீலத் தடங்கணீர் போதுமினோ
ஆழிசூழ் வையத்தெம் அண்ண லடியேத்திக்
கூழை நனையக் குடைந்துங் குளிர்புனல்
ஊழியும் மன்னுவா மென்றேலோ ரெம்பாவாய்."

மேல், நாற்சீர் நான்கடியாய் வருவது கலிவிருத்தம் என்று வரையறுத்துச் சொன்னார். இஃது ஐந்தடியான் வந்ததாயினும் ஒருபுடை யொப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கப்படும் எனக் கொள்க. இதனைத் தரவு கொச்சக மெனினும் இழுக்காது.

"சுற்றுநீர் சூழ்கிடங்கிற்
பொற்றாமரைப் பூம்படப்பைத் தெண்ணீர்
நல்வய லூரன் கேண்மை
யல்லிருங் கூந்தற் கலரா னவே."

---

* இஃது இலக்கண விளக்கத்துள் "ஆசிரியமுறி" என எழுதப் பட்டிருக்கின்றது.

மேல் வஞ்சிப்பாவிற்கு மூன்றடிச் சிறுமை என் றெடுத்தோதினர். இஃது இரண்டடிச் சிறுமையான் வந்த தாயினும் ஒருபுடை யொப்புமை நோக்கி வஞ்சிப் பாவின் பாற்படுத்தே வழங்கப்படும் எனக் கொள்க. பிறவும், புராண கவிஞராற் பாடப்பட்ட இலக்கியங்களும் இவ் விலக் கணத்தான் ஒருபுடை யொப்புமை நோக்கி, ஒன்றன்பாற் படுத்து வழங்கப்படும் எனக் கொள்க.

'ஒப்பும்' என்ற உம்மையால் வண்ணமும், புனைந் துரையும், அடியின்றி நடப்பனவும் ஆமா றுணர்ந்து கொள்க.

அவற்றுள், வண்ணம் நூறு திறத்தனவாம். அவை சொல்லுமாறு :—

தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம் என்னும் இவ் வைந்தினையு முதல் வைத்து,

அகவல் வண்ணம், ஒழுகிசை வண்ணம், வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம் என்னும் இந்நான்கினையும் இடை வைத்து, குறில் வண்ணம், நெடில் வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இடையிசை வண்ணம் என்னும் இவ்வைந்தினையுங் கடைவைத்துக் கூட்டி உறழ நூறு வண்ணமும் பிறக்கும்.

என்னை,

கட்டளைக்கலித்துறை

*"தூங்கேந் தடுக்கல் பிரிதல் மயங்கிசை வைத்துப்பின்னும்
பாங்கே அகவ லொழுகல் வலிமெலிப் பாற்படுத்திட்
டாங்கே குறினெடில் வல்லின மெல்லின மோடிடையைத்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ண நூறுந் தலைப்படுமே."

* இச் செய்யுள், நூலாசிரியர் இயற்றியதே என்பது, நூற் பொருள்களைத் தொகுத்துக் கூறிய செய்யுளில் 'ஒழுகிய வண்ணங்களூற'' என்றதனாலும், ஒழிபியற்காரிகை முத லினைப் புணர்த்திய செய்யுளில், "சீரிய தூங்கேந்தடுக்கு" என்றதனாலும் தெரிகின்றது.

அவற்றின் விரியாவன :

i. தூங்கிசை வண்ணம்

குறிலகவற் றூங்கிசை வண்ணம், நெடிலகவற்றூங் கிசை வண்ணம், வலியகவற்றூங்கிசை வண்ணம், மெலியக வற்றூங்கிசை வண்ணம், இடையகவற் றூங்கிசை வண்ணம் எனவும்,

குறிலொழுகற் றூங்கிசை வண்ணம், நெடிலொழுகற் றூங்கிசை வண்ணம், வலியொழுகற் றூங்கிசை வண்ணம், மெலியொழுகற் றூங்கிசை வண்ணம், இடை யொழுகற் றூங்கிசை வண்ணம எனவும்,

குறில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலி வல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலி வல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடை வல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும்,

குறில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலி மெல்லிசைத் தூங் கிசை வண்ணம், மெலி மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடை மெல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும் தூங் கிசை வண்ணம் ௨௦.

ii. ஏந்திசை வண்ணம்

குறிலகவ லேந்திசை வண்ணம், நெடிலகவ லேந்திசை வண்ணம், வலியகவ லேந்திசை வண்ணம், மெலியகவ லேந்திசை வண்ணம், இடையகவ லேந்திசை வண்ணம், எனவும்,

குறிலொழுக லேந்திசை வண்ணம், நெடிலொழுக லேந்திசை வண்ணம், வலியொழுக லேந்திசை வண்ணம், மெலியொழுக லேந்திசை வண்ணம், இடையொழுக லேந்திசை வண்ணம எனவும்,

குறில் வல்லிசை யேந்திசை வண்ணம், நெடில் வல்லிசை யேந்திசை வண்ணம், வலி வல்லிசை யேந்திசை

வண்ணம், மெலி வல்லிசை யேந்திசை வண்ணம், இடை வல்லிசை யேந்திசை வண்ணம் எனவும்,

குறில் மெல்லிசை யேந்திசை வண்ணம், நெடில் மெல்லிசை யேந்திசை வண்ணம், வலி மெல்லிசை யேந்திசை வண்ணம், மெலி மெல்லிசை யேந்திசை வண்ணம், இடை மெல்லிசை யேந்திசை வண்ணம் எனவும்—ஏந்திசை வண்ணம் ௨௦.

### iii. அடுக்கிசை வண்ணம்

குறிலகவல் அடுக்கிசை வண்ணம், நெடிலகவல் அடுக்கிசை வண்ணம், வலியகவ லடுக்கிசை வண்ணம், மெலியகவ லடுக்கிசை வண்ணம், இடையகவ லடுக்கிசை வண்ணம் எனவும்,

குறிலொழுகல் அடுக்கிசை வண்ணம், நெடிலொழுக லடுக்கிசை வண்ணம், வலியொழுகல் அடுக்கிசை வண்ணம், மெலியொழுகல் அடுக்கிசை வண்ணம், இடையொழுகல் அடுக்கிசை வண்ணம எனவும்,

குறில் வல்லிசை அடுக்கிசை வண்ணம். நெடில் வல்லிசை யடுக்கிசை வண்ணம், வலி வல்லிசை அடுக்கிசை வண்ணம், மெலி வல்லிசை அடுக்கிசை வண்ணம், இடை வல்லிசை அடுக்கிசை வண்ணம் எனவும்,

குறில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம், நெடில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம், வலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம், மெலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம், இடை மெல்லிசை அடுக்கிசை வணணம் எனவும்—அடுக்கிசை வண்ணம் ௨௦.

### vi. பிரிந்திசை வண்ணம்

குறிலகவற் பிரிந்திசை வண்ணம், நெடிலகவற் பிரிந்திசை வண்ணம், வலியகவற் பிரிந்திசை வணணம், மெலியகவற் பிரிந்திசை வண்ணம், இடையகவற் பிரிந்திசை வண்ணம் எனவும்,

குறிலொழுகற் பிரிந்திசை வண்ணம் நெடிலொழுகற் பிரிந்திசை வண்ணம், வலியொழுகற் பிரிந்திசை வண்ணம்

மெலியொழுகற் பிரிந்திசை வண்ணம், இடையொழுகற் பிரிந்திசை வண்ணம் எனவும்,

குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம, வலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை வல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும்,

குறில் மெல்லிசை பிரிந்திசை வண்ணம், நெடில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம். மெலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும்—பிரிந்திசை வண்ணம் உ௦.

## v. மயங்கிசை வண்ணம்

குறிலகவல் மயங்கிசை வண்ணம், நெடிலகவல் மயங்கிசை வண்ணம், வலியகவல் மயங்கிசை வண்ணம், மெலியகவல் மயங்கிசை வண்ணம், இடையகவல் மயங்கிசை வண்ணம் எனவும்,

குறிலொழுகல் மயங்கிசை வண்ணம், நெடிலொழுகல் மயங்கிசை வண்ணம், வலியொழுகல் மயங்கிசை வண்ணம், மெலியொழுகல் மயங்கிசை வண்ணம், இடையொழுகல் மயங்கிசை வண்ணம் எனவும்.

குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம். நெடில் வல்லிசை மயங்கிசை வண்ணம், வலி வல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி வல்லிசை மயங்கிசை வண்ணம, இடை வல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும்.

குறில் மெல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசை மயங்கிசை வண்ணம், வலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், இடை மெல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும—மயங்கிசை வண்ணம் உ௦.

ஆக வண்ணம் ரு௰.

இவ்வாறு விரித்துரைத்தார் அவிநயனார்.

இனித் தொல்காப்பியர் முதலிய ஒருசார் ஆசிரியர் வண்ணம் இருபது என்பர்.

என்னை,

*"வண்ணந் தாமே நாலைந் தென்ப."

†"அவைதாம்,

பாஅ வண்ணந் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ணம்
இயைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம்
ஒழுகு வண்ண மொரூஉ வண்ணம்
எண்ணு வண்ணம் அகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ணம் ஏந்தல் வண்ணம்
உருட்டு வண்ணம் முடுகு வண்ணமென்
றாங்கவை யென்ப அறிந்திசி னோரே."

"அவற்றுள்,
பாஅ வண்ணஞ் சொற்சீர்த் தாகி
நூற்பாற் பயிலு நோக்கிற் றென்ப"

"தாஅ வண்ணம்
இடையிட்டு வந்த வெதுகைத் தாகும்"

"வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே"

"மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே"

"இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே"

"அளபெடை வண்ண மளபெடை பயிலும்"

"நெடுஞ்சீர் வண்ண நெட்டெழுத்துப் பயிலும்"

"குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்"

"சித்திர வண்ணங் குறியவு நெடியவும்
ஒத்துநேர்ந் தடுக்கிய வியற்கைத் தென்ப"

---

*, † இவை தொல், பொருள், செய்யுளியல் - ௨௧௨, ௨௧௩.

‡ இந் நூற்பாக்களில் சிற்சில பாடவேற்றுமைகள் உள்ளன. இவை முறையே தொல். பொருள், செய்யுளியல் ௨௧௪ முதல் ௨௩௧ வரையிலுள்ள சூத்திரங்கள்.

"நலிபு வண்ண மாய்தம் பயிலும்"

"அகப்பாட்டு வண்ணம்
முடியா ததுபோன்று முடிந்ததன் மேற்றே"

"புறப்பாட்டு வண்ணம்
முடிந்தது போன்று முடியா தாகும்,"

"ஒழுகு வண்ண மோசையி னொழுகும்"

"ஒருஉ வண்ணம் *ஒரீஇத் தொடுக்கும்"

"என்னு வண்ண மெண்ணுப் பயிலும்"

"அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்"

"தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்"

"ஏந்தல் வண்ணஞ்
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்"

† "உருட்டு வண்ண மராகந் தொடுக்கும்"

‡ "முடுகு வண்ண மடியிறந் தொழுகும்."

இவையெல்லாந் தொல்காப்பியத்துள்ளும், யாப்பருங்கல விருத்தியுள்ளுங் கண்டுகொள்க.

இனிப் புனைந்துரை இரண்டு வகைப்படும்; பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதலும், சிறியதனைப் பெருக்கிச் சொல்லுதலும் என.

§ "உரைக்கப் படும்பொருட் கொத்தன வெல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை யாகும்"

என்றாராகலின்.

---

* 'ஒருஉத் தொடை தொடுக்கும்' என்றும் பாடம். (இஃது இளம்பூரணர் கொண்ட பாடம்.)

†, ‡ தொல். பொருள், செய்யுளியல்-௨௨௨, ௨௨௩.

§ இச் சூத்திரம் இலக்கண விளக்கத்துள்,

"உரைக்கப் படும்பொருட் கொத்தவை யெல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை யவைதாம்
பெரிதினைச் சுருக்கலுஞ் சிறிதினைப் பெருக்கலு
மெனவிரண் டாகு மென்மனார் புலவர்"

என்றிருக்கிறது.

வருமாறு :

நேரிசை வெண்பா

"அடையார் பூஞ்சோலைக் கல்குலுந் தோன்றும்
புடையார் வனமுலையுந் தோன்றும் - இடையாதுங்
கண்டுகொள்ளா தாயினுங் காரிகை நீர்மையாட்
குண்டாக வேண்டு நுசுப்பு."

இது பெரியதனைச் சுருக்கிற்று.

"அவாப்போ லகன்றதக லல்குன்மேற் சான்றோர்
உசாப்போல வுண்டே மருங்குல் - உசாவினைப்
பேதைக் குரைப்பான் பிழைப்பிற் பெருகினவே
கோதைக்கோ மான்மகள் குயம்."

இது சிறியதனைப் பெருக்கிற்று.

"பொன்மலி கச்சி பூமலி கூடல்
மாரி யீகை பணியாடம்"

என்னுந் தொடக்கத்தனவும் அது.

இனி அடியின்றி நடப்பன :—பாட்டுரையும், நூலும், மந்திரமும், *பிசியும், முதுசொல்லும், அங்கதமும், வாழ்த்தும் என்னுமிவை ஓரடியானும், பலவடியானும் வரப்பெறும்.

என்னை,

"செய்யிர் நீர் செய்யு டெரியுங் காலை
அடியி னிட்டத் தழகுபெற் றியலும்"

"ஓரடி யானு மொரோவிடத் தியலும்"

"அவைதாம்,
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் லங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆதந வென்ப வறிந்திசி னோரே"

என்றாராகலின்.

இனி, நாலாவது மூவகைத்தாய், மூவரினடைபெற்று நால்வகைப் பயத்ததாய், எழுவகை ஆசிரிய மதவிகற்

* 'சந்தோபிசிதமும்' என்றும் பாடம்.

பத்ததாய்ப், பத்துவகைக் குற்றந் தீர்ந்து, பத்துவகைக் குணத்ததாய்ப், பதின்மூன்று வகையான உரை பெற்று, முப்பத்திரண்டு தந்திர உத்தியோடும் புணர்ந்தது எனக் கொள்க.

அவற்றுள் மூவகையாவன — தந்திரம், சூத்திரம் விருத்தி என இவை.

முதனூல், வழிநூல், சார்புநூல் எனினும் அமையும். மூவரினடைபெறுதல் என்பது—அவை மூன்றும் நடாத்தும் ஆசிரியர் மூவர் எனக் கொள்க.

நால்வகைப் பயன் ஆவன :—அறம், பொருள், இன்பம், வீடு என இவை.

ஏழுவகை ஆசிரிய மதவிகற்ப மாவன :— உடனபடல், மறுத்தல, பிறர்தம் மதமேற்கொண்டு களைதல், தா அனுட்டித் தனது நிறுத்தல், இருவர் மாறுகோ ளொருதலை துணிதல், பிறர்நூற் குற்றங்காட்டல், பிறிதொடுபடா அன் தன்மதங் கொளல என்னும் இவை.

பத்துவகைக் குற்றமாவன :—குன்றக்கூறல், மிகை படக்கூறல், கூறியது கூறல், மாறுகொளக் கூறல், வழூஉச் சொற் புணர்த்தல், மயங்கவைத்தல், வெற்றெனத் தொடுத் தல், மற்றொன்று விரித்தல், சென்று தேய்ந்திறுதல், நின்று பயனின்மை என இவை.

பத்துவகைக் குணமாவன : சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க்கினிமை, நன்மொழி புணர்த் தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைப்பு, உலகமலையாமை, விழுமியது பயத்தல், விளங்குதாரணத்த தாகுதல் என இவை.

பதின்மூன்று வகை உரையாவன :—சூத்திரந் தோற் றல், சொல வகுத்தல், சொற்பொருளுரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங் காட்டல், உதாரணங் காட்டல், ஆசிரியவசனங் காட்டல், அதிகார வரவு காட்டல், தொகுத்து முடித்தல், விரித்துக் காட்டல், துணிவு கூறல், பயனொடு புணர்த்தல் என இவை.

முப்பத்திரண்டு தந்திர உத்தியாவன :— நுதலிப் புகுதல், ஒத்துமுறை வைப்பு, தொகுத்துச் சுட்டல், வகுத்துக் காட்டல், முடித்துக் காட்டல், முடிவிடங் கூறல், தானெடுத்து மொழிதல், பிறன்கோட் கூறல், சொற்பொருள் விரித்தல், தொடர்ச்சொற் புணர்த்தல், இரட்டுற மொழிதல், ஏதுவின் முடித்தல், ஒப்பின் முடித்தல், மாட்டெறிந் தொழுகல், இறந்தது விலக்கல், எதிரது போற்றல், முன் மொழிந்து கோடல், பின்னது நிறுத்தல், விகற்பத்தின் முடித்தல், முடிந்தது முடித்தல், உரைத்து மென்றல், உரைத்தா மென்றல், ஒருதலை துணிதல், எடுத்துக் காட்டல், எடுத்தமொழியி னெய்த வைத்தல், இன்னதல்ல திதுவென மொழிதல், எஞ்சிய சொல்லி னெய்தக் கூறல், பிறநூன் முடிந்தது தானுடன் படுதல், தன்குறி வழக்க மிக வெடுத்துரைத்தல், சொல்லின் முடிவி னப்பொருள் முடித்தல், ஒன்றின முடித்தல், தன்னின முடித்தல், உய்த்துணர வைப்பு என இவை.

இவ்வாறு சொன்னார், பாடலனார் என்னும் ஆசிரியர் எனக்கொள்க. ஒருசார் ஆசிரியர் தந்திர உத்தி முப்பத் திரண்டினும் பல வென்பாரும் உளர்.

எழுத்துப் பதின்மூன் றிரண்டசை சீர்முப்ப தேழ்தளையைந்
திழுக்கி லடிதொடை நாற்பதின் மூன்றைந்து பாவினமூன்
றேழுக்கிய வண்ணங்கள் நூறேன்ப தோண்பொருள்
[கோளிருமூ
வழுக்கில் விகாரம் வனப்பெட் டியாப்புள் வகுத்தனவே.
(௩௮)

இ-கை. இந்நூல் வகுத்த பொருளெல்லாம் தொகுத் துணர்த்துதல் நுதலிற்று.

எழுத்து பதின்மூன்றாவன :—குற்றெழுத்து, நெட் டெழுத்து, உயிரெழுத்து, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஆய்தம், மெல்லெழுத்து, வல்லினம், மெல்லினம், இடையினம், உயிர்மெய், அளபெடை என இவை.

இரண்டசையாவன :—நேரசை, நிரையசை என இவை.

சீர்முப்பதாவன :—ஈரசைச்சீர் நான்கும், மூவசைச்சீர் எட்டும், நாலசைச்சீர் பதினாறும், ஓரசைச்சீர் இரண்டும் என இவை.

ஏழ் தளையாவன :—நேரொன் றாசிரியத்தளை, நிரையொன் றாசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை, வெண்சீர் வெண்டளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை, கலித்தளை என இவை.

ஐந்தடியாவன :—குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என இவை.

தொடை நாற்பத்து மூன்றாவன :—அடிமோனை, அடியெதுகை, அடிமுரண், அடியியைபு, அடியளபெடை, அந்தாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை எனக் கிடந்த தொடையும், இணை மோனை முதலாகிய முப்பத்தைந்து தொடை விகற்பமும் என இவை.

ஐந்து பாவாவன :—வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என இவை.

இன மூன்றாவன :—தாழிசை, துறை, விருத்தம் என இவை.

ஒழுக்கிய வண்ணம் நூறாவன :—குறிலகவற் றூங்கிசை வண்ண முதலாக மேற்காட்டிப்போந்தன.

ஒன்பதொண் பொருள்கோ ளாவன :— நிரனிறை, சுண்ணமொழிமாற்று முதலியன.

இருமூ வழுக்கில் விகாரமாவன :—வலிக்கும் வழி வலித்தல் முதலியன.

வனப்பெட்டாவன :—அம்மை முதலியன.

'யாப்புள் வகுத்தனவே' என்பது: யாப்பருங்கலக் காரிகை என்னும் யாப்பிற் சொல்லப்பட்டன ; எ - று. ஏகாரம் ஈற்றசை.

'ஐந் திழுக்கி லடி' என்று சிறப்பித்தவதனால், திணை வழுவும், பால் வழுவும், மரபுவழுவும், வினை வழுவும், விடை

வழுவும், காலவழுவும், இடவழுவும் என்று சொல்லப்பட்ட ஏழு வழுவும் படாமற் புணர்க்கப்படும் எனக்கொள்க.

'வழுக்கில் விகாரம்' என்று சிறப்பித்த வதனால்—எழுத்துக்குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக் குற்றம், அலங்காரக் குற்றம், ஆநந்தக் குற்றம் என்னும் ஆறு குற்றமும் படாமற் புணர்க்கப்படுஞ் செய்யுட்கள் எனக் கொள்க.

அவற்றுள், எழுத்துக்குற்ற முதலிய ஐந்தும் அவ்வவ் விலக்கண நூல்களால் அறிந்துகொள்க.

ஆநந்தக் குற்றமாவன :—எழுத்து முதலிய திரிதல்.

என்னை,

"எழுத்துநிலை திரிந்த எழுத்தா நந்தமும்
சொன்னிலை திரிந்த சொல்லா நந்தமும்
பொருணிலை திரிந்த பொருளா நந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பா நந்தமும்
நடைபெறு புலவர் நாட்டின ரவையே"

என்றாராகலின்,

அவற்றுள், எழுத்தாநந்தம் வருமாறு :

நேரிசை வெண்பா

"ஆழி இழைப்பப் பகல்போம் இரவெல்லாந்
தோழி துணையாத் துயர்தீரும்—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வென்னுஞ்
செறுமாலை சென்றடைந்த போது."

இதனுள், 'திரையவோஒ' என்று இயற்பெயரைச் சார்ந்து அளபெழுந்தமையால், எழுத்தாநந்தம்.

என்னை,

"இயற்பெயர் சார்த்தி யெழுந்தள பெழினே
யியற்பா டில்லா எழுத்தா நந்தம்"

என்றாராகலின்.

சொல்லாநந்தம் வருமாறு :

### நேரிசை வெண்பா

"என்னிற் பொலிந்த திவள்முக மென்றெண்ணித்
தன்னிற்குறைபடுப்பான் தண்மதியம்—மின்னி
விரிந்திலங்கு வெண்குடைச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கு வேலி னெழும்."

இதனுள், தலைமகன்மேல் 'எரிந்து' என்னுஞ் சொற் புணர்த்தமையால், சொல்லாநந்தம்.

என்னை,

"இயற்பெயர் மருங்கின் மங்கலம் அழியத்
தொழிற்சொற் புணர்ப்பினது சொல்லா நந்தம்"

என்றாராகலின்,

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

### நேரிசை வெண்பா

"இந்திரனே போலும் இளஞ்சாத்தன் சாத்தற்கு
மந்தரமே போன்றிலங்கு மல்லாகம்—மந்தரத்தில்
தாழருவி போன்றுளது கார்மாலை அம்மாலை
ஏழுலகு நாறும் இணர்"

இதனுள், சாத்தன் என்னுங் கீழ்மகனை அரசரை உவமித்தாற்போல உவமித்தமையால், இறப்ப உயர்ந்த ஆநந்த உவமை.

### நேரிசை வெண்பா

"வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழாம்
எள்ளி இரிந்தாற்போல் எவ்வழியும்—வள்ளற்கு
மாலார் கடலன்ன மண்பரந்த வாட்டானை
மேலாரு மேலார் விரைந்து."

இதனுட், புலியினோ டுவமிக்கப்படுகின்ற தலைமகனுமைய வீரனோடு நாயை உவமித்தமையால், இறப்ப இழிந்த ஆநந்த உவமை.

என்னை,

"இறப்ப இழிந்தநும் இறப்ப உயர்ந்ததும்
அறத்தகை வழீஇய ஆநந்த உவமை"

என்றாராகலின்.

அலங்காரக் குற்றமாவது :

நேரிசை வெண்பா

“வெண்டிங்கள் போன்றிலங்கும் வெண்சங்கு சங்கனைய
வண்டிலங்கு தாழை வளர்தோடு—விண்டெங்கும்
கள்ளாவி நாறுங் கருங்கழிசூழ் கானகத்தெம்
உள்ளாவி வாட்டு மரு.”

இதனுள், வெண்டிங்கள்போலுஞ் சங்கு; சங்கு போலும் தாழைப்பூ என்று உவமைக்குவமை சொன்னமை யால், ‘அடுத்துவர லுவமை’ என்னும் அலங்காரக் குற்றம்.

என்னை,

“உவமைக் குவமை யில்லென மொழிப”

என்றாராகலின்.

இனி எல்லாக் குற்றமுந் தீர்ந்த செய்யுள் வருமாறு :

நேரிசையா சிரியப்பா

*“தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த செஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்று லுலகே.”

ஒழிபியல் செய்யுட்களின் முதனினைப்புக் காரிகை

சீரோடு விட்டிசை மாஞ்சீ ரியற்றளை சேர்ந்தருகி
வாரடர் கோங்கை வருக்கஞ் சுருங்கிற்ற வான்பொருளுஞ்
சீரிய தூங்சேந் தகேச்சு் சிறந்த எழுத்துமன்றே
ஆகும் ஒழிபியற் பாட்டின் முதல்நினைப் பாகுமன்றே. (ருக)

ஒழிபியல் முற்றம்.

யாப்பருங்கலக்காரிகை குணசாகரர் உரையுடன்

முற்றம்

---

* குறுந்தொகை, கடவுள் வாழ்த்து.

## பிற்சேர்க்கை

பிற்காலத்தே பயின்று வழங்கும் கட்டளைக்கலிப்பா, கட்டளைக்கலித்துறை என்னும் செய்யுட்களுக்கு இந்நூலில் இலக்கணம் கூறப்பட்டில வாதலின், அவற்றின் இலக்கணத்தை ஈண்டுத் தருதும்.

### கட்டளைக் கலிப்பா

"மாச்சீர் முன்வரு நாற்சீ ரடியே
நேர்முதல் நிரைமுதல் நிரனிறை யானே
பதினொ ரெழுத்தும் பன்னி ரெழுத்தும்
இயைந்தரை யடியாய் நடந்தஃ திரட்டித்
தொத்துநான் கிறுவது கட்டளைக் கலிப்பா."

முதற்சீர் மாச்சீரும பின் மூன்று சீரும் கூடியது அரையடியும், அவ்வாறே பின்வரும் நான்கு சீர் கூடியது அரையடியும் ஆக அமைந்த எண்சீரடி நான்குடைத்தாய், முதலசை நேரசையாயின் அரையடிக் கெழுத்துப் பதினொன்றும், நிரையசையாயின் பன்னிரண்டும் பெற்று ஏகாரத்தான் முடிவது கட்டளைக்கலிப்பா. இஃது எழுத்தளவைப் பெறுதலாற் கட்டளைக்கலிப்பா எனப்பட்டது. முதற்சீர் மாச்சீரும் ஏனை மூன்றும் கூவிளச் சீருமாக வருவது பெரும்பான்மை "மாஞ்சீர் கலியுட்புகா" என்ற இலக்கணம் இதற்கு விலக்கு.

### உதாரணம்

"இல்லை யென்ப திலையோர் மருங்கிலே
யெவ்வ றங்களு முண்டோர் மருங்கிலே
கொல்லுகின்ற தெழுதருங் கூற்றமே
கூறுமாற்ற மெழுதருங் கூற்றமே
வில்லு மேற்றிடு நாணும்பொன் னுகமே
விடுகணைக் குண்டு நாணும்பொன் னுகமே
மல்லன் மார்பின் மணிமுத்த மென்பதே
வாச மையர்க் கவிமுத்த மென்பதே"

"படுத்த பாயுட னேபிணி மூழ்கினும்
பல்விழுந்து நரைத்தற மூப்பினும்
அடுத்த திங்கிவர்க் கேபெரு வாழ்வெனும்
அப்பெ ரும்பதி யெப்பதி யென்பிரேல்

விடுத்து விட்டிந் திரதிரு வும்புவி
வெண்கு டைக்குள் இடுமர சாட்சியும்
கடுத்த தும்புக ளத்தரைத் தேடுவார்
காத லித்துவ ருந்திருக் காசியே''

—காசிக் கலம்பகம்

## கட்டளைக் கலித்துறை

''அடியடி தோறு மைஞ்சி ராகி
முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்
கடையொரு சீரும் விளங்காய் ஆகி
நேர்பதி னாறே நிரைபதி னேழென்
றோதினர் கலித்துறை யோரடிக் கெழுத்தே.''

ஐஞ்சீரடி நான்காய், ஒவ்வோர் அடியினும் முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாமல் இருக்க, இறுதிச்சீர் கூவிளங்காய், கருவிளங்காய் என்பனவற்றுள் ஒன்றாகப் பெற்று, முதற்சீரின் முதலசை நேர் ஆயின் ஓரடிக்கெழுத்துப் பதினாறும், நிரையாயின் பதினேழும் உடைத்தாய், ஏகாரத்தான் முடிவது கட்டளைக் கலித்துறையாகும். இஃதும் எழுத்தளவைப பெறுதலாற் போந்த பெயர். கோவைக்கலித்துறை, திலகக்கலித்துறை என்பன இதன் வேறு பெயர்கள். அப்பர் திருவிருத்தமும், நம்மாழ்வார் திருவிருத்தமும் இக்கலித்துறையான் அமைந்தன வாகலின் இதற்கு விருத்தம் என்னும் பெயரும் உண்மை புலனாகின்றது.

''அற்றாரைத் தாங்கிய வைவே லசதி யணிவரைமேல்
முற்றா முகிழ்முலை யெவ்வாறு சென்றனள் முத்தமிழ்நூல்
கற்றார் பிரிவுங்கல் லாதா ரிணக்கமுங் கைப்பொருளொன்
றற்றா ரிளமையும் போலக் கொதிக்கும் அருஞ்சுரமே.''

—அசதிக்கோவை.

''கரும்புஞ் சுரும்பும் அரும்பும் பொருபடைக் காமர்வில்வேள்
இரும்புங் கரைந்துரு கச்செய்யு மாலிறும் பூதிதன்றே
விரும்பும் பெரும்புலி யூரெம்பி ரானருள் மேவிலொரு
துரும்பும் படைத்தழிக் கும்அகிலாண்டத் தொகுதியையே.''

—சிதம்பரச் செய்யுட்கோவை.

———

